


ரூ. 1.40







# மெய்யடியார்கள்

ஆசிரியர் டாக்டர் T. M. P. மஹாதேவன்









M. Meyyappan. 10-2

# மெய்யடியார்கள்




ஆசிரியர் :

டாக்டர் T. M. P. மகாதேவன்,

தத்துவப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்.

தமிழாக்கம் :

டாக்டர் V. A. தேவசேனபதி,

ரீடர், தத்துவ இலாகா, சென்னைப் பல்கலைக் கழகம்.



ஜெமினி பிரசுரம்

3/18, எல்லையம்மன் காலனி :: சென்னை-6

TAMIL
FIRST EDITION, 5000 Copies
AUGUST 1959.

# MEY ADIYARGAL

(Lives of Saints)

BY

Dr. T. M. P. MAHADEVAN

Translated by

Dr. V. A. DEVASENAPATHY

Price Rs. 1-40

Published under the auspices of
The Southern Languages Book Trust, Madras.
TAMIL 53



Bharatham Press, T' Nagar, Madras-17

# அணிந்துரை

டாக்டர் ஏ. எல். முதலியார்
துணைவேந்தர், சென்னைப் பல்கலைக் கழகம்

தென்னிந்திய மொழிகள் புத்தக டிரஸ்டு, தன்னுடைய முன் அனுபவங்களாலும், பொது மக்களைக் கவர்வனவாயும் அதனோடு அவர்களுக்கு நற்பயன் அளிப்பனவாயும் உள்ள நூல்களை வெளியிட்டதால் பெற்ற அறிவின் திறத்தாலும், இரண்டாம் வரிசை நூல்களை வெளியிடத் தலைப்பட்டுள்ளது. அவற்றைத் திராவிட மொழிகள் அனைத்திலும் ஆக்கி அளிக்கவும் அது கருதுகின்றது. இந்த நூல்களெல்லாம் மிக்க கவனத்தோடும், படிப்பவர்களின் பலதிறப்பட்ட சுவைகளுக்கு ஏற்பவும் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளன. வாழ்க்கையின் பலவகைக் கூறுபாடுகளையும் பற்றிய பலபல பொருள்கள் அடங்கிய நூல்களை வெளியிட இந்தப் புத்தக டிரஸ்டு இயற்கையாகவே ஈடுபடத் தொடங்கியுள்ளது. இந்தியப் பெருந்தலைவர்களுள் சிலருடைய வாழ்க்கை வரலாறுகளையும் அவர்கள் சாதித்தவைகளையும் விரித்துரைப்பதற்கென ஒரு பகுதியும் இதில் தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. நாட்டின் நலன்களில் அக்கறைகொண்டு, மக்களின் அடிப்படை உரிமைகளுக்காகப் போராடவும், நாட்டின் மதிப்பையும் செல்வாக்கையும் வலுப்படுத்தவும் அரும்பணி ஆற்றிய இப்பெருந்தலைவர்களுக்குத் தாங்கள் எவ்வளவு கடமைப் பட்டவர்கள் என்பதை வருங்கால மக்கள் அறிந்து கொள்வது நல்லது.

தத்துவம், சமயம், விஞ்ஞானம், பேரிலக்கியங்கள், பொருளாதாரம் என்பனவும் இவ்வரிசையில் இடம் பெற்றுள்ளன. சிறு கதைகளுக்கும் பண்டைய கலைகளைப் பொதுமக்களிடையே பரப்புவதற்கும் இதில் இடம் வகுக்கப்

பட்டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்வது நலமாகும். நடன நாடகக் கலைகள், சிற்ப சாஸ்திரங்கள், தொல்பொருள் ஆராய்ச்சியில் கண்டறிந்த உண்மைகள், என்றென்றும் வியத்தகு பொருள்களாய் விளங்கும் தென்னிந்தியப் பெருங் கோயில்களின் வரலாற்றுக் குறிப்புக்கள் ஆகியவையும் இதில் சேர்க்கப்பெற்றுள்ளன. இப்போது வெளியிடப்பெறும் இந்த நூல் வரிசை படிப்பவர்க்குச் சுவையூட்டும் பல்வேறு வகைப் பட்ட பொருள்களை வழங்கும் என்பது என் துணிபு. பொது முறைக் கல்விக்குரிய பொருள்களைக் கொண்ட இத்தகைய வெளியீடுகள் மேன்மேலும் பெருகும் பெருந்தொகையினராக வாசகர்களைக் கவர்ந்து கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

இந்த நூல் வெளியீட்டுத் திட்டத்தில் தென்னிந்திய மொழி நூல்களுள் ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மொழி பெயர்க்கும் அம்சம், பாராட்டுந் தகுதியுடையதாகும். இவ் வரிசை முற்றுப் பெற்றதும், எழுதப் படிக்க மட்டும் தெரிந்த ஏராளமான மக்களைத் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொள்ள உண்மையான ஆர்வம் கொள்ளும்படி செய்து, அவர்களைப் பழக்கமாகப் படித்துவரும் தொகையினருடன் இணைத்து இவற்றால் அவர்கள் தாங்களாகவே மிக்க திறம் உடையவர் களாவதற்கு இவைகள் உறுதுணை ஆகும் என்பது என் துணிபு. தென்னிந்திய மொழிகளின் புத்தக டிரஸ்டு எந்த உயரிய நோக்கங்களோடு தொடங்கப்பெற்றதோ அந்நோக் கங்கள் அஃது ஆற்றிவரும் அரும்பணியால் மேன்மேலும் நிறைவேறிவரும் என்று நான் நம்புகிறேன்.

ஏ. எல். முதலியார்,
துணை வேந்தர்.

## நூன்முகம்

மெய்யடியார்களைப்பற்றி எழுதுவது எளிதல்ல. நல்லன யாவுமே அரிதானவை, சிரமமானவை; அரிதாகவும் சிரமமாகவும் இருக்கின்றன என்பதற்காக நல்லதைத் தேடுவதைவிட்டும் விலகிச் சென்றுவிடக்கூடாது. அற்பமானவைகளை அடைவதைவிட உன்னதமான ஒன்றை அடைவதற்கு முயன்று தோல்வியடைவது மேலானது. நம்மில் பெரும்பாலோர், பெருமளவு நேரத்தைப் பயனற்றவைகளில் செலவிடுகிறோம், அவை அப்படிப்பட்டவை என்பதை அறியாமலே. இவைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு, மெய்யடியார்களின் நித்திய நிலையை அடைய முயலும்போது மாத்திரந்தான் நாம் மெய்யாகவே வாழ்வைத் தொடங்குகிறோம். மெய்யடியார்களின் வாழ்க்கையைப்பற்றியும் அவர்களுடைய அறிவுரைகளைப்பற்றியும் சிந்திப்பது, நமது சொந்த வாழ்க்கையை உயர்த்துவதற்கும், வீடு பெறுவதற்கும், சக்திவாய்ந்த சாதனமாகும். இந்த நோக்கத்திற்கு இந்நூல் ஓர் எளிய முயற்சி.

முன்னுரையில் மெய்யடிமைத்திறம், மெய்யடிமைத்தனம் ஆகியவற்றின் சாராம்சம் தரப்பட்டிருக்கிறது. இவைகளை மெய்யடியார்களின் அமைப்பு பற்றிய தெரிநிலையாகத்தான் கருதவேண்டுமேயல்லாது முடிவானதாகக் கொள்ளக்கூடாது. இந்த அமைப்பு எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் குறிப்பிடத்தக்க அளவுக்கு ஒரே மாதிரியாகத்தானிருக்கிறது. பின்னர், பத்து இந்திய மெய்யடியார்களின் வாழ்க்கை வரலாறுகள் தொடர்கின்றன. ஏன் இவர்கள் மட்டும் சேர்க்கப்பட

வேண்டும், மற்றவர்கள் ஏன் சேர்க்கப்படவில்லை என்பதற்கு இடவசதியும், ஆசிரியருக்கு இவர்களுடனுள்ள நெருங்கிய தொடர்புமே தவிர வேறெவ்விதக் காரணமுமில்லை. ஒருவரைத்தவிர மற்றவர்கள் எல்லோரும் தென்னகத்தில் பிறந்தவர்கள். ஆனால், இவர்களில் ஒருவருக்குமே சொந்த ஊர் ஒன்று இருந்ததாகக் கூறமுடியாது. ஏனென்றால், இவர்கள் ஒவ்வொருவரும் மனிதவர்க்கம் முழுவதுக்குமே உரியவர்கள். இவர்களுடைய எழுத்துக்களிலிருந்தும், மறந்துபோகவிடாமல் காப்பாற்றப்பட்டிருக்கும் பொன்மொழிகளிலிருந்தும் சேகரிக்கப்பட்ட இவர்களின் அறிவுரைகளும் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன. மனித இனத்தின் ஆத்மீக விற்பன்னர்களை—மெய்யடியார்களை மிகவும் நெருங்கி ஆராயவும், விரிவாக விளங்கிக்கொள்ளவும் இதன் வாசகர்களிடம் ஒரு வேட்கையை உண்டு பண்ணுவதற்கு இந்நூல் உதவும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சென்னை. —T. M. P. மகாதேவன்.
ஜூன் 12, 1959

# பொருளடக்கம்

# மெய்யடியார்கள்

## அவர்கள் வாழ்க்கை வரலாறும் அவர்கள் தந்த அறிவுரைகளும்

**முன்னுரை :**

மெய்யடியார்கள் எல்லா நாடுகளிலும் தோன்றியுள்ளனர் என்பது உண்மையாயினும் வரலாற்றுக் காலந் தொட்டே, ஏன் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டே, அவர்களுள் பெரும்பாலோர் இந்தியாவிலிருந்திருக்கின்றனர். சிந்து சமவெளி நாகரிகத்தைச் சேர்ந்த புதைபொருள்களில் தியான நிலையிலுள்ள ஓர் ஆண் உருவம் கண்டு பிடிக்கப்பட்டது. இது சிவனுடைய உருவமாகக் கருதப்படுகிறது. தேவ மந்திரங்களை யியற்றியவர்கள் பொருள்களின் அக உண்மையை யறியக் கூடிய ஆற்றல் படைத்த தீர்க்கதரிசிகளும் கவிகளுமாவர். அவர்கள் என்றும் உள்ளதைப் பார்த்திருப்போர் என்ற உண்மையைக் குறிப்பிடுவதற்காக ரிஷிகள், கவிகள் என்ற பெயர்கள் அவர்களுக்கு வழங்கலாயின. மிக உயர்ந்த உண்மைகளைக் கற்பித்தவர்களாக உபநிஷதங்களில் கூறப் பெறும் யாக்ஞவல்கியர், உத்தாலகர் போன்றவர்கள் அனைவருமே மெய்யடியார்களாக இருந்திருக்க வேண்டும். மெய்யடிமைத் திறமற்றவையனைத்தும் மெய்யடிமைத் திறத்தால் வெல்லப்படும் என்ற ஒரே மையக் கருத்தைத்தான் இதிகாசங்களும் புராணங்களும் வற்புறுத்துகின்றன. நல்லவர்களைக் காப்பதற்காகவும் (பரித்ராணாய சாதூனாம்) தீயவர்களை யொறுப்பதற்காகவும் (வினாசாய சதுஷ்கிருதாம்) இறைவன் உலகத்தில் அவதரிக்கின்றார் என்று அவதாரத்தைப் பற்றிய உண்மையை ஸ்ரீகிருஷ்ணன் பகவத்கீதையில் விளக்கியுள்ளார். இந்தியாவில் தத்துவ ஆராய்ச்சியும் சமயமும் பிரிவுறாமல் இணைந்தே செல்வதால் சிறந்த தத்துவ ஞானிகள் அனைவருமே மெய்யடியார்களாக இருந்திருக்கின்றனர்.

பல்வேறு தத்துவக் கொள்கைகளாக உள்ளனவற்றை முதலில் முறைப்படுத்தி யமைத்தவர்களுக்குச் சூத்ரதாரர் என்ற பெயருண்டு. இவர்கள் ரிஷிகளாவர். நையாயிகர்கள் என்ற தார்க்கிகர்களும் மனிதனுடைய ஆன்மீயப் பண்புகளை வளர்க்க வேண்டுவதின் இன்றியமையாமையை வற்புறுத்தினர். ஆசாரியர்களான சங்கரர், இராமாநுஜர், மத்துவர் போன்றவர்கள் மெய்யறிவாளர்களாயிருந்ததோடு மெய்யடியார்களுமாவர். பௌத்த, சமணசமயங்கள் போன்ற நாத்திக தரிசனங்கள் ஒவ்வொன்றிலும் வழிவழியாக மெய்யடியார்கள் இருந்திருக்கின்றனர். தரிசன காலத்திற்குப்பின் நாட்டின் பலபகுதிகளிலும் ஏற்பட்ட பக்தி இயக்கங்களை முன்னின்று நடத்திய சிறந்த அடியார்கள் பேரறிஞர்களாகவுமிருந்தனர். சமூகச் சீர்திருத்தத்திற்கு வேண்டிய உள் ஆர்வமும் அவ்வப்போது மெய்யடிமைத் திறத்தில் பிறந்திருக்கிறது. வித்தியாரண்யரையும் இராமதாசரையும் போன்ற அடியார்கள் அரசியல் துறையிலும் தொண்டுபுரிந்துள்ளனர். அயலவர் ஆட்சியினின்றும் இந்தியா விடுதலை பெறுவதற்குப் பெருந்தலைவரொருவரின் மெய்யடிமைத்திறம் காரணமாயிருந்தது என்பது நன்கு தெரிந்ததே. வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும் வாழையடி வாழையாக மெய்யடியார்கள் இருந்து வந்திருக்கின்றனர் என்பது உலகவரலாற்றிலேயே இந்தியாவுக்கு மட்டுமுள்ள தனிச் சிறப்பாகும்.

மெய்யடிமைத் திறத்திற்கு இனம், கொள்கை, ஆண், பெண், சமூகநிலை என்ற வேறுபாடுகள் கிடையா. குறுகிய நோக்கங்களைக் கடந்து நிற்பவரே மெய்யடியாராவர். எதிர்பாராத இடங்களிலும் மிகத் தாழ்ந்த குடிகளிலும் மெய்யடியார்கள் தோன்றியுள்ளனர். செல்வர்களுள் இவர்கள் தோன்றுவதென்பது அரிதாக நிகழ்வதாயினும் அவர்களுள்ளும் தோன்றியுள்ளனர். பொதுவாகக் கூறுமிடத்து, இடைக்காலங்களில் பெண்களின் உரிமை வரவரக் கட்டுப்பாடுகளுக்குள்ளாயிற்று. எனினும், எந்தக் கட்டுப்பாடும் இந்தியப் பெண்களுக்குள் மெய்யடியார்கள் தோன்றுவதைத் தடுக்கக்கூடவில்லை. மெய்யடியார்களில் பெண்களாயிருந்

தவர் இறைவனைப் பின்பற்றுவதற்கு எந்தத் தியாகத்தையும் பெரிதென மதிக்கவில்லை. பிறவகைகளில் வலிவற்றவர்களுக்கும் மெய்யடிமைத்திறம் தனிப்பட்ட வலிவைத் தந்துளது. இறைவனுடைய ஆற்றலுக் குட்பட்டவர்கள் உலகியல் மரபுகளைப் பெரிதெனக் கருதுவதில்லை. மிகச் சிறந்த அடியார்களைக் குறித்து நாரதர் தமது பக்தி சூத்திரத்தில் பின்வருமாறு கூறுகிறார்: "தழுதழுத்த குரலுடனும் மெய்சிலிர்ப்போடும் கண்களில் நீர் பெருகவும் அவர்கள் தம்முள் உரையாடுவர். தாங்கள் பிறந்த குடிகளையும் உலகத்தையும் அவர்கள் தூய்மையுறச் செய்கின்றனர். புனிதமான இடங்களைப் புனிதமாக்குகின்றனர். செயல்களை நலமும் செம்மையுமுறச் செய்கின்றனர். சாத்திரங்களுக்கு வலிவூட்டுகின்றனர்" (68-69) "பிறப்பு, கல்வி, அழகு, குடி, செல்வம், தொழில் போன்றவற்றால் ஏற்படும் உயர்வு தாழ்வுகள் அவர்களுக்குள் கிடையா." (72) தலைசிறந்த சைவ அடியார்களுள் ஒருவரான திருநாவுக்கரசர் பின்வருமாறு பாடுகிறார்:

"சங்க நிதிபதுமநிதி இரண்டுந்தந்து
தரணியொடு வானாளத்தருவரேனும்
மங்கு வாரவர் செல்வம் மதிப்போமல்லோம்
மாதேவர்க் கேகாந்தரல் லராகில்
அங்கமெல்லாங் குறைந்தழுகும் தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கன் பராகில்
அவர் கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே"

உண்மையில், இறைவனைக் காணும் நற்பேறு பெற்றவர்கள் உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமை பாராட்டுவதில்லை. "கல்வியும் வினயமும் நன்கு கற்ற பிராமணனிடத்திலும் பசுவினிடத்தும் யானையினிடத்தும் நாயினிடத்தும் நாயைத் தின்னும் புலையனிடத்தும் பண்டிதர் சமப்பார்வையுடையோர்" என்று பகவத்கீதை கூறுகிறது. மெய்யடியார்கள் உண்மையாகவே உலகக் குடிகள். உலகமக்கள் அனைவருக்

குமே அவர்கள் உரியவராவர். அவர்களுக்குக் குறுகிய பற்று யாதும் கிடையாது.

சமயாசாரியர்கள் என்றும் சந்தானசாரியர்களென்றும் சில வேளைகளில் பிரித்துப் பேசப்படுகிறது. ஆனால், இது ஒரு சிறு வேற்றுமையை வலியுறுத்துவதற்காகச் செய்யப்பெறும் பாகுபாடு. தெளிவாக இத்தகைய் பாகுபாடு காணப்பெறும் தென்னாட்டுச் சைவத்தைப் பார்ப்போம். சமயாசாரியராகக் கருதப்படும் திருஞானசம்பந்தர் வாழ்க்கை பற்றிய மெய் யுணர்வுக் கொள்கை உடையவரே. சந்தானசாரியர்களுள் முதல்வரான மெய்கண்டார் சிறந்த மெய்யடியாருமாவர். இப்பாகுபாட்டைப் போலவே மெய்யடியார்கள் (Saints) என்றும், மெய்யறிவார்கள் (Sages) என்றும் பிரித்துப் பேசப் படுகிறது. மெய்ப்பொருளைக் காணும் முயற்சியில் மெய்யடி யாரின் போக்கு மிகுதியாக உணர்ச்சிவயப் பட்டதாகவும் மெய்யறிவாரின் போக்கு மிகுதியாக அறிவுவயப்பட்டதா கவும் உளதென்பர். ஆனால், இப்பாகுபாடும் முழுவதும் பொருந்துவதன்று. இந்தியாவில் மெய்யடியார்கள் மெய் யறிவு வாய்ந்தவரா யிருந்திருக்கின்றனர்; மெய்யறிவார்கள் அடியார்களாகவு மிருந்திருக்கின்றனர். எடுத்துக்காட்டாக, மெய்யடியாரான இர்ராமகிருஷ்ணர் மெய்யறிவாராயும் மெய்யறிவாரான இரமணர் மெய்யடியாராகவு மிருந்தனர் என்பதை ஒருவரும் மறுக்க மாட்டார்கள். பக்தர்கள் என்றும் ஞானிகள் என்றும் சிலர் வேறுபடுத்திப் பேசுகின் றார்கள் என்பது உண்மைதான். ஆனால், உண்மையான பக்தர் செலுத்தும் அன்பு அறிவோடு தொடர்பற்ற வெறும் உணர்ச்சியன்று. ஞானியின் மெய்யறிவும் உயர்ந்த உணர்ச்சி யோடு இணைந்து செல்லாத அறிவின் தொழிற்பாடன்று. தத்துவக் கொள்கைகள் சிலவற்றுள், ஞானம், பக்தி ஆகிய இருநெறிகளுள் யாதாயினும் ஒன்று சற்று மிகுதியாக வற்புறுத்தப் பட்டிருக்கலாம். எனினும், இரண்டும் வேண்டற்பாலன என்பதை அவை அனைத்தும் ஒப்புக்கொள் கின்றன. ஞானிகள் பக்தர்கள் என்பவரோடு ராஜயோகிகள் கர்மயோகிகள் ஆகியவர்களையும் உடன்வைத்து எண்ண

வேண்டும். பதஞ்சலியின் யோக சூத்திரத்தில் கூறப்பட்டிருக்கிற பழைய யோக நெறியைப் பின்பற்றுவோர் ராஜ யோகிகளாவர். உள ஒருமைப் பாட்டினுலும் தியானத்தாலும் மனத்தை முழுவதும் அடக்கிச் சிந்தனையற்றுப் போகும்படி செய்து ஆன்மாவும் மனமும் ஒன்றெனத் தவருக நினைப்பதைத் தடுப்பதே யோகநெறியின் நோக்கம். ஆன்மா தனித்திருப்பது அல்லது கைவல்யம் என்பதே பதஞ்சலி யோகத்தின் குறிக்கோளாகும். பற்றற்ற செயல் முறையைப் பின்பற்றுவோர் கர்மயோகிகள் எனப்படுவர். தனக்கென எதையும் விரும்பாமல் அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்கின்றனர். செயல்களையும் அவற்றின் விளைவுகளையும் காணிக்கையாகக் கடவுளுக்குச் செலுத்தி விடுவதால் என்ன நடந்தாலும் அவர்கள் கவலைப்படுவதில்லை; இதனால் அவர்களுடைய அகங்காரம் தேய்ந்து மனம் தூய்மை யுறுகிறது. அவர்கள் வாழ்க்கை தன்னலமற்ற தொண்டாகிறது. இவ்வாருக மெய்யடியார் (Saint) என்ற சொல், சுகமுனிவரைப் போன்ற ஞானிகளையும், நாரதரைப் போன்ற பக்தர்களையும், விசுவாமித்திரரைப் போன்ற ராஜயோகிகளையும், ஜனகரைப் போன்ற கர்மயோகிகளையும், சுருங்கக் கூறின், பலதிறப்பட்ட ஆன்மீயப் பெருஞ் செல்வர்களைக் குறிப்பதாகும். இவர்கள் ஒன்றையொன்று விலக்கும் இனத்தினரல்லர். ஞானியான சுகமுனிவர் மெய்யடியாருமாவர். மெய்யடியாரான நாரதர் மெய்யறிவினராயு மிருந்தார். விசுவாமித்திரரும் ஜனகரும் இத்தகையவரே. இவர்களனைவரிடத்துமே மெய்யறிவு, மெய்யன்பு, தன்னடக்கம், தொண்டுணர்ச்சி காணப்பெற்றன.

அற்புதங்கள் அல்லது அருஞ்செயல்கள் செய்வோரே மெய்யடியார்கள் என்று பொதுமக்கள் எண்ணுகின்றனர். இயற்கைக்கு மேற்பட்ட ஆற்றல் காட்டுவதை மெய்யடியாருக்கு அடையாளமாகக் கொள்கின்றனர். சில அடியார்களிடத்தில் இத்தகைய ஆற்றல் காணப்படுகின்றது என்பது உண்மைதான். ஆயினும் விலக்கில்லாமல் அடியார்கள் அனைவருமே இத்தகைய ஆற்றலுக்கு மதிப்பொன்றும் தருவதில்லை.

சித்து விளையாட்டு ஆன்மீய வாழ்விற்கு அடையாளமன்று. சித்திகள் அல்லது இயற்கைக்கு மேற்பட்ட ஆற்றல்கள் ஆன்மீய முன்னேற்றத்திற்குத் தடையாகவுமிருக்கின்றன. இத்தகைய ஆற்றல்களால் மயங்கிவிடக்கூடாதென்று பேரா சான்கள் அனைவரும் சாதகர்களை எச்சரிக்கின்றனர்.

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம்புலிவாயையுங்
கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாங்
கட் செவி எடுத்தாட்டலாம்
வெந்தழலின் இரதம் வைத்தைந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
விண்ணவரை ஏவல்கொளலாஞ்
சந்ததமும் இளமையோடிருக்கலாம் மற்றொரு
சரீரத்தினும் புகுதலாஞ்
சலமேல் நடக்கலாங் கனல் மேலிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறமரிது சித்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவானதெய்வமே
தேசோமயானந்தமே"

என்ற தாயுமானவரின் பாடல் நாம் அடிக்கடி கேட்டதொன்றாகும்.

இதைப்போன்ற கருத்தையே காஷ்மீரத்தைச் சேர்ந்த அடியாரான லல்லேஸ்வரி என்ற பெண்மணி பின்வருமாறு வெளியிடுகிறார் :

"யோகியே! தீயைக் குளிர்விப்பதேன்? வெள்ளத்தைத் தடுப்பதேன்?
தலைகீழாய் நடப்பதேன்?

எருதைக் கறப்பதேன்? மந்திரம் செய்வதேன்?
செப்படிக்காரனின் கீழ்த்தரச் செயல்களைச்
செய்வதேன்?"

அடியார்களைப் பற்றிய வேறொரு தவறான எண்ணமும் உண்டு. அதாவது, அவர்கள் சமூகத்திற்கு உதவும் மனப் பான்மையில்லாத தனிப்போக்கில் தலைசிறந்தவர், பொது மக்களின் வேறானவர், வாழ்க்கையின் கடுமையை உணராத வர், கிறுக்குப்பிடித்தவர், என்பதாம். எனினும், உண்மையில், மக்களுக்குத் தொண்டுசெய்வதில் ஈடுபாடும் உரமான பொது அறிவும் உடையவர்களாக அடியார்களிருக்கக் காண்கிறோம். "எதனை ஒருவன் தியானத்தால் உட்கொள்ளுகிறானோ அதனை அன்பாக வழங்கவேண்டும்" என்று எக்கார்ட் (Eckhart) என்பவர் கூறுகிறார். மெய்யடியார்களின் நற்பண்புகளில் இரக்க உணர்வே தலையாயது. உலகப் பொருள்களை வாரி வழங்குவதில் ஊதாரிகள் என்று சொல்லக் கூடிய அளவிற்கு அவர்கள் தாராள மனப் பான்மை யுடையவர்களாயிருக் கின்றனர். அவர்கள் மேற்சட்டையை யாராவது எடுத்தால் தங்கள் மேற்போர்வையையும் அவர்கள் கொடுத்து விடுவார் கள். சமூகத் தொண்டாற்றுவதற்கு ஏற்ற கருவிகளாகத் தங்களைச் செய்யும்படி அடியார்கள் இறைவனைப் பல்காலும் வேண்டிக் கொள்கின்றனர். ஏனெனில், கடவுள் கோயிலி லும் தூய இடத்திலுமட்டுமிருப்பவரல்லர், கற்களையுடைத் துப் பாதை அமைத்து உழைக்கும் உழைப்பாளியிடமும் அவர் இருப்பவர் என்ற உண்மையை அவர்கள் உணர்ந்திருக்கின் றனர். தெரஸா அம்மையார் (St. Theresa of Arika) "கடவுள் பானைகள் சட்டிகள் இவற்றின் இடையிலும் உலவுகிறார்" என்று கூறுகிறார். அடியார்களின் இரக்க உணர்வு மக்களி னத்திற்கு மட்டும் உரியது என்று கட்டுப்படுவதன்று. அது அனைத்தாம் உயிர்களிடத்தும் பரந்து செல்வதாகும். ஒரு பசுவை யடித்தபோது அடித் தழும்புகள் பஹினுபாய், துக்கா ராம் என்ற இருவர் முதுகிலும் காணப்பட்டன. அடியார்கள் உயிரற்ற பொருள்களையும் கடவுளின் உயிர்ப்பும் தன்மையும்

பெற்றனவாகக் காண்கின்றனர். தீர்க்கதரிசியும் கவியுமான பாரதி தம் கவியொன்றில் காக்கை குருவிகளோடு மட்டுமின்றிக் கடல்கள் மலைகள் ஆகியவற்ருேடும் உறவுகொண்டாடுகிருர்.

மெய்யடியார்கள் செய்வது உலகியல் முறை, சமூகத் தொண்டன்று. இறைவன் படைத்த உயிர்களிடத்தும் அவன் தோற்றங்களிலும் அவனைக்கண்டு அவனுக்குச் செய்யும் தொண்டாகும். உலகம் கடவுள் மயமானதென்ற உறுதியில் இத்தொண்டு பிறக்கிறது. மெய்யடியார்களின் வாழ்க்கைக்கு மையமாக உள்ளது கடவுள். மெய்யடியார்கள் வாழ்வதும் (நிலைபெற்று நிற்பதும்) இயங்குவதும் (இருப்புக் கொள்வதும்) கடவுளிடத்திலாகும். அவர்கள் ஈடுபாடு முழுவதும் கடவுளிடத்தில்தான். இவ்வுண்மை அடியார்கள் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் காணப்படுவதாகும். இறைவனைத் தனிப்பட்ட உருவில் கொள்ளாத அடியார்களும் எல்லா உயிர்களிடத்தும் அதே இறைவனைத்தான் காண்கிருர்கள். உலகத்திற்கும் மக்களுக்கும் தொண்டு செய்வதில் தம் வாழ்க்கையைக் கழிக்க அடியார்களை ஊக்குவிப்பது இறைவனிடத்து இவர்கள் கொண்டுள்ள அன்பு அல்லது பரம்பொருள் காட்சியாகும். மெய்யடியாரின் நெஞ்சு முழுவதும் இறை அன்பும் நிறைந்திருப்பதால் அங்கே பகைக்கு இடமில்லை. சூபி சமயத்தைச் சேர்ந்த மெய்யடியாரான ரபி அம்மையாரை, "நீங்கள் கடவுளிடம் அன்பு கொண்டுள்ளீர்களா?" என்று ஒருமுறை கேட்டபோது அவர்கள் தயங்காமல் "ஆம்" என்று சொன்ஞர்கள். "நீங்கள் சாத்தானை வெறுக்கிறீர்களா?" என்ற கேள்விக்கு முன்போலவே தயங்காமல், அவர்கள், "இல்லை. கடவுளிடம் நான்கொண்டுள்ள அன்பு சாத்தானை வெறுப்பதற்கு இடம் தரவில்லை. கடவுளிடம் நான் கொண்டுள்ள அன்பு என்னை முழுவதும் பற்றிக் கொண்டிருப்பதால் அவரைத்தவிர வேறு எவரிடமும் அன்புகொள்ளவோ, வெறுக்கவோ இடமில்லை." என்று பதில் சொன்ஞர்கள்.

மெய்யடியாரின் கடவுள் காதல் தவருகப் பித்தாகக் கருதப்படுகிறது. எடுத்துக் காட்டாக உலக அன்னையிடம்

இராமகிருஷ்ணர் கொண்டிருந்த பேரன்பு இவ்வாறு தவருக் நினைக்கப்பட்டது. வீட்டிலுள்ள பெரியோர்கள் அவருக்குத் திருமணம் செய்தால் இப் பித்தம் தெளியும் என்று நினைத் தார்கள். ஆனால், திருமணத்திற்குப் பிறகு இப் பித்தம் ஒரு சிறிதும் குறையவில்லை. அதற்குமாருக, மிகுதியாகி அவரை முழுவதும் பற்றிக்கொண்டது. ஏட்டறிவுக் கல்வியுடையவர் கள் மெய்யடியார்களை மனித இயற்கைக்கு மாறுபட்டவர்கள் என்றும் பித்தர்கள் என்றும் கருதுகிருர்கள். மெய்யடியார்களை உள்ளக் கோளாறுகளை ஆராயும் உளநூலுக்குப் பொருளாகக் கொள்வது மெய்யடிமைத் திறத்தையும் உளநூலின் குறை பாடுகளையும் உணராததால் நிகழ்வதாகும். மெய்யடியார்க ளாக இருப்பது பித்து நிலை என்று கொள்ளப்படுமானுல், பித்தாக இருப்பதேமேல் என்றுதான் முடிவுசெய்யவேண்டும்.

மெய்யடியார்கள் முழு உண்மையை உணர்ந்த உள்ளுணர் வினர்; குறுகிய பற்றுதல்கள் அற்றவர், வேதங்கள் இவர் களைப் பற்றி "உண்மையைப் பற்றி கேட்ட கவிகள் (கவய: சத்யச்ருத:) உண்மையே அவர்களுடைய உறைவிடம் (சதனம் ரிதஸ்ய); உண்மையானது, சரியானது, பரந்தது இவற்றையே அவர்கள் பார்க்கிருர்கள்; (சத்யம், ரிதம் ப்ருஹத்) அவர்கள் கண்டுபிடித்தது உண்மைநெறி (ரிதஸ்ய பந்தா)," என்று பேசுகின்றன. மெய்யடியார்கள் நெஞ்சில் உறையும் எல்லா விருப்பங்களினின்றும் விடுபட்டு நன்மை தீமை என்ற இருமையை நீக்கி, மாசற்றவராய் (முண்ட கோபநிஷத், III, 1, 3) பரம் பொருளோடு இரண்டறக் கலந்து இறவா நிலை எய்தியவர் என்று உபநிடதங்கள் கூறு கின்றன. இதே உண்மையை எதிர்மறையாக, "தீயொழுக் கத்தினின்றும் விலகாதவன், அமைதியுருதவன், ஒன்றி நினைக் கமுடியாதவன் மனத்தை அமைதியுறச் செய்யாதவன் அறி விஞல் பரம்பொருளையடைய முடியாது." என்று கடோப நிஷத்(11, 24) கூறுகிறது.

பிரம்மநிலை எய்திய மெய்யடியாரைப் பற்றிப் பகவத் கீதையில் சில இடங்களில் காணலாகும். மெய்யடியாரைக் குறிப்பிடும் பல தொடர்களில் பின்வருவனவற்றைப் பார்க்

கலாம்: ஸ்திதப் பிரஜ்னன் (உறுதிகொண்ட உணர்வுடையவன்), குணாதீதன் (பிராகிருத இயற்கையை ஏற்படுத்தும் குணங்களைக் கடந்து நின்றவன்), பக்தன், யோகி (மனத்தை நன்ருகக் கட்டுப் படுத்தியவன்), பிரம்மபூதன் (பிரமமாகி விட்டவன்)

மெய்யுணர்வில் நிலைபெற்ற அடியார்கள் (ஸ்திதப்ரஜ்ஞனர்) மனத்தில் எழும் எல்லா விருப்பங்களையும் நீக்கி ஆன்மாவில் முழு நிறைவு எய்துகிருர்கள்; அவர்கள் துன்பத்தால் வாடுவதும் இன்பத்தால் மகிழ்வதுமில்லை. காமம், வெறுப்பு அச்சம் போன்ற வலிய உணர்ச்சிகளற்றவர். புலன்களையும் மனத்தையும்கட்டுப்படுத்தியவர். ஆன்மாவில் விழித்துள்ளவர்; வேட்கைகள் அற்றவர்; தன்முனைப் பற்றவர்; இந்நிலையே பிரம்ம நிலை. இதை எய்தியோர் மயங்குவதில்லை. (II, 55). மெய்யடியார் முக்குணங்களையும் கடந்து நின்ருேராவர் (குணாதீதர்) செயற்படும்போது குணங்களை வெறுப்பதும் செயலற்றபோது அவர்களை விரும்புவதும் இல்லை. தொழிற்படுவது குணங்களே, தாமல்ல வென்று நன்குணர்ந்து அவற்ருல் கலக்கமுருமல் அமைதியாக இருக்கிருர்கள். ஆகையால் அவர்கள் துன்பத்திலும் இன்பத்திலும் ஒரே நிலையிலிருக்கிருர்கள். மண்ணும், ஓடும் அவர்களுக்கு ஒன்றே. வேண்டுவதென்றும் வேண்டாததென்றும் வேற்றுமை கிடையாது. பழிப்பும், புகழும் ஒன்றே. மானமும் அவமானமும் ஒன்றே. இவ்வாறே நண்பனும் பகைவனும்: நாம் செய்கிருேம் என்ற தன்முனைப்புக் கிடையாது இறைவனிடம் எப்போதும் ஈடுபட்டு நிகழ்ச்சிகளால் ஏற்படும் மாறுதல்களால் தாக்குருதவர். (XIV, 22-ம் அதன்பின் வருவனவும்) உண்மையான பக்தன் யாரையும் வெறுப்பதில்லை. எல்லோரிடமும் நட்பும் இரக்கமும் கொண்டுள்ளவர் 'நான்', 'எனது' என்ற நினைப்பற்றவர். இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்ருக மதிப்பவர். அஞ்சாமையும் பொறுமையும் உடையவர். கட்டுக்கடங்கிய மனம், தன்னடக்கம், உறுதியான நம்பிக்கை இவற்றுடன் எப்போதும் நிறைவுற்றவர். வாழ்க்கையை இறைவனிடத்தில் ஈடுபடுத்தியவர். உலகம் அவர்களைத் துன்புறுத்துவதில்லை. உலகத்தை

அவர்கள் துன்புறுத்துவதில்லை; மகிழ்ச்சி, பொறுமையின்மை, அச்சம், கலக்கம் ஆகியவற்றினின்றும் விடுதலை பெற்றவர். எதற்காகவும் நம்பிக்கை வைத்திருப்பதில்லை தூயவர். எப்போதும் விழித்திருப்பவர் நடுநிலைமையாளர். நடுக்க மற்றவர். தன்னலத்தோடு எதற்காகவும் முயலுவதில்லை. வாளாயிருப்பவர். எந்தநிலையிலும் அமைதி காண்பவர். தமக்கென இருக்கையற்றவர். எதையும் சரியாக மதிப்பிடக் கூடியவர். அவர்களுடைய ஒரே குறிக்கோள் கடவுள் தான். (XII, 13, அதன்பின் வருவனவும்) சமநிலை எய்தப் பெற்ற மனமுடையோரே யோகியராவர். யோகியர் அல்லது யோக யுக்தர்களுக்குத் திருந்திய இயற்கையும் கட்டுப்பாடு உடைய மனமும் புலன்களும் உண்டு. எல்லா உயிர்களுக்கும் தாம் ஆன்மா என்ற நிலை எய்தியிருப்பதால், அவர்கள் தொழில் செய்தாலும் அதனுல் மாசுறுவதில்லை (V, 7) அவர்கள் எங்கும் பரம் பொருளேயே காண்கிறுர்கள். எவற்றிலும் பரம் பொருளையும் பரம் பொருளில் எவற்றையும் காண்கிறுர்கள் (VI, 29) இப்படிப்பட்டவர்களே பிரமத்தையடைகிறுர்கள் (V, 6) இறைவனை அல்லது பிரமத்தை யடைந்தவரே மெய்யடியாராவர்.

தமது இராமசரிதமானசத்தில் இராமதாசர் அடியார்களைப்பற்றி ஸ்ரீ இராமர் கூறுவதாகப் பின்வரும் விளக்கம் தருகிறுர்: மெய்யடியார்கள் புலன் இன்பத்தை விரும்புவதில்லை; இனிய தன்மையும் எல்லா அறங்களும் உருவெடுத்தாற் போன்றவர். பிறர் துன்பத்தைக் கண்டு வருந்துவார்கள். பிறர் மகிழத் தாம் இன்புறுவர். சமநிலையுடைய மனத்தினராய் எவரையும் தம் பகைவர்களாகக் கருதாதவர். வீண்பெருமை, வலிய உணர்ச்சிகள் இவையின்றிப் பேராசை, தன்னலம் கலந்த மகிழ்ச்சி, அச்சம் இவற்றை வென்றவர்கள் இளகிய நெஞ்சம் உடையவர், துன்புறுவோரிடம் இரக்கங் கொண்டவர், எண்ணம், உரை, செயல் மூன்றிலும் என்னிடம் முழு ஈடுபாடுடையவர். எல்லோருக்கும் பெருமைதந்து தாம் அடக்கமாயிருப்பவர்கள்.''

"மற்றும், உண்மையான அடியார்கள் என்போர் எக்காலத்திலாயினும் சரி, கலக்கமின்மை, கரவின்மை, நட்பு, தெய்வீகக் குறிக்கோள்களில் ஈடுபாடு போன்ற சிறந்த பண்புகளுக்கு உறைவிடமான நெஞ்சுடையோராவர். மனத்தையும் புலன்களையும் கட்டுப்பாட்டினின்றும் ஒரு சிறிதும் நழுவவிடுவதில்லை. சமயஒழுக்கங்களில் வழுக்காதிருந்து குற்றமற்ற நடத்தையுடையவர்களான அவர்கள் ஒருபோதும் கடுஞ்சொல் பேசுவதில்லை. பழிப்பையும் புகழையும் சமமாகக் கருதி என் தாமரைத் தாள்களையே தங்கள் முழு உடைமையாகக் கருதும் இத்தகைய மெய்யடியார்களே என் உயிரனையர்."

இந்நூலில் காணப்பெறும் அடியார்களின் வாழ்க்கைகளிலும் அறிவுரைகளிலும், மெய்யடிமைத் திறத்தின் எல்லாக் கூறுகளும் அமைந்துள்ளன. காலத்தாலும் இடத்தாலும் அவர்கள் பிரிவுற்றிருந்தாலும் பரம்பொருள் ஒன்றே என்பதற்கு அவர்கள் அனைவரும் சான்றாக உள்ளனர். எல்லா உயிர்களுக்கும் உள்ள ஆன்மீய ஒருமைப் பாட்டினைக் கண்டுபிடித்த மெய்யடியார்கள் அனைவருமே செய்த சிறந்த சாதனையாகும். இவ்வுண்மையைத்தான் எல்லா அடியார்களும் எடுத்தோதுகிறார்கள். "அநுபூதிமான்கள் கூறுவன என்றும் ஒப்ப முடிந்தனவாக உள்ளன. குறை காண்பவர்கள் இதை உன்னிப் பார்க்கவேண்டும். இதனால் முதல்தர அநுபூதி நூல்களுக்கு அவைதோன்றிய காலம் அல்லது இடம் என ஒன்றுமில்லை. இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள ஒருமைப் பாட்டை இடைவிடாது கூறுவதால், அவர்கள் பேச்சு மொழிகளுக்கு முற்பட்டவையாகி மூவாதிருக்கின்றன." என்று வில்லியம் ஜேம்ஸ் என்பவர் கூறுகிறார்.

---

The Varieties of Religious Experience P. 419.

# திருஞான சம்பந்தர்

மெய்யடியார் களுள்ளும் கருவிலே திருவுடைய குழந்தையடியார்களைக் காண்பதரிது. இறையன்பும் கடவுள் காட்சியும் பொதுவாக அனுபவ முதிர்ச்சி ஏற்பட்ட பிறகே வருவன. பரம் பொருளான கடவுள் காலங் கடந்தவரெனினும் அவரையடைவதற்குக் காலம் வேண்டப் படுவதாகிறது. தட்டுத்தடுமாறிச் செல்லும் முறையைக் கையாளுவதாலும் செல்லும் நெறி அருமைப்பாடு வாய்ந்ததாகையாலும் பெரும்பாலோருக்கு நீண்டகாலம் வேண்டப்படுகிறது. இதற்குப் புறநடையாகச் சிலர் ஒரே வீச்சில் நேராகக் குறிபார்த்து எய்வதையும் காண்கிறோம். ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தென்னாட்டுச் சைவசமயா சாரியார் நால்வருள் ஒருவரான திருஞானசம்பந்தர் வாழ்க்கையில் இத்தகைய அரிய நிகழ்ச்சி ஏற்பட்டது.

முதலாம் இராஜராஜ சோழன் காலத்தில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி தென்னாட்டுச் சைவ சமயநூல்களைப் பன்னிரண்டு திருமுறைகளாகத் தொகுத்தார். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் சுந்தரர் ஆகிய மூவர் பாடிய தேவாரம் முதல் ஏழு திருமுறையாகும். இவற்றுள் முதல் மூன்று திருமுறை திருஞானசம்பந்தர் பாடியவையாகும். பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறையாக அமைந்துள்ளது. இதைப் பாடியவர் அனபாய சோழ மன்னனின் (கி. பி. 1063–1112)அமைச்சரான சேக்கிழாராகும். இவருக்கு அருள்மொழித்தேவரென்ற வேறொரு பெயரும் உண்டு. பெரியபுராணத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்கள் அல்லது அடியார்களின் வாழ்க்கை கூறப்பட்டுள்ளது. திருஞானசம்பந்தர் வரலாறு இரண்டாங்காண்டம் ஆறாவது சருக்கத்தில் காணலாகும். சைவ அடியார்களுக்கு வணக்கம் செலுத்தும் சுந்தரர் திருஞானசம்பந்தரை 'எம்பிரான் சம்பந்தன்' என்று குறிப்பிடுகிறார். சுந்தரருடைய திருத்-

தொண்டத் தொகையை யடிப்படையாகக் கொண்டு நம்பி யாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியிலும் இத்தகைய குறிப்பொன்றுளது.

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்துக்கருகில் உள்ள பிரமபுரம் என்னும் சீர்காழியில் திருஞான சம்பந்தர் பிறந்தார். இவர் தகப்பனுர் சிவபாதஹ்ருதயரும், தாயார் பகவதியாரும் பக்தியிற் சிறந்த சைவப் பிராமணர்கள். சிவனை வழிபடுவதிலும் அடியார்களுக்குத் தொண்டு செய்வதிலும் பற்றுடையவர்கள். இவர்கள் நீண்டகாலமாகச் செய்த தவத்தின் பயனுகச் சம்பந்தர் பிறந்தார். சம்பந்தருடைய மூன்ரும் ஆண்டில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. இது முதல் அவருடைய அடியார் வாழ்க்கை தொடங்குகிறது. பிரமதீர்த்தம் என்ற திருக்குளத்தில் குளிப்பதற்காகச் சென்ற சிவபாத ஹ்ருதயர் தம்மகனையும் உடனழைத்துச் சென்ருர். குழந்தையைக் குளக்கரையில் விட்டுவிட்டுத் தண்ணீரில் இறங்கி மூழ்கினுர். தகப்பனுரைக் காணுத சம்பந்தர் கோபுரத்தைப் பார்த்தவண்ணம், 'அம்மே, அப்பா' என்று அழத் தொடங்கினுர். அழுகுரலைக் கேட்ட சிவன் உமையோடு எழுந்தருளி உமையைக் குழந்தைக்குப் பாலூட்டச் சொன்னுர். உமையம்மை பொற்கிண்ணத்தில் தம்பாலைக் கறந்தளித்தார். அதைப் பருகிய குழந்தைக்குத் தெய்வீக ஞானம் பிறத்தது. சற்று நேரத்தில் குளித்தெழுந்த தந்தை தம் மகன் வாயில் பால் சொட்டுவதைப் பார்த்தார். தெரியாத யாரோ பால் கொத்ததால் குழந்தைக்கு எச்சில் பட்டது என்று நினைத்துக் குழந்தையை ய்டிப்பதற்காகக் கோலை ஓங்கியபோது குழந்தை கோயில் பக்கமாக வானத்தைக் காட்டி அர்த்த நாரீஸ்வர உருவத்தில் இறைவன் தன்னை ஆட் கொண்டதாகப் பாடத் தொடங்கியது. இறைவனைப் பார்க்கவேண்டிய தகுதியில்லாததால் தந்தை கண்ணுக்கு இறைவன் தெரியவில்லை. எனினும் இறைவனருளால் தம் குழந்தை மெய்யடிமைத்திறம் எய்தியது என்ற உறுதி அவருக்கு ஏற்பட்டது. குழந்தையுடன் கோயிலுக்குள் சென்ருர். அதற்குள் இச்செய்தி பரவ, மக்கள் கூட்ட

ளாக் கூடிக் குழந்தையுடன் கோயிலுக்குள் சென்றார்கள். தொடங்கிய பாட்டைக் குழந்தை தொடர்ந்துபாடி கோயிலில் முதல் பதிகத்தை முடித்தது. கோயிலுக்கு வெளியே வரும்போது குழந்தையைத் தந்தை தம் தோள்மீது எடுத்து வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

திருஞான சம்பந்தர் வாழ்க்கையில் இதுமுதல் இடைவிடாத இறைபணி நிகழ்ந்து வந்தது. அவருடைய பெயரே மூன்று வயதில் அவர் பெற்ற ஆன்மீய மெய்யுணர்வைக் குறிப்பதாக உளது. தெய்வீக ஞானத்தோடு தொடர்புடையவர் என்பது இதன் பொருள். இறைவனால் ஆட்கொளப்பட்ட மகன் என்ற பொருளுடைய ஆளுடைய பிள்ளையார் என்ற பெயரும் சம்பந்தருக்கு உண்டு. தகப்பனார் உடன்வர, இறைவன் புகழைப் பாடிக்கொண்டு தமிழ் நாட்டிலுள்ள பல சிவஸ்தலங்களுக்குச் சென்றார். அவர் எங்குச் சென்றாலும் அற்புதங்கள் நிகழ்ந்தன. அற்புதங்களைத் தம் ஆற்றலினால் நிகழ்ந்தனவாகக் கருதாமல் சம்பந்தர் அவற்றை இறையருளின் குறிகளாகக் கொண்டார். இறைவன் திருஞானசம்பந்தருக்கு அருள்புரிந்து அவர்வழியாக உண்மைச் சமயம் மக்கள் உள்ளத்தில் வேரூன்றச் செய்தார்.

தம் மெல்லிய கைகளால் தாளம் போட்டு இறைவன் புகழைப் பாடிக்கொண்டு சம்பந்தர் சிவஸ்தலங்களுக்குச் சென்றார். தாளம் போட்டுப் பாடுவதற்காகத் திருவைந்தெழுத்துப் பொறிக்கப் பெற்ற பொற்றாளங்களைத் திருக்கோலக்காவில் இறைவன் சம்பந்தருக்கு அளித்தார். அருகிலுள்ள சிவஸ்தலங்களுக்கு முதல் முறையாகப் புறப்படுவதற்கு முன்னரே திருநீலகண்டயாழ்ப்பாணர் என்ற பாணர் சம்பந்தருடன் சேர்ந்து செல்லவும் அவர் பாக்களை யாழில் வாசிக்கவும் முன்வந்தார். சிதம்பரத்தில் இள அடியாரான சம்பந்தர் இறைவனருளால் தில்லை மூவாயிரவரைச் சிவகணங்களாகத் தோற்றமளிக்கக் கண்டார். முதலில் தலயாத்திரைகள் செய்தபோது சம்பந்தர் நடந்தாவது தம் தகப்பனார் தோள்மீதமர்ந்தாவது சென்றார். திருநெல்வாயில் அறத்துறை யென்ற இடத்தில் இறைவன் சம்பந்தருக்குக்

குடை, சங்கு போன்றவற்றோடு முத்துச் சிவிகையளித்தார். இந் நிகழ்ச்சி ஞானசம்பந்தர் சமயாசாரியர் நிலை எய்தினார் என்பதைக் குறித்தது. இதுமுதல் இறைவனுடைய புகழை யும் பெருமையையும் பாடிக்கொண்டு சம்பந்தர் பவனி சென்றார். சண்டேசுவர நாயனார் வாழ்ந்த புகழ்பெற்ற இடம் திருச்சேய்ஞலூர் என்பதாகும். இத்தலத்தை யடைந்து சம்பந்தர் சண்டேசுவரரின் புகழையும் அவர் தொண்டின் திறத்தையும் சிறப்பித்தும் பாடினார். வழியி லுள்ள பிற தலங்களில் சில காலம் தங்கித் தம் தகப்பனா ருடனும் பிற அடியார் களுடனும் சீர்காழிக்கு மீண்டார். சீர்காழியில் அவர் தாயாரும் நகரமக்களும் அவரை வரவேற்று மகிழ்ந்தனர்.

உரிய காலத்தில் சம்பந்தருக்கு உபநயனம் செய்யப் பட்டது. திருமறைக் கல்வித் தொடக்கம் சம்பந்தருக்கு வேண்டுவதின்று என்பது உண்மையே. ஏனெனில், திருமறை களைப் பயிலுவதால் ஏற்படும் உணர்வை அவர் ஏற்கனவே அடைந்திருந்தார். உபநயனச் சடங்கிற்கு வந்திருந்த அறிஞர் களும் வேள்வி செய்வோரும் இளம் பிள்ளையான சம்பந்த ருடைய முற்பாடான அறிவையும் உணர்வையும் கண்டு வியந்தனர். சம்பந்தருக்குத் திருமுறைகளைப் புகட்ட வந்த அவர்கள் அவரிடமிருந்து திருமறைகளைப் பற்றிய விளக் கங்கள் பெற்றார்கள்.

சமயாசாரியர் நால்வருள் மற்றொருவரான திருநாவுக்கர சர் என்ற அப்பரைச் சந்தித்தது சம்பந்தர் வாழ்க்கையில் மிக உருக்கமான நிகழ்ச்சிகளுள் ஒன்றாகும். சீர்காழியைச் சேர்ந்த குழந்தை அடியாரைப் பற்றி அப்பர் கேள்வியுற்றிருந் தார். அவரைப் பார்ப்பதற்காகச் சீர்காழிக்குச் சென்றார். பெரிய அடியார் வருவதைக் கேள்வியுற்ற சம்பந்தர் அவரைச் சந்திப்பதற்காக விரைந்துசென்றார். இருவரும் அளவளாவி னர். ஒருவரையொருவர் பெரிதும் விரும்பினர். சிவதலங்கள் பலவற்றிற்கு இருவரும் சேர்ந்து சென்றனர். இவர்கள் சென்ற இடங்களிலிருந்த அன்பர்கள் இவர்களைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தார்கள், பெரு நன்மை பெற்றார்கள்.

மீண்டும் தலயாத்திரை செய்யத் தொடங்கிய சம்பந்தர் தம் தகப்பனுர் உடன்வராமல் வீட்டிலேயே தங்கிவிடலாம் என்று சொன்னுர். ஆனுல், பின் தங்குவதற்குத் தகப்பனுர் உடன்படவில்லை. சம்பந்தர் அவரைத் தம்முடன் அழைத்துச் செல்லவேண்டியதாயிற்று. பல தலங்களுக்குச் சென்று பிறகு பாச்சிலாச்சிரமத்தை யடைந்தனர். தணிவில் பிணி தீர்த்த ஓர் அற்புதம் இங்கே நிகழ்ந்தது. கொல்லி மழவன் என்பவனுடைய மகள் முயலகன் பிணி என்ற நோயால் வருந்திஞள். அப் பிணியை எவ்வகையிலும் போக்க முடிய வில்லை. கொல்லிமழவன் சிவபெருமானிடம் அன்புகொண் டிருந்தமையால் தன் மகளைக் கோயிலுக்கு எடுத்துச் சென்று இறைவன் திருமுன்பு இட்டுவைத்தான். இந்நிலையில் சம்பந் தர் வருகின்ற செய்தி எட்டியது. சம்பந்தரிடம் சென்று தன் மகளைக் காக்கும்படி வேண்டிஞன். அவல நிலையிலிருந்த பெண்ணைக் கோயிலில் கண்ட சம்பந்தர் அவள் பிணியைத் தீர்க்கும்படி இறைவனை வேண்டி ஒரு பதிகம் பாடிஞர். உடனே ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அப்பெண் நலமுற்ருள்.

பிறகு, சம்பந்தர் கொங்கு நாட்டிற்குச் சென்ருர். அப்போது குளிர்காலம். ஒருவகையான குளிர் காய்ச்சல் மக்களை வாட்டிக்கொண்டிருந்தது. இதையறிந்த சம்பந்தர் ஒருபதிகம் பாடிஞர். அதன் முதல் பாட்டு வருமாறு:

"அவ்வினைக் கிவ்வினையா மென்று சொல்லும்
அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே
கைவினைச் செய்து எம் பிரானடி போற்றுதும்
நாமடியோம்
செய்வினை வந்தெமைத்தீண்டப் பெருதிரு
நீலகண்டம்."

இது முதல் அத் தீய பிணி கொங்குநாட்டை விட்டகன் றது. பின்னர் தெற்கேயுள்ள தலங்கள் பலவற்றிற்குச் சென்ருர். அவர் திருப்பட்டீச்சரத்தை யடைந்தபோது வெம்மைமிக்க வேனிற்காலமாயிருந்தது. வெப்பந்தவிர்ப்ப

தற்கு இறைவனருளால் முத்துப்பந்தர் கிடைத்தது. சம்பந்தர் நிழலில் செல்வதற்காக அடியார்கள் இப்பந்தரைத் தூக்கிச் சென்றனர்.

இதுவரை சம்பந்தருடன் தலயாத்திரை செய்து கொண்டிருந்த சிவபாதஹ்ருதயர் சீர்காழிக்கு மீண்டும் ஒரு வேள்வி செய்ய உளங்கொண்டார். ஆனால், தம் விருப்பம் நிறைவேறுவதற்கு வேண்டிய பொருளை யாரிடம் பெறுவது? இந்நிலையில் சம்பந்தர் கோயிலுக்குச் சென்று,

"இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உன்கழல் தொழுதெழுவேன்,"

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார். பூதம் ஒன்று பசும்பொன் ஆயிரக்கிழி கொணர்ந்துதர அதை வேள்வி செய்வதற்காகத் தம் தகப்பனாரிடம் தந்தார்.

வேறுபல அற்புதங்களும் நிகழ்ந்தன. அரவுகடித்து இறந்த வணிக இளைஞனைச் சம்பந்தர் உயிர் பெற்றெழச் செய்தார். திருவீழிமிழலையில் பஞ்சம் மிகுந்திருந்தபோது அப்பரும் சம்பந்தருடனிருந்தார். பஞ்சத்தால் வாட்டமுறுவோருக்கு உதவுவதற்காக இறைவன் இருவருக்கும் நாள்தோறும் கோயிலில் படிக்காசு கொடுத்தார். மழை பெய்து வளம் சுரக்கும் வரையில் இவ்வற்புதம் நிகழ்ந்துவந்தது. திருமறைக்காட்டில் கோயில் கதவு எப்போதும் அடைபட்டுக் கிடந்தது. சம்பந்தர் வேண்டுகோளின்படி அப்பர் கதவுதிறக்க ஒரு பதிகம் பாடினார். பிறகு அப்பர் வேண்டிக்கொள்ள சம்பந்தர் ஒருபதிகம் பாடிக் கதவை மீண்டும் அடைப்பித்தார்.

இந்நிகழ்ச்சிகள் நடந்தகாலத்தில் சம்பந்தர் வேறுசில அடியார்களையும் சந்தித்தார். திருநல்லாற்றில் திருநீலநக்கர் சம்பந்தரை வரவேற்று விருந்தோம்பினார். சிறுத்தொண்டர் வேண்டிக்கொள்ள, திருச்செங்காட்டிற்குச் சென்று கணபதீச்வரத்தில் பதிகம் பாடினார். திருப்புகலூரில் முருகநாயனார் இவரை வரவேற்று மகிழ்ந்தார்.

சம்பந்தர் வாழ்க்கையில் முதன்மை வாய்ந்த நிகழ்ச்சி பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரைக்கு அவர் சென்றதாகும். இந்நிகழ்ச்சி சைவத்தை நிலைநாட்ட வேண்டும் என்று அவர் தம் வாழ்க்கையில் மேற்கொண்டிருந்த நோக்கத்தை நிறைவேறச் செய்தது. மதுரையில் அக்காலத்தில் சமணர்கள் மிக்க செல்வாக்குடனிருந்தார்கள். கூன் பாண்டியன் என்ற பாண்டியனைத் தம் சமயத்தையேற்றுக் கொள்ளும்படிச் சமணர்கள் செய்திருந்தனர். மன்னன் சென்ற வழியில் குடிமக்கள் பலரும் சென்றனர். மன்னனின் மனைவியான மங்கையர்க்கரசியாரும் அமைச்சரான குலச்சிறையாரும் சைவசமயத்தை விடாது கடைப்பிடித்து மதுரையில் மீண்டும் சைவம் தழைக்கவேண்டுமென்று இறைவனை வணங்கிவந்தனர். சம்பந்தருடைய அருஞ்செயல்களையும் அவர் பாடிய பதிகங்களையும் பற்றிக் கேள்வியுற்ற அவர்கள் வேதாரண்யம் என்ற திருமறைக் காட்டில் அப்பருடன் தங்கியிருந்த சம்பந்தருக்குத் தூதுவர்களையனுப்பினர். சம்பந்தர் மதுரைக்குச் சென்று சைவத்தை மீண்டும் நிலைநாட்டவேண்டுமென்ற வேண்டுகோளைத் தூதுவர் தெரியப்படுத்தினர். ஆண்டில் இளையவரான சம்பந்தருக்குச் சமணர்கள் தீங்கு செய்யக்கூடும் என்று அன்பின் காரணமாக அப்பர் அவர் செல்வதைத் தடுத்தார். சம்பந்தர் செல்லவேண்டுமென்று உறுதியாயிருக்க அப்பர் நாளும் கோளும் நன்றாக இல்லை என்று மீண்டும் தடுத்தார். இறைவனருளிருந்தால் கெடுதி ஒன்றும் ஏற்படாது என்று சம்பந்தர் அப்பருக்கு நினைவூட்டினார். இந்தச் சமயத்தில் தான் சம்பந்தர் கோளறுபதிகம் என்ற புகழ்பெற்ற பதிகத்தைப் பாடியருளினார். அதன் முதல் பாட்டு வருமாறு :

“ வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமேலணிந்துஎன்
உளமேபுகுந்த அதனால்

"ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே."

மதுரைக்குத் தாம் முன்னர்ப் போவதாக அப்பர் கூற, அவரைச் சோழநாட்டிலேயே இருக்கும்படி வேண்டிக் கொண்டு தாம் மேற்கொண்ட பணியை நிறைவேற்றுவதற் காகச் சம்பந்தர் மதுரைக்குச் சென்றார்.

சம்பந்தர் தம் அடியார்களுடன் மதுரையை யணுகும் போது அமைச்சர் அவரை வரவேற்றுக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். சம்பந்தர் வரவுக்காக மங்கையர்க் கரசியார் கோயிலில் காத்திருந்தார். இறைவனைப் பாடி வணங்கி மங்கையர்க்கரசியாருக்கு ஆறுதல் மொழி கூறி அடியார்களுடன் தங்குவதற்காக ஏற்பாடு செய்யப்பட் டிருந்த திருமடத்திற்குச் சென்றார். சம்பந்தர் வரவைப் பற்றி யறிந்த சமணர்கள் பாண்டியனுக்குச் செய்தியறிவித்து அவனை விழிப்பாக இருக்கச் சொன்னார்கள். மேலும், தங்கள் மந்திர சக்தியால் சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைப்பதாகவும் மன்னனிடம் கூறினர். ஆனால் எவ்வளவோ முயன்றும் மந்திரத்தால் மடத்திற்குத் தீவைக்க முடியவில்லை. ஆகையால் நெருப்பைக்கொண்டு தீவைத்தனர். அடியார்கள் தீயையணைத்துவிட்டு நிகழ்ந்ததைச் சம்பந்தரிடம் கூறினர். சம்பந்தர், 'அமணர் கொளுவுஞ்சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே' என்று இறைவனைப் பாடி வணங்கினார். இறைவன் திருவருட்படி வெப்புநோய் மன்னனைப் பற்றிக் கொண்டது. அரசியும் அமைச்சரும் மன்னனிடம் விரைந்து சென்றனர். மருத்துவர்களை வரவழைத்தனர். நோயைத் தீர்ப்பதற்கான எல்லா முறைகளும் கையாளப்பட்டன. வெப்பு தீர்வதாயில்லை. சமண முனிவர்கள் தங்களுக்குத் தெரிந்த முறைகளைக் கையாண்டனர். மயிற்பீலிகொண்டு மன்னன் உடல்மீது வீசினர்; குண்டிகைநீர் தெளித்தனர். வெப்பு மிகுதியாயிற்று. துன்பத்தை யாற்றாது மன்னன் சினங்கொண்டு அவர்களைப் போய்விடச் சொன்னான்.

இந்தச் சமயத்தில் அரசியும் அமைச்சரும் சம்பந்தர் தாம் நோயைப் போக்கவல்லவர், அவரை யழைத்தல் வேண்டும் என்ற தம் உறுதியான நம்பிக்கையை மன்னனிடம் தெரிவித்து அவனை யிணங்கச் செய்தனர். சம்பந்தர் பெயரைத் தன் காதால் கேட்டவுடனேயே மன்னன் சற்று நலமுறுவதாக உணர்ந்தான். அரசியும் அமைச்சரும் சம்பந்தரை யணுகி அவரை அரண்மனைக்கு அழைத்தனர். சம்பந்தர் கோயிலுக்கு முதல்சென்று இறையருளை வேண்டினார். பிறகு பிணியுற்ற மன்னனிடம் சென்றார். இதற்குள் சமண முனிவரும் அங்கே வந்தனர். சம்பந்தர் பிணியைத் தீர்க்கக்கூடும் என்பதையவர்கள் மறுத்தனர். முடிவாகச் சமணர்களும் சம்பந்தரும் முறையே மன்னனின் உடலின் இடத்தும் வலத்தும் உற்றபிணியைத் தீர்க்க உடன்பட்டனர். சமணர்கள் முதலில் முயன்றனர். இடப்புற வெப்பு மிகுதியாயிற்று. திருநீற்றின் பெருமையைக் கூறும் பதிகம்பாடி இறைவனை வணங்கி மன்னன் உடலின் வலப்புறத்தில் சம்பந்தர் திருநீறு பூசினார். வெப்பு வலப்புறத்தை நீங்கி இடப்புறம் சேர்ந்து தாங்கமுடியாததாயிற்று. சமணர்கள் தோற்றனர் என்று கூறி மன்னன் இடப்புறப் பிணியையும் தீர்க்குமாறு சம்பந்தரை வேண்டினான். சம்பந்தர் இறைவன் பெயரைக்கூறி இடப்புறமும் திருநீறு பூசினார். மன்னன் முழுநலம் அடைந்தான்.

இதன்பிறகும் இருவாதங்கள் நிகழ்ந்தன. ஒவ்வொன்றிற்கும் சமணர்களே கட்டுப்பாடுகள் ஏற்படுத்தினர். ஒன்று அனல்வாதம். தம் பதிகத்தில் ஒன்று எழுதப்பெற்ற ஏட்டைச் சம்பந்தர் நெருப்பிலிட்டார். சமணர்கள் தங்கள் கோட்பாடு எழுதப்பெற்ற பிறிதொரு ஏட்டை அதே நெருப்பிலிட்டனர். முன்னது பச்சையாக விளங்கப் பின்னது தீயிடைப் பஞ்செனை எரிந்துபோயிற்று. இதன்பிறகு புனல் வாதம் நிகழ்ந்தது. மெய்ப்பொருள் எழுதப்பெற்ற ஏடு ஓடு நீரில் இட்டால் எதிரேறிச் செல்லவேண்டுமென்பதே அடுத்து நிகழ்ந்த புனல்வாதம். சமணர்கள் ஓர் ஏட்டை வைகையாற்றில் விட்டனர். சம்பந்தர் தம் பதிகம் ஒன்று

எழுதி அதே நீரிலிட்டார். சமணர்களிட்ட ஏடு நீரோடு செல்ல இவரிட்ட ஏடு நீரை யெதிர்த்துச் சென்றது. இவர் அதனை ஓரிடத்தில் நிறுத்த, அது கரைக்கு எடுத்துவரப் பெற்றது. சைவம் முழுவெற்றி பெற்றது. குடி மக்கள் பலருடன் மன்னன் மீண்டும் சைவநெறியையே மேற் கொண்டான்.

சம்பந்தர் வெற்றிகரமாகத் தாம் மேற்கொண்ட பணி யைச் செய்து வருவதைப் பார்த்து மகிழ அவர் தகப்பனுர் சீர்காழியிலிருந்து மதுரைக்கு வந்து சேர்ந்தார். தெற்கே இராமேசுவரம் வரையில் சம்பந்தர் தம் அடியார்களுடன் சென்ருர். இந்த யாத்திரையின்போது ஓரிடத்தில் வெள் ளம் மிகுந்திருந்த ஆற்றைப் படகு ஓட்டுவாரின்றியும் தொண்டர்களனைவரையும் கடக்கச் செய்தார். வேருே ரிடத்தில் பௌத்த துறவிகளின் தலைவரை வாதில் வென்ருர். திருப்பூந் துருத்தியில் தம் வருகையை யறிவிக்காமல் ஒருவரு மறியாதபடி அப்பர் சிவிகை சுமப்போரோடு தாமும் சேர்ந்து கொண்டார். சம்பந்தருக்கு இது தெரிந்தவுடன் சிவிகையி னின்றும் இறங்கி அப்பரை வணங்க அவரும் எதிர்வணங்கி மதுரையில் சம்பந்தர் வெற்றிபெற்றதைப் பாராட்டினுர். சம்பந்தர் சீர்காழிக்கு மீண்டார். ஆனுல், அங்கே நீண்ட காலம் தங்கவில்லை.

சம்பந்தர் பிறகு தொண்டை மண்டலத்திற்குப் புறப்பட் டார். திருவண்ணுமலை உட்படப் பல தலங்களுக்குச் சென்று திருவோத்தூரை அடைந்தபோது அங்கே ஓர் அற் புதம் நிகழ்ந்தது. சிவனடியார் ஒருவருக்கிருந்த பனைமரங்க ளெல்லாம் ஆண் பனைகளாக இருக்க அங்கிருந்த சமணர்கள் அவர் வழிபடும் இறைவன் ஆற்றலற்றவன் என்று இழித் துரைத்தார்கள். இதைக் கேள்வியுற்ற சம்பந்தர் ஆண் பனைகள் காய்க்கவேண்டுமென்று இறைவனை வணங்கிப் பாட அவை உடனே காய்க்கத் தொடங்கின. வேறுசில இடங் களுக்குச் சென்றபின் சம்பந்தர் திருவாலங்காட்டையணுகி னுர். பெண் அடியாரான காரைக்காலம்மையார் தலையால் நடந்த இடமாதலால், அவ்விடத்தை மிதிக்க அஞ்சிப் புறமே

யிருந்து ஆலங்காட்டிறைவனைப்பாடி வணங்கினார். அங்கிருந்து திருக்காளத்தி சென்று கண்ணப்பரின் திருத்தொண்டினைச் சிறப்பித்துப் பாடி வணங்கினார். பின்னர் கிழக்கே திரும்பி சென்னைக் கருகிலுள்ள திருவொற்றியூரை யடைந்தார்.

மயிலாப்பூரில் சிவநேசர் என்ற வணிகர் இருந்தார். அவருக்குப் பூம்பாவை யென்ற ஒரு மகளுண்டு. சம்பந்தருடைய பெருமையைப்பற்றிக் கேள்வியுற்றிருந்த அவர் சம்பந்தரிடம் மிகுந்த பற்றுக்கொண்டு தம்மகளையவருக்குத் திருமணம் செய்விக்க உறுதிகொண்டிருந்தார். ஆனால், நல்லூழின்மையால் அந்தப் பெண்ணை ஒரு நாள் அரவு கடிக்க அவள் இறந்துவிட்டாள். சிவநேசர் கலங்கினார். ஆனால், நம்பிக்கையை யிழக்கவில்லை. மகள் உடலையெறித்து என்பையும் சாம்பரையும் ஒரு குடத்திலிட்டு வைத்தார். திருவொற்றியூருக்குச் சம்பந்தர் வருவதாகக் கேள்வியுற்று அங்குச் சென்று அவரை மயிலாப்பூருக்கு அழைத்தார். மயிலாப்பூரில் சம்பந்தருக்குச் சிறந்த வரவேற்பிருந்தது. பூம்பாவைக்கு நேர்ந்ததைப்பற்றி அவரிடம் தெரிவித்தனர். மயிலாப்பூர் கோயிலில் கபாலீஸ்வரரை வணங்கி வெளியே வந்து என்புகள் வைக்கப்பெற்றிருந்த குடத்தை யெடுத்து வரச் சொன்னார். சம்பந்தர் ஒருபதிகம் பாடினார். பூம்பாவை உயிர்பெற்றெழுந்தாள். அவளை மணம் செய்துகொள்ளச் சொல்லிச் சிவநேசர் சம்பந்தரை வேண்டினார். இறைவனருளால் தாம் அவளை மீண்டும் உயிர்பெற்றெழச் செய்ததால் தாம் அவளுக்குத் தகப்பன் நிலையிலிருப்பதாகச் சொல்லி மறுத்தார்.

மயிலாப்பூரிலிருந்து சம்பந்தர் தெற்கே சென்றார். சிதம்பரம் சேர்ந்தவுடன் அவரை அழைத்துச் செல்வதற்காகச் சீர்காழியிலிருந்து சிவபாதஹ்ருதயர் வந்தார். சம்பந்தருக்குத் திருமணம் செய்விக்கச் சீர்காழியில் ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. முதலில் சம்பந்தர் திருமணம் செய்துகொள்ள இசையவில்லை. பின்னர் இசைந்தார். திருநல்லூரைச் சேர்ந்த நம்பியாண்டார் நம்பி என்பவரின் மகளைத் தேர்ந்தெடுத்தார்கள். நன்னாளும் குறிப்

பிட்டார்கள். உரிய நேரத்தில் மணமகனும் பிறரும் திரு நல்லூருக்கு வந்து சேர்ந்தனர். திருமணச் சடங்குகள் நிறைவேறியவுடன் சம்பந்தர் மணமகளையும் பிறரையும் அழைத்துக்கொண்டு கோயிலுக்குள் சென்றார். ஒரு பதிகம் பாடி, "அம்மையப்பனே, உன் பாதநீழல் சேரும் பருவம் ஈது" என்று இறைவனை வேண்டினார். சிவபரஞ்சுடரிடம் செலுத்தும் முழுச்சுடர் ஒன்று தோன்றியது. திருமணத் திற்கு வந்திருந்தோர் அனைவரும் உடன்வரச் சம்பந்தர் ஒளியுள் புகுந்து மறைந்தார்—ஒளிமிக்க வாழ்க்கை ஒளியில் இனிது முடிந்தது!

சைவசித்தாந்தம் நால்வகைச் சமய நெறிகளைப்பற்றிப் பேசுகிறது: (1) சரியை—கோயிலை அலகிட்டு மெழுகுதல். இறைவழிபாட்டிற்காக 'மலர்கள் சேகரித்தல்போன்ற புற வழிபாடு. இது தாசமார்க்கம் எனப்படும். இது சாலோகம் தருவது. (2) கிரியை—தகப்பனுக்கு மகன் செய்வதைப் போன்ற அகத்தொண்டு. இது சத்புத்திர மார்க்கமெனப் படும். இது சாமீபம் தருவது. (3) யோகம்—ஒன்றி நினைத் தலும் அகவழிபாடும் நிகழ சகாமார்க்கம் எனப்படும் இந்நெறி சாரூபம் தருவது. (4) ஞானம்—முடிவான நன்மையைத் தருவது. இறைவனோடு இரண்டறக் கலத்தல். சமயா சாரியர் நால்வருள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நெறியை விளக்கியதாகக் கொள்வதுண்டு. சம்பந்தர் இவற்றுள் இரண்டாம் நெறியாகிய சத்புத்திர மார்க்கத்தை விளக் கியவர்.

முன்பு கூறியபடி, தென்னாட்டுச் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் முதல் மூன்று சம்பந்தர் பாடியவை யாகும். 383 பதிகங்கள் உள. தாம் வழிபட்ட கோயில்கள் இவற்றில் எழுந்தருளியுள்ள இறைவன், பொதுவாக நாட் டின் சிறப்பியல்புகள் இவைபற்றிச் சம்பந்தர் பாடுகிறார். ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற இறைவனுடைய ஐந்தொழில்களைப் புகழ்வதற்காகப் புரா ணக் கதைகளை யமைத்துப் பாடுகிறார். தனிப்பட்டவர்களுக் கும் பல இனத்தவருக்கும் அருள் செய்யவும் இறைவ

ஞனுடைய ஆற்றலையும் அருளையும் புலப்படுத்துவதற்காக அற்புதங்கள் செய்யவும், தீமையை யொழிக்கவும் நன்மையைக் காக்கவும், ஆன்மீய வாழ்வில் தொண்டர்கள் நிறைவெய்தவும் இறைவனை வேண்டுகிறார். குற்றம் செய்து திருந்தியபடி அல்லது தொலைவிலிருந்தபடி சம்பந்தர் பாடவில்லை. தகப்பனாரிடம் உரிமை கொண்டாடும் மகன்மை உணர்ச்சியோடு பாடுகிறார்.

# திருநாவுக்கரசர்

உண்மையான சமயமாற்றம் என்பது மேற்புறமாக ஒரு சமயத்தினின்றும் வேருெரு சமயத்திற்குச் செல்வதன்று. அது ஆன்மீய உயர்வை உண்டுபண்ணும் உளமாற்றமாகும். உண்மையாகவே இத்தகைய மாற்றம்தான் மெய்யடிமையல்லாத வாழ்க்கை வழிகளைமாற்றி மெய்யடிமைத் திறத்துக்குச் செலுத்தவல்லது. சில வேளைகளில் இது வாழ்க்கையில் மும்முரமான நெருக்கடியால்—உடல்பற்றிய நெருக்கடியாலுமிருக்கலாம்—ஏற்படலாம். இத்தகைய நிகழ்ச்சிகளில் கடவுளே குறுக்கிட்டுத் தாம் தொண்டராகக் கொள்ளப் போவோரை முதலில் மிக்க துன்பத்திற் காளாக்கிப் பிறகு காப்பாற்றுகிருர் என்று நம்பப்படுகிறது. கடவுளருள் இப்படி உருக்கொள்ளும்போது அது தடுத்தாட்கொள்ளல் என்று கூறப்படுகிறது. ஏழாம் நூற்ருண்டைச் சேர்ந்த திருநாவுக்கரசர் வாழ்க்கையில் இவ்வாறு நிகழ்ந்தது. திருநாவுக்கரசர் சம்பந்தரின் உடன் காலத்தவர்—ஆனுல், ஆண்டில் முதியவர். தென்னுட்டுச் சைவசமயாசாரியர் நால்வருள் ஒருவர்.

சம்பந்தர் வாழ்க்கை வரலாற்றில் திருநாவுக்கரசரைப் பற்றிச் சில இடங்களில் குறிப்புக்கள் தந்துள்ளோம். இவ்விருவருக்கும் ஆன்மீய நட்பு ஏற்பட்டதைப்பற்றியும் கூறியுள்ளோம். இளவயதினரான சம்பந்தர் முதல் முறையாகத் திருநாவுக்கரசரைப் பார்த்தபோது அன்பினுல் 'அப்பரே' என்று அவரை அழைத்தது முதல் அப்பர் என்ற பெயரும் நிலவுவதாயிற்று. தேவாரம் ஏழு திருமுறைகளுள் முதன் மூன்று சம்பந்தர் இயற்றியவை; நான்கு, ஐந்து, ஆரும் திருமுறைகள் திருநாவுக்கரசர் இயற்றியவையாகும். பெரிய புராணத்தில் சேக்கிழார் திருநாவுக்கரசர் வரலாற்றை முதற் காண்டம் ஐந்தாம் சருக்கத்தில் கூறியுள்ளார். சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில் 'திருநின்ற செம்மையே

செம்மையாக்கொண்ட திருநாவுக்கரையன்' என்ற தொடரால் திருநாவுக்கரசரைக் குறிப்பிட்டு வணங்குகிறார், நம்பியாண்டார்நம்பி தம் திருவந்தாதியில் திருநாவுக்கரசர் வாழ்க்கையில் நிகழ்ந்த சிலவற்றைக் குறிப்பிட்டுவிட்டு அவர் தமிழைச் சைவத்திற்கு அணியெனப் புகழ்கிறார்.

தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த திருவாமூரில் வேளாளர் குடியில் சிவபக்தியிற் சிறந்த புகழனார், மாதினியார் என்பவர்கள் இல்லறம் நடத்திவந்தனர். அவர்களுக்குத் திலகவதியார் என்ற மகளும் மருள்நீக்கியார் என்ற மகனும் பிறந்தனர். மருள்நீக்கியாரே பின்னர் திருநாவுக்கரசர் என்ற பெயர்பெற்றனர். திலகவதியார் மணஞ்செய்தற்குரிய ஆண்டையடைந்ததும் அவரைக் கலிப்பகை நாயனார் என்ற சிவனடியாருக்கு மணஞ் செய்விக்க ஏற்பாடாயிற்று. கலிப்பகை நாயனார் படைத்தலைவராக இருந்தமையால் வடக்கே படையெடுத்துச் செல்லவேண்டியதாயிற்று. போரில் இறந்தார். இதற்கிடையில் திருவாமூரில் புகழனார் இறந்துவிட்டார். சில நாட்களில் மாதினியாரும் இறந்துவிட்டார். மூவர் இறந்த பெருந்துயரையாற்ருது திலகவதியார் உயிர் நீக்க நினைத்தார். ஆனால், அவர்தம்பி மருள்நீக்கியார் ஆறுதலற்று அவலநிலையிலிருந்ததால் தமக்கையின்றி அவர் வாழமுடியாது என்பது தெளிவாயிற்று. எனவே, தம்பிக்காகத் திலகவதியார் உயிர்வாழத் துணிவு கொண்டார். தம்பியின் உடல் வாழ்க்கைக்காக மட்டுமன்றி அவர் ஆன்மீய வாழ்க்கைக்காகவும் இத்துணிவு இன்றியமையாததாயிற்று.

அந்தக்காலத்தில் சமணசமயம் அரச செல்வாக்குப் பெற்று மக்களிடம் பெரிதும் பரவியிருந்தது. இளைஞரான மருள் நீக்கியார் சமண ஆசிரியர்களிடம் அகப்பட்டு ஆன்மீய வாழ்வுக்குக் குறுக்குவழி காணவேண்டுமென்ற துடிப்பில் சமணரானார். திருப்பாதிரிப்புலியூர் என இப்போது வழங்கும் பாடலிபுத்திரத்தில் சமணர் பள்ளியில் சேர்ந்து தர்மசேனர் என்ற பெயர்பெற்றுச் சமணசமயக் கொள்கைகளை மிக ஆழ்ந்து கற்பதில் ஈடுபட்டார். விரைவில் சமணசமயத்தைப்

பரப்புவோருள் முதன்மைபெற்று அஞ்சாநெஞ்சுடன் அச்சமயத்தைப் பரப்பும் முயற்சியில் தலைப்பட்டார். திலகவதியாருக்கு இதனால் ஏற்பட்டது பேரேமாற்றம் மட்டுமன்று. தம்பிக்கெனவே உயிர்வாழ்ந்த அவருக்குத் தம்பியின்போக்கு நெஞ்சை வாட்டுவதாயிருந்தது. அவர் திருவதிகை வீரட்டானம் சென்று துறவு பூண்டு கோயில் திருப்பணி செய்து இறைவனை வழிபட்டுவந்தார். தம்பி மீண்டும் சைவம் சேர வேண்டுமென்பது ஒன்றே அவர் வேண்டுகோள்.

திலகவதியார் வேண்டுகோளுக்கிணங்கி இறையருள் ஓர் அற்புதம் நிகழ்வித்தது. இறைவன் தாமே குறுக்கிட்டுத் தர்மசேனரைக் காப்பதற்குத் திருவுளங்கொண்டார். இறைவனருள் முதலில் உடலுக்குத் துன்பத்தை யுண்டாக்கியது. சமண்புகுந்த திருநாவுக்கரசர் கொடிய வயிற்று நோயால் பீடிக்கப்பட்டார். நோயைத் தீர்ப்பதற்கு மருந்தும் மந்திரங்களும் சமணபள்ளியில் கையாளப் பெற்றன. ஆனால், பயனொன்றும் விளையவில்லை. தம் நோயைப்பற்றித் தருமசேனர் தமக்கையாருக்குச் செய்தியனுப்பினார். பிறகு நோயால் துடித்துக்கொண்டும் தோல்வியுணர்ச்சியோடும் தாமே விரைவில் சென்றார். நல்லகாலம் வந்தது என்று சொல்லித் திலகவதியார் அவரைத் தேற்றி அவர் செவியில் திருவைந்தெழுத்தை யோதி உடலில் திருநீற்றைப் பூசிக் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். கோயிலை வலம்வந்து இறைவனை வணங்கியவுடன் இறையருளால் பதிகம்பாடும் ஆற்றல் பெற்றார். நெஞ்சார அவர் பாடிய முதல் பதிகத்திலேயே பிழையுணர்ந்து வருந்தும் புதிய போக்கு புலப்படுகிறது. தாம் செய்த பிழைகளைப் பொருத்தருளும்படி இறைவனை வேண்டிக்கொண்டு வயிற்றுநோய் தாங்கமுடியாதிருப்பதைக் குறிப்பிடுகிறார். முதல் பதிகத்தைப் பாடிமுடித்தவுடன் வயிற்றுநோய் நீங்கியது. திருநாவுக்கரசர் என்ற பெயர் வானில் ஒலித்தது. இதுமுதல் இறைவனை இடைவிடாது நினைந்தும் அவன் புகழ் பாடியும் தாம் சென்ற கோயில்களிலிருந்த புல் முதலியவற்றைக் கையில் ஏந்திச் சென்ற உழவாரம் கொண்டு களைந்தும் சிவனடியாராக

வாழத் தொடங்கினர். வியக்கத்தக்க வகையில் தம்பி காக்கப்பட்டது திலகவதியாருக்கு மகிழ்ச்சி தந்தது.

இந் நிகழ்ச்சிகளைக்கண்டு பாடலிபுத்திரத்திலிருந்த சமணர் வெகுண்டனர். அவ்வளவு எளிதாகத் திருநாவுக்கரசர் தம்மைவிட்டுச் செல்ல அவர்கள் இசையவில்லை. ஏனெனில், அவர் சமணசமயத்தைத் துறந்தது என்பது தனிப்பட்ட ஒருவர் விலகியதைக் குறுப்பதாகஇல்லை. அவரை விலகச் செய்த நிகழ்ச்சிகள் சமண சமயத்தையே அழிக்கக்கூடியவையாயிருந்தன. ஆகையால் காஞ்சீபுரம் சென்று திருநாவுக்கரசரை வரவழைத்துத் தண்டிக்குமாறு பல்லவ மன்னனைத் தூண்டினர். தமக்கையார் வற்புறுத்தலுக்கிணங்கி வயிற்றுநோயால் வருந்துவதாகத் திருநாவுக்கரசர் பாசாங்கு செய்ததால் தாம் அதைத் தீர்க்கமுடியாது போக அவர் சமண சமயத்தினின்றும் விலகினர் என்று மன்னனிடம் பொய் புகன்றனர். மன்னன் ஏமாந்துவிட்டான். திருநாவுக்கரசரை அழைத்து வருமாறு ஏவலாளரைத் திருவதிகைக்கு அனுப்பினன். மன்னன் ஆணையை ஏவலாளர் திருநாவுக்கரசருக்குத் தெரிவிக்க அவர் தாம் யார்க்கும் குடியல்ல வென்றும் இறப்பதற்கு அஞ்சவில்லை யென்றும் மறுமாற்றம் உரைத்தார். மன்னன் சினத்திற்கஞ்சிய ஏவலாளர் அவரைத் தம்முடன் வரும்படி வேண்டிக்கொள்ள அவர்கள் நிலைமைக்கிரங்கி காஞ்சி சென்று மன்னன்முன் நின்றனர். சமண முனிவர்கள் தூண்டுதலுக்கிணங்கி அவரைக் கொல்வதற்காகப் பல்லவ மன்னன் பலமுயற்சிகள் செய்தான். இவை முற்காலத்தில் இரண்யகசிபு தன்மகன் பிரகலாதனைக்கொல்ல செய்த முயற்சிகள் போன்றவை. திருநாவுக்கரசரை நீற்றறையிலிட்டனர். புகழ்பெற்ற பதிகம் ஒன்றில் திருநாவுக்கரசர் இறைவன் திருவடி நிழலை மாசில் வீணைக்கும் மாலை மதியத்திற்கும் வீசுதென்றலுக்கும் வீங்கிளவேனிலுக்கும் மூசுவண்டறை பொய்கைக்கும் ஒப்பிட்டார். நீற்றறையின் வெப்பம் அவரையொன்றும் செய்யவில்லை. சமணமுனிவர்களும் மன்னனுடைய ஏவலாளர்களும் வந்தபோது அடிகளார் உயிரோடிருக்கக் கண்டார்கள். பிறகு அவருக்கு நஞ்சு

பரப்புவோருள் முதன்மைபெற்று அஞ்சாநெஞ்சுடன் அச் சமயத்தைப் பரப்பும் முயற்சியில் தலைப்பட்டார். திலகவதி யாருக்கு இதனால் ஏற்பட்டது பேரேமாற்றம் மட்டுமன்று. தம்பிக்கெனவே உயிர்வாழ்ந்த அவருக்குத் தம்பியின்போக்கு நெஞ்சை வாட்டுவதாயிருந்தது. அவர் திருவதிகை வீரட் டானம் சென்று துறவு பூண்டு கோயில் திருப்பணி செய்து இறைவனை வழிபட்டுவந்தார். தம்பி மீண்டும் சைவம் சேர வேண்டுமென்பது ஒன்றே அவர் வேண்டுகோள்.

திலகவதியார் வேண்டுகோளுக்கிணங்கி இறையருள் ஓர் அற்புதம் நிகழ்வித்தது. இறைவன் தாமே குறுக்கிட்டுத் தர்மசேனரைக் காப்பதற்குத் திருவுளங்கொண்டார். இறை வனருள் முதலில் உடலுக்குத் துன்பத்தை யுண்டாக்கியது. சமண்புகுந்த திருநாவுக்கரசர் கொடிய வயிற்று நோயால் பீடிக்கப்பட்டார். நோயைத் தீர்ப்பதற்கு மருந்தும் மந் திரங்களும் சமணபள்ளியில் கையாளப் பெற்றன. ஆனால், பயனொன்றும் விளையவில்லை. தம் நோயைப்பற்றித் தரும சேனர் தமக்கையாருக்குச் செய்தியனுப்பினார். பிறகு நோயால் துடித்துக்கொண்டும் தோல்வியுணர்ச்சியோடும் தாமே விரைவில் சென்றார். நல்லகாலம் வந்தது என்று சொல்லித் திலகவதியார் அவரைத் தேற்றி அவர் செவியில் திருவைந்தெழுத்தை யோதி உடலில் திருநீற்றைப் பூசிக் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். கோயிலை வலம்வந்து இறைவனை வணங்கியவுடன் இறையருளால் பதிகம்பாடும் ஆற்றல் பெற்றார். நெஞ்சார அவர் பாடிய முதல் பதிகத்தி லேயே பிழையுணர்ந்து வருந்தும் புதிய போக்கு புலப்படு கிறது. தாம் செய்த பிழைகளைப் பொருத்தருளும்படி இறை வனை வேண்டிக்கொண்டு வயிற்றுநோய் தாங்கமுடியாதிருப் பதைக் குறிப்பிடுகிறார். முதல் பதிகத்தைப் பாடிமுடித்த வுடன் வயிற்றுநோய் நீங்கியது. திருநாவுக்கரசர் என்ற பெயர் வானில் ஒலித்தது. இதுமுதல் இறைவனை இடை விடாது நினைந்தும் அவன் புகழ் பாடியும் தாம் சென்ற கோயில்களிலிருந்த புல் முதலியவற்றைக் கையில் ஏந்திச் சென்ற உழவாரம் கொண்டு களைந்தும் சிவனடியாராக

வாழத் தொடங்கினர். வியக்கத்தக்க வகையில் தம்பி காக்கப்பட்டது திலகவதியாருக்கு மகிழ்ச்சி தந்தது.

இந் நிகழ்ச்சிகளைக்கண்டு பாடலிபுத்திரத்திலிருந்த சமணர் வெகுண்டனர். அவ்வளவு எளிதாகத் திருநாவுக்கரசர் தம்மைவிட்டுச் செல்ல அவர்கள் இசையவில்லை. ஏனெனில், அவர் சமணசமயத்தைத் துறந்தது என்பது தனிப்பட்ட ஒருவர் விலகியதைக் குறிப்பதாகஇல்லை. அவரை விலகச் செய்த நிகழ்ச்சிகள் சமண சமயத்தையே அழிக்கக் கூடியவையாயிருந்தன. ஆகையால் காஞ்சீபுரம் சென்று திருநாவுக்கரசரை வரவழைத்துத் தண்டிக்குமாறு பல்லவ மன்னனைத் தூண்டினர். தமக்கையார் வற்புறுத்தலுக் கிணங்கி வயிற்றுநோயால் வருந்துவதாகத் திருநாவுக்கரசர் பாசாங்கு செய்ததால் தாம் அதைத் தீர்க்கமுடியாது போக அவர் சமண சமயத்தினின்றும் விலகினர் என்று மன்னனிடம் பொய் புகன்றனர். மன்னன் ஏமாந்துவிட்டான். திருநாவுக் கரசரை அழைத்து வருமாறு ஏவலாளரைத் திருவதிகைக்கு அனுப்பினன். மன்னன் ஆணையை ஏவலாளர் திருநாவுக் கரசருக்குத் தெரிவிக்க அவர் தாம் யார்க்கும் குடியல்ல வென்றும் இறப்பதற்கு அஞ்சவில்லை யென்றும் மறுமாற்றம் உரைத்தார். மன்னன் சினத்திற்கஞ்சிய ஏவலாளர் அவரைத் தம்முடன் வரும்படி வேண்டிக்கொள்ள அவர்கள் நிலைமைக் கிரங்கி காஞ்சி சென்று மன்னன்முன் நின்றனர். சமண முனிவர்கள் தூண்டுதலுக்கிணங்கி அவரைக் கொல்வதற் காகப் பல்லவ மன்னன் பலமுயற்சிகள் செய்தான். இவை முற்காலத்தில் இரண்யகசிபு தன்மகன் பிரகலாதனைக்கொல்ல செய்த முயற்சிகள் போன்றவை. திருநாவுக்கரசரை நீற் றறையிலிட்டனர். புகழ்பெற்ற பதிகம் ஒன்றில் திருநாவுக் கரசர் இறைவன் திருவடி நிழலை மாசில் வீணைக்கும் மாலை மதியத்திற்கும் வீசுதென்றலுக்கும் வீங்கிளவேனிலுக்கும் மூசுவண்டறை பொய்கைக்கும் ஒப்பிட்டார். நீற்றறையின் வெப்பம் அவரையொன்றும் செய்யவில்லை. சமணமுனிவர் களும் மன்னனுடைய ஏவலாளர்களும் வந்தபோது அடிக ளார் உயிரோடிருக்கக் கண்டார்கள். பிறகு அவருக்கு நஞ்சு

ஊட்டினார்கள். நஞ்சு யாதொன்றும் செய்யவில்லை. பாற் கடலில் எழுந்த நஞ்சால் எல்லா உயிர்களும் அடியோடு அழிந்துபோகும் நிலைமை ஏற்பட அவை உய்வதற்காகத் தாமே உவந்து அந்நஞ்சைச் சிவன் உண்டதாகப் புராணங்கள் கூறு கின்றன. சிவன் அடியாரை இந்த நஞ்சு என்ன செய்யக் கூடும்? அடிகளாருக்குத் தீதொன்றும் ஏற்படவில்லை என்பதைக்கண்ட சமணர்கள் அவரை மிதித்துக் கொல்வதற் காக அவர் மீது மன்னனுடைய யானையை ஏவினர். அவரை நோக்கி முன்னேறிய யானை அவரை யணுகியதும் அவர்முன் நின்று அவரை வணங்கி வலம்வந்து பின்னர் திரும்பிச் சமணர்களை நோக்கிச் சென்றது. அவர்கள் கலங்கி மூலைக் கொருவராக ஓட்டம் பிடித்தனர். சமணமுனிவர்கள் செய்வ தறியாது திகைத்தனர். இறுதி முயற்சியாக அவர்கள் திரு நாவுக்கரசரைக் கல்லில் கட்டிக் கடலில் போடும்படி மன்ன னுக்கு உரைத்தனர். இப்படிச் செய்ததும் கல் அமிழ்ந்து போகாமல் மிதக்கத் தொடங்கியது. அடிகளாரைப்பற்றிக் கட்டியிருந்த கயிறுகள் அறுபட்டன. கல்லில் கட்டிக் கடலில் போட்டாலும் நமச்சிவாய என்ற மந்திரம் நல்ல துணை யாகும் என்று திருநாவுக்கரசர் பாடினார். திருப்பாதிரிப் புலியூருக்கருகில் அவர் கரையேறினார். அங்கிருந்த சிவனடி யார்கள் அவரை மகிழ்ச்சியோடு வரவேற்றார்கள். இவ்வள வில் சோதனைகள் தீர்ந்தன. வழுவிலா அடிமையும் தொண்டும் செய்ய உறுதி பூண்டு திருநாவுக்கரசர் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். பிறகு தாம் தடுத்தாளப்பெற்ற திருவதிகைக்குச் சென்றார். மகேந்திரவர்மன் என்ற பல்லவமன்னன் மனம் வருந்தியும் திருந்தியும் அங்கே வந்து சேர்ந்து திருநாவுக்கரசரின் அடி பணிந்து தன் பிழையைப் பொருத்தருள வேண்டினான். தன் முன்னோர்களின் சமயமான சைவத்தைத் துறந்த பிழையை உணர்ந்த மன்னனை அடிகளார் வாழ்த்தினார். மன்னன் சைவனாகித் தமிழ் நாட்டில் சைவம் மீண்டும் நிலைபெறுவதற் கான தொண்டு செய்தான்.

இதன் பிறகு திருநாவுக்கரசர் தம் வாழ்நாளை இறைவ னுக்கும் அவனடியார்களுக்கும் தொண்டு செய்வதில் கழித்து வந்தார். உழவாரத்தைக்கொண்டு கோயில் திருமுன்றில் உள்ள புல்லையும் கற்களையும் நீக்கி இறைவன் புகழைப்பாடிக் கொண்டு ஊர் ஊராகச் சென்றார். எண்ணற்ற அருஞ் செயல்கள் நிகழ்ந்தன. ஆனால் அவையனைத்தும் இறைவனின் அருஞ் செயல்கள் என்பதை அவர் உணர்ந்தார். இவர் உயிர் தப்பியதே ஓர் அற்புதம்! ஊர் ஊராய்ச் சென்று இறைவன் புகழைப் பரப்பி வந்ததும் ஓர் அற்புதம்!

திருப்பெண்ணாகடத்தில் உடல் தூய்மையுறுவதற்காகத் தம் தோள்களில் மூவிலைச்சூலமும் இடபமும் பொறிக்க வேண்டுமென்று இறைவனை வேண்டிக்கொண்டார். சிவனரு ளால் சிவபூதம் ஒன்று தோன்றி அவர் தோளில் மூவிலைச் சூலம் விடபம் இவற்றைப் பொறித்தது. தலயாத்திரையைத் தொடர்ந்து செய்து சிதம்பரம் சென்றார். அம்பலக்கூத்தன் காட்சியை உள்ளம் உருக்கும் பதிகங்களில் கூறியுள்ளார். சம்பந்தரைக் காண்பதற்காகச் சிதம்பரத்திலிருந்து சீர்காழி சென்றார். இருவரும் சந்தித்ததைப்பற்றி முன்னரே கூறி யுள்ளோம்.

சோழ நாட்டிலுள்ள சிவத்தலங்களுக்குச் செல்ல அடிக ளார் விருப்பங்கொண்டார். பல தலங்களுக்குச் சென்ற பின் திருச்சத்திமுற்றத்தையடைந்தார். இறைவன் திருவடிச் சுவடு தம்மீது பொறிக்கப்பட வேண்டுமென்று விரும்பினார். இறைவன் அவரை நல்லூருக்கு வரும்படிச் சொன்னார். நல்லூர் கோயிலில் வணங்கி எழும்போது இறைவன் தம் திருவடிகளை இவர்மீது நல்லவாறே வைத்தருளினார்.

திங்களூர் என்ற இடத்தில் அப்பூதியடிகள் என்ற சிவ னடியாரொருவரிருந்தார். திருநாவுக்கரசரின் பெருமையைக் கேள்வியுற்ற அவர் அடிகள்பால் பெருவிருப்புற்றுத் தம்மகன், தாம் ஏற்படுத்திய அறநிலையங்கள், தம்மிடம் உள்ள பொருள் அனைத்திணுக்கும் திருநாவுக்கரசு என்ற பெயரையே வைத்தார். திருநாவுக்கரசர் திங்களூருக்குச் சென்றபோது அப்பூதியடிகளைப் பார்க்கச் சென்றார். மிக்க மகிழ்ச்சியுற்ற

அப்பூதியடிகள் திருநாவுக்கரசருக்கு விருந்து ஏற்பாடு செய்தார். வாழை இலைகொண்டுவரச் சென்ற அப்பூதியடிகளின் மகனை யரவந்தீண்டியது. சிறுவன் வீட்டிற்கு விரைந்துசென்று வாழை இலைகளைக் கொடுத்துவிட்டு உயிர் நீத்தான். இச்செய்தி தெரிந்தால் திருநாவுக்கரசர் உணவு கொள்ளமாட்டார் என்று அஞ்சி அப்பூதியடிகளும் அவர் மனைவியும் தம் துன்ப உணர்ச்சிகளை வெளிக்காட்டவில்லை. நிகழ்ந்ததை இறைவன் திருவருளால் உணர்ந்த திருநாவுக்கரசர் இறந்த சிறுவனின் உடலைக் கோயில் வாயிலுக்கருகில் கொண்டுவரச் செய்தார். இறைவனை வேண்டி ஒரு திருப்பதிகம் பாட இறந்த சிறுவன் உயிர்பெற்றெழுந்தான். பிறகு திருநாவுக்கரசர் உணவுகொண்டு அப்பூதியடிகளுடன் சிலநாள் தங்கியிருந்தார். அடுத்துச் சென்ற திருப்பழனப் பாடியில் அப்பூதியடிகளின் பேரன்பைப் பாராட்டிப் பாடினார்.

திருநாவுக்கரசர் சில நாட்கள் நல்லூரிலிருந்தார். பின்னர் திருவாரூர் செல்ல விருப்பங்கொண்டார். இடையிலுள்ள பல தலங்களைப் பார்த்துக்கொண்டு திருவாரூரை யடைந்தார். திருவாரூரிலிருந்தபோது பல பதிகங்கள் பாடினார். ஆருத்ரா விழாவைக்கண்டு பேருவகை கொண்டார். திருப்புகலூரில் சம்பந்தரைக்கண்டு திருவாரூரில் நிகழ்ந்தவற்றைக் கூறினார். சம்பந்தர் திருவாரூர் செல்ல திருநாவுக்கரசர் திருப்புகலூரிலேயே இருந்து இறைவனைப்பாடி வழிபட்டு வந்தார். சுற்றுப்புறத்திலுள்ள தலங்களில் வழிபட்டுத் திரும்பியபோது திருவாரூர் சென்ற சம்பந்தரும் வந்து சேர்ந்தார். சிறுத்தொண்ட நாயனாரும் திருநீல நக்க நாயனாரும் எழுந்தருள அனைவரும் முருக நாயனார் திருமடத்தில் சிலநாட்கள் உடனுறைந்தார்கள். பிறகு திருநாவுக்கரசரும் சம்பந்தரும் சேர்ந்து தலயாத்திரை செய்யப் புறப்பட்டனர். இந்த யாத்திரையின்போதுதான் காவிரி தீரத்தில் பஞ்சம் ஏற்பட்டு இறைவனருளால் இவ்விருவரும் பசிப்பிணியுற்ற மக்களுக்கு உணவளித்தது. இந் நிகழ்ச்சிபற்றி முன் அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளோம். இதே சமயத்தில்தான் திரு

மறைக்காட்டில் கோயில் கதவைத் திருநாவுக்கரசர் திறக்கப் பாடியும் சம்பந்தர் அடைக்கப் பாடியும் செய்த அற்புதம் நிகழ்ந்தது.

இந் நிகழ்ச்சியில் வேறுபாடு ஒன்றிருந்தது. கதவு திறப்பதற்காகத் திருநாவுக்கரசர் நீண்டநேரம் இறைவனை வேண்டும்படியிருந்தது. சம்பந்தர் கதவை அடைக்கப்பாடிய போது காலத்தாழ்வே இல்லை. அரிதில் திறக்கத் தாம் பாட சம்பந்தர் அடைக்கப் பாடியது குறித்து இறைவன் திருவுள்ளம் அறியாமைக்குத் திருநாவுக்கரசர் வருந்தினர். இறைவன் அவர் துயிலும்போது காட்சி கொடுத்து திருவாய் மூருக்கு வரச் சொன்னர். திருநாவுக்கரசர் இறைவனைத் தொடர்ந்து சென்றும் அவரை எய்தப் பெறவில்லை. கோயில் ஒன்றைக்காட்டி இறைவன் அதனுள் புகுந்தார். திருநாவுக்கரசர் கோயிலுக்குள் சென்ருர். இதற்குள் சம்பந்தரும் வந்து சேர்ந்தார். தம் அன்பிற்குரிய மகனை சம்பந்தருக்காவது காட்சி தரும்படி திருநாவுக்கரசர் இறைவனை வேண்டினர். இறைவன் சம்பந்தருக்கு நேரே காட்சி கொடுத்தருள சம்பந்தர் கண்டு திருநாவுக்கரசருக்கும் காணக் காட்டினர். பிறகு இருவரும் திருவாய்மூருக்குச் சென்று அங்கே சில நாட்கள் தங்கித் திருமறைக்காட்டிற்கு மீண்டனர்.

அவர்களிருவரும் திருமறைக்காட்டிலிருக்கும்போதுதான் பாண்டிய மன்னனையும் குடிமக்களையும் மீண்டும் சைவர்களாக்குதற்கு மதுரைக்கு எழுந்தருள வேண்டுமென்று அழைப்புவந்தது. இள அடியார் மதுரைக்கு புறப்பட்டவுடன் திருநாவுக்கரசர் தம் யாத்திரையை மறுபடியும் தொடங்கினர். திருப்பழையாறை என்ற தலத்தில் வடதளி என்ருெரு கோயிலிருந்தது. அங்கிருந்த சமணர்கள் ஒருவரும் காணுதபடி சிவலிங்கத்தை மறைத்துவிட்டார்கள். இதையறிந்த திருநாவுக்கரசர் சிவலிங்கத்தைக் கண்டாலல்லது உணவு கொள்வதில்லையென்று உருதி பூண்டார். மன்னன் கனவில் சிவன் தோன்றி இலிங்கத்தை மீண்டும் நிலைநாட்டிக் கோயிலைப் புதுப்பிக்கச் சொன்னர். மன்னன் திருநாவுக்கரசரையடைந்து வணங்கி. முன்பு கோயிலைச் சரியாகப் பாது

காவாததற்கு வருந்தி இலிங்கத்தை நிலைநாட்டி ஒழுங்கான வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்தான்.

திருநாவுக்கரசர் பல தலங்களைப் பார்த்துக்கொண்டு திருப்பைஞ்ஞீலிக்குப் போகும்போது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. மிக்க நீர் வேட்கையும் பசியும் அவரை வாட்டின. துன்பத்தைப் பொருட்படுத்தாது அவர் சென்றுகொண்டிருந்தார். திருநீற்றந்தணராய் இறைவன் எதிர் தோன்றிப் பொதிசோறு அளித்தார். அடிகளார் தெய்வீக உணவையுண்டு அற்புதமாக உண்டாக்கப்பட்ட குளத்து நீரைப் பருகி அவ்வாறே அற்புதமாக உண்டாக்கப்பட்ட சோலையில் இளைப்பாறினார். பின்னர் திருப்பைஞ்ஞீலிக்குச் சென்றார். அந்தணரும் அவருடன் சென்று அத்தலத்தையணுகும்போது மறைந்தார். அடிகளார் இறைவனே வந்து தமக்கு உதவி செய்ததையுணர்ந்து இறைவன் புகழ் பாடினார்.

பின்னர் அடிகளார் வடக்கே புறப்பட்டுத் திருவண்ணாமலை, மயிலாப்பூர், திருவொற்றியூர் போன்ற தலங்களுக்குச் சென்று திருக்காளத்தியை யடைந்தார். தம் வழக்கப்படி இறைவனை வணங்கிக் கண்ணப்பர் திருவுருவத்திற்கும் வணக்கம் செலுத்தினார். சைவமரபில் திருக்காளத்தி தென் கயிலாய மெனக் கருதப்படுகிறது. இமயத்தில் சிவபிரானின் இருப்பிடமாக உள்ள வடகயிலையைத் திருக்காளத்தி நினைவூட்டியது. அடிகளார் கயிலைசெல்ல விரும்பினார். கயிலை யாத்திரை தொலைவானது, இடர் மிக்கது. காசியையடைந்தவுடன் தம்முடன் வந்தவர்களை நிறுத்தித் தாம் மட்டும் செல்லத் தொடங்கினார். தமக்கு வேண்டிய உணவு முதலியவற்றைக் குறைத்துக் கொண்டார். இடைவிடாது நடந்தமையால் கால்கள் தேய்வுற அடிகள் கைகளால் தாவிச்செல்லலானார். இவ்வாறு சிறிது தொலைவு சென்ற பின்பு நகர்ந்தும் மார்பினால் ஊர்ந்தும் போனார். கைகால்கள் தேய்ந்து எலும்பு முறிந்திட மேலும் செல்ல முடியாததாயிற்று.

திருநாவுக்கரசர் கயிலைக்குத் திரும்பக் காலம் நேர்ப்படவில்லை யென்பது இறைவன் திருவுளக் குறிப்பு. முனிவர்

உருவில் அடிகள்முன் தோன்றிப் பின் இறைவன் தம் உண்மையுருக் காட்டினார். அடிகளாரை எழுந்திருக்கச் சொல்ல அவர் குறைவற்ற உடலுடன் எழுந்தார். அருகி லுள்ள ஒரு பொய்கையில் மூழ்கினால் கயிலைக்காட்சி கிடைக் கும் என்று இறைவன் உறுதிகூற, அடிகளார் வியத்தகு பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் ஒரு வாவியில் எழுந் தார். மேதகு கயிலைக் காட்சி பெற்றுச் சிறிது நேரந் தம்மை மறந்திருந்தார். பின்னர் மகிழ்ச்சியால் பாடினார், ஆடினார். இக்காட்சி மறைந்தவுடன் வருந்திய அவர் பின் னர் யாவும் சிவனருளெனத் தேறினார்.

திருநாவுக்கரசர் வேறு பல தலங்களுக்குச் சென்றார். திருப்பூந்துருத்தியில் ஒரு மடம் அமைத்து அதில் தங்கியிருந் தார். தாம் மேற்கொண்ட பணியை நிறைவேற்றிவிட்டு மதுரையிலிருந்து திரும்பிய சம்பந்தர் திருநாவுக்கரசர் திருப் பூந்துருத்தியிலிருப்பதைக் கேள்வியுற்று அவரைக் காண்ப தற்கு வந்தார். இந்தச் சமயத்தில்தான் சம்பந்தருடைய சிவிகையைச் சுமப்போரோடு ஆண்டில் முதியவரான திரு நாவுக்கரசரும் சேர்ந்துகொண்டார். தன்முனைப்பு ஒரு சிறிது மின்றிப் பணிவு காட்டிய அடிகளாரின் தன்மை கண்டு சம்பந்தர் வியந்தார். சம்பந்தர் தொண்டைமண்டலத்தி லுள்ள தலங்களைக் காணச்செல்ல, திருநாவுக்கரசர் மதுரைக் குச் சென்றார். மதுரையில் பாண்டியனையும், அரசியையும், அமைச்சரையும் அவர்கள் சைவத்திற்குச் செய்த தொண் டிற்காகப் பாராட்டினார். இராமேசுவரம் வரை சென்று பின்னர் சோழநாட்டிலுள்ள திருப்புகலூருக்குத்திரும்பினார்.

இறைவனருளால் ஒரு சோதனை ஏற்பட்டது. சோதனை யில் அடிகளார் சிறந்த வெற்றி பெற்றார். கோயில் திரு முன்றில் உழவாரப்பணி செய்துகொண்டிருக்கும்போது உழ வாரம் நுழைந்த இடமெல்லாம் பொன்னொடு நவமணிகள் பொலிந்தன. ஆனால், அடிகள் வேறுபாடு ஒன்றும் காண வில்லை. புல்லும் கல்லும் பொன்னும் மணியும் வேறு பாடில்லா நிலைமை எய்தி யிருந்தார். பகவத் கீதை, தன்னிலையில் நிற்போன் (ஜீவன் முக்தன்) ஓட்டையும்

கல்லையும் பொன்னையும் நிகராகக் காண்பான்' (XIV, 24) எனக்கூறுகிறது. இதைவிடக் கடுமையான சோதனை யொன்று ஏற்பட்டது. வானுலகத்து அரம்பையர் அடிகள் முன் தோன்றினர். பாடியும் ஆடியும் அவரை மயக்க முயன்றனர். இறைவன் திருவடியை யகலாத நினைவுடன் அடிகள் தம் பணியில் தலைநின்றார். தம் நோக்கம் நிறைவேறாதுபோக இம் மாதர்கள் தங்கள் அறியாமையை உணர்ந்து அடிகளாரை வணங்கி யகன்றனர்.

அடிகளாரின் உலக வாழ்வு முடிவுறும் காலம் வந்தது. எண்பது ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்தாயிற்று. தம்மை அழைத்துக் கொள்ளும்படித் திருப்புகலூரில் இறைவனை வேண்டிக்கொண்டார். சித்திரை மாதத்தில் அவர் எண்ணம் நிறைவேறியது. சிறந்த உலக யாத்திரை நிறைவுற்றது.

திருநாவுக்கரசர் 4900 பதிகங்கள் பாடினார் என்பது சைவமரபு. இப்போது எஞ்சியுள்ளன 312 ஆகும். 'சொற்குறுதிக்கு அப்பர்' என இவரைப் பாராட்டுவதுண்டு. இவர் பதிகங்களில் இவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள், துன்ப நிகழ்ச்சிகள், இடைவிடா உழைப்பினாலும் முயற்சியாலும் அடைந்த வெற்றிகள் இவைகளைப்பற்றித் தெரிந்துகொள்ளலாம். உள்ளத்தையுருக்கும் பாடல்களில் பரம்பொருளான சிவபிரானின் பெருமையை யெடுத்தோதி அவரையே புகழாகக் கருதி அவ்வரை அடையும்படி மக்களுக்கு அறிவுறுத்துகிறார். அனைத்தாம் சமயங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் சிவனே பொருளாக உள்ளார் என்று அடிகளார் கருதுகிறார். எந்தக் கடவுளை வணங்கினாலும் அது சிவ வழிபாடே. சிவனைப் பற்றிய புராணங்களைக் கையாண்டு, சிவபிரானையே புகலாகக்கொண்டு அடைக்கலம் புகுந்தால் அவர் தவறாமல் காப்பார் என்று உறுதி கூறுகிறார். ஒவ்வொரு பதிகத்திலும் இராவணனுக்கும் சிவன் அருள் புரிந்ததைக் கூறுகிறார். முன் இருந்த நிலையாதாயினும் ஆகுக. சிவனையொருகால் உளங்கொண்டால் அஞ்சவேண்டுவ தொன்றுமில்லை. எல்லாம் நன்மையாகவே இருக்கும் என்றும் நம்பலாம். திருநாவுக்கரசர் கடைப்பிடித்தது இதுவே!

# சுந்தரமூர்த்தி

நன்மகனாகவும் உண்மை ஊழியனாகவும் உறவுகொண்டு இறைவனை முறையே தந்தையாகவும் ஆண்டானாகவும் வழிபடுவது சற்றே எளிது. ஆனால், இறைவனிடம் நட்புரிமை கொண்டு அவன் பரம்பொருள் என்ற உண்மையை மறவா திருப்பது அரிது. ஸ்ரீ கிருஷ்ணனுடைய விசுவரூபக் காட்சியைக் கண்ட அர்ஜுனன் அதற்கு முன்பெல்லாம் நட்பு முறையில் நெருங்கிப் பழகிய பிழைக்காக வருந்துகிறதைப் பார்க்கிறோம். "உன்னைத் தோழனென்றுக்கருதி உன் பெருமையை உணராமல், ஏ கிருஷ்ணா, ஏ யாதவா, ஏ தோழா, என்று தவறுதலாலேனும் அன்பாலேனும் நான் துடிப்புற்றுச் சொல்லி யிருப்பதையும் விளையாட்டிலும் படுக்கையிலும் இருப்பிலும் உணவிலும் தனியிடத்தேனும் அன்றி மற்றவர் முன்னேயெனினும், நான் உனக்கு வேடிக்கையாகச் செய்திருக்கும் அவமதிப்புக்களையும்—இவற்றை யெல்லாம் பொறுத்தருளும்படி ஏ அச்சுதா! அவாவற்றவனை உன்னை வேண்டுகிறேன்" என்று இரங்கத்தக்க முறையில் அர்ஜுனன் விண்ணப்பம் செய்கிறான். (கீதை XI. 41-42) நெருங்கிப் பழகுவது அவமதிப்பை உண்டாக்கவில்லை யெனினும் தனிச்சிறப்புத் தோன்றாதவாறு செய்யலாம். இறைவனிடம் நட்புரிமைகொள்ளும் நெறியில் இவ்விடர்பாடு மறைந்துள்ளது. தென்னாட்டுச் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவரான சுந்தரமூர்த்தியின் வாழ்க்கையில் (எட்டாம் நூற்றாண்டு) இவ்விடர்ப்பாடு மிக்க குறைவாக உளது. தொண்டரான சுந்தரர் தம் தலைவனின் பெருமையை ஒருபோதும் மறக்கவில்லை. இறைவனிடம் மிக நெருங்கிப் பழகிய சுந்தரர் தம் வீட்டுப்பூசல்களைத் தீர்ப்பதற்காகவும் இறைவனைப் பணி கொண்டார். சுந்தரர் காலத்தவரான வேறொரு அடியார் இதைக் கேள்வியுற்றுப் பெருஞ்சினம் கொண்டார். ஆனால், உண்மையில் சுந்தரர் உயர்வற உயர்ந்த இறைவனின் தன்

மையை ஒருபோதும் மறக்கவில்லை. சிவனை நண்பனாகமட்டும் அவர் கருதவில்லை. தம் தலைவனாகவும் ஆண்டவனாகவும் கருதினார்.

சைவத் திருமுறைகளுள் ஏழாவதாக உள்ளது சுந்தரர் பாடிய தேவாரம். அருபத்துமூன்று நாயன்மார்களின் புகழை முதல் முதலாகப் பாடியவர் சுந்தரர்தாம். இவரும் இவ்வறுபத்து மூவருள் ஒருவராவர். நாயன்மார்களைப் புகழும் பதிகம் திருத்தொண்டத் தொகை யெனப்பெறும். சுந்தரர் தம்மை இவ்வடியார்களின் அடியார்களுக்கு அடியனாகக் கருதுகிறார். திருத்தொண்டத் தொகையை முதல் நூலாகக் கொண்டுதான் சேக்கிழார் பெரியபுராணம் இயற்றினார். பெரியபுராணம் சுந்தரர் வரலாற்றோடு தொடங்குகிறது. ஏனைய அடியார்களின் வரலாற்றைக் கூறுகையில் சுந்தரர் வரலாற்றோடு தொடர்புகொண்ட பகுதிகளைத் தருகிறது. இறுதியில் வெள்ளானை மீதமர்ந்து கயிலைக்குச் சென்றதைக் கூறி முடிக்கிறது.

சோழ நாட்டிற்கும் தொண்டை மண்டலத்திற்கும் இடையிலே திருமுனைப்பாடி நாடு உளது. இங்கே திருநாவலூர் என்ற ஊரில் ஆதிசைவர் குலத்திலே சுந்தரர் பிறந்தார். தந்தையார் சடையனார், தாயார் இசைஞானியார். பிள்ளைத் திருநாமம் ஆரூரர் என்பதாம். சுந்தரர் என்றபெயர் அவர் அழகுடையவராயிருந்ததால் ஏற்பட்டிருக்கலாம். அல்லது இவ்வுலகில் பிறப்பதன்முன் கயிலையில் அவருக்கிருந்த பெயரின் ஒருபகுதியாக இருக்கலாம். புராணக்கதைப்படி கயிலையில் சிவபெருமானுடைய தொண்டர்களில் ஒருவரான ஆலாலசுந்தரர் என்பவர் பார்வதிதேவியின் பணிப்பெண்களான கமலினி, அனிந்திதை என்ற இருவரைக் காதலித்தார். ஆகையால் மூவரும் இவ்வுலகில் மானிடராகப் பிறந்து மீண்டும் கயிலை புகுமுன் அழியும் இன்பத்தை நுகரவேண்டியவராயினர்.

இவ்வுலகில் சுந்தரராகப் பிறந்தவர் குழந்தையாகயிருந்தபோது தெருவில் ஒருநாள் விளையாடிக்கொண்டிருந்

தார். திருமுனைப்பாடி நாட்டு மன்னன் அவ்வழிசெல்ல நேர்ந்தது. குழந்தையின் அழகில் ஈடுபட்ட அவர் குழந்தையைத் தாமே அரண்மனையில் வளர்க்க விரும்பினுர். பெற்ருேர் இசைவுபெற்றுத் தம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டார். அரண்மனையில் வளர்ந்தாலும் சுந்தரர் அந்தணர்க்குரிய கல்வி பயின்ருர். மணப்பருவம் எய்தியவுடன் அவர் தகப்பனுர் புத்தூர் சடங்கவி சிவாசாரியரின் மகளை மணஞ் செய்விக்க உறுதி செய்தார். திருமணத்திற்குரிய ஏற்பாடுகள் நடந்தேறின. திருநாவலூரிலிருந்து தம் உறவினர் சூழக் குதிரைமீது புறப்பட்டு சுந்தரர் மணமகள் இல்லம் வந்து சேர்ந்தார்.

இந்தச் சமயத்தில் சுந்தரரைக் காப்பதற்கு இறைவன் திருவுளங்கொண்டார். முன் அதிகாரத்தில் தடுத்தாட் கொள்ளல் என்று குறிப்பிடப்பட்ட முறையை இங்கே மிகத் தெளிவாய்க் காணலாம். சுந்தரர் வாழ்க்கை வரலாற்றை முதன்மையாகக்கொண்ட பெரியபுராணத்தில் முதற் காண்டம் தடுத்தாட்கொண்ட புராணம் எனப்பெறும். தடுத்தாட்கொள்ளல் பின்வருமாறு நிகழ்ந்தது. திருமணத்திற்கு முன் செய்யவேண்டிய சடங்குகள் நிறைவேறிக் கொண்டிருந்தன. சுந்தரர் மணஞ் செய்யவேண்டிய சமயம் எய்தியது. இந்த நல்ல நேரத்தில் முதிய அந்தணர் உருக்கொண்டு சிவன் தோன்றி மணமகன்மீது தமக்கொரு வழக்கிருப்பதாகக் கூறினுர். சுந்தரரின் பாட்டனுர் எழுதித் தந்த ஆள் ஓலையின் படிச் சுந்தரர் தமக்கு அடிமையென்று வழக்குத்தொடுத்தார். சுந்தரர் இதை மறுத்து, "நீ பித்தனு? ஓர் அந்தணர் வேருேர் அந்தணருக்கு அடிமையாதல் உண்டா?" என்று சினந்து கேட்டு ஆள் ஓலையைப் பார்க்க வேண்டுமென்று சொன்னுர். "நீ ஓலைபார்க்க வல்லையோ? முதலில் பணி செய்யவேண்டும்" என்று முதியவர் பதிலளித்தார். சுந்தரர் ஓலையைப் பறிக்க முயல், முதியவர் ஓடத் தொடங்கினுர். சுந்தரர் பின்தொடர்ந்து ஓலையைப் பற்றி ஈர்த்து "ஆளாய் அந்தணர் அடிமை செய்தல் என்ன முறை?" என்று சொல்லிக் கிழித்துப் போட்டார். முதியவர் விடுவ

தாயில்லை. தம் வழக்கைத் தொடர்ந்து பேசினூர். வந்திருந்தோர் அவருடைய ஊர் எதுவெனக் கேட்டனர். அவர் தாம் அருகிலுள்ள வெண்ணெய் நல்லூரிலிருப்பதாகக் கூறினூர். நல்லூருக்குச் சென்று அங்குள்ள அந்தணர்முன் வழக்கைப் பேசித்தீர்க்கலாம் என்று சுந்தரர் கூறினூர். முதியவர் முன் செல்ல சுந்தரரும் பிறரும் நல்லூருக்குச் சென்றனர். அந்தணர்முன் வழக்கை முதியவர் எடுத்துரைத்தார். சுந்தரர் கிழித்தது படிஓலையென்றும் மூல ஓலை காட்டித் தம் வழக்கை மெய்ப்பிக்க முடியுமென்றும் கூறினூர். மூல ஓலை காட்ட அது அந்தணர்முன் படிக்கப்பட்டது. ஓலையை நன்ருக ஆராய்ந்து பார்த்து அது சரியான ஓலைதான் என்று முடிவு கண்டார்கள். சுந்தரர் பாட்டனூர் கையெழுத்தும் சாட்சிகள் கையெழுத்தும் எல்லாம் சரி என்பது உறுதியாயிற்று. சுந்தரர் தோற்ருர். அவரை முதியவரிடம் ஒப்படைக்குமுன் முதியவர் நல்லூரைச் சேர்ந்தவராஞல் அவர் இருப்பிடம் எது என்று அந்தணர் கேட்டனர். தம்மை ஒருவரும் அறியவில்லையெனின் தம்பின்வரின் காட்டுவதாகச் சொல்லித் திருவருட்டுறையில் புகுந்து மறைந்தார். சுந்தரர் தனியாகத் தொடர்ந்து பார்க்க, விடையின்மீது மாதொரு பாகஞக எழுந்தருளிக் காட்சி கொடுத்தார். "உன்னைத் தடுத்தாட்கொண்டோம். நீ வாதிட்டு வன்மை பேசியதால் வன்தொண்டன் என்ற நாமம் பெற்றனை. நமக்கு அன்பிற் செய்யும் அர்ச்சனை பாட்டேயாகும். ஆகையால் தமிழில் பாடுக" என்று இறைவன் கூறினூர். "யாதினை யறிந்து நான் என் சொல்லிப் பாடுவது ?" என்று சுந்தரர் கேட்க "முன்பு என்னைப் பித்தனென்றே மொழிந்தனையாதலால் என்னைப் பித்தனென்றே பாடுவாய்" என்று இறைவன் பணித்தார். இறையருளால் உடனே சுந்தரர் "பித்தா, பிறைசூடி !" என்று தொடங்கும் முதல் பதிகத்தைப் பாடினூர்.

திருமணம் என்னவாயிற்று ? அது நின்றுவிட்டது. மணமகள் வேறெவரையும் நினையாமல், மணஞ்செய்து கொள்ளாமல் இறைவன் திருவடி யடைந்தாள். சிவனடியாரான

சுந்தரர் நாவலூருக்குச் சென்று இறைவழிபாட்டில் ஈடுபட்டார். சில நாள் கழித்துத் திருத்துறையூருக்குச் சென்றார். அங்கே தங்கியிருந்தபோது சிதம்பரம் போகவேண்டுமென்று நினைத்துச் சிதம்பரத்திற்குப் புறப்பட்டார். செல்லும்வழியில் திருவதிகை யிருந்தது. இத்தலத்தில்தான் திருநாவுக்கரசர் சிவனருள் பெற்றுச் சைவத்திற்கு மீண்டார். அத்தலத்தை மிதிக்க அஞ்சிய சுந்தரர் அருகிருந்த மடத்தில் தங்கினார். அன்றிரவு சுந்தரர் படுத்துறங்கும்போது யாரோ தம் தலைமீது கால்வைத்திருப்பதாக உணர்ந்தார். விழித்தபோது ஒரு கிழ அந்தணரைக் கண்டார். தம்தலைமீது ஏன் காலை வைத்தார் என்று அவரைக் கேட்டதற்கு முதியவர் மூப்புக்காரணமாகத் திசையறியாமல் செய்ததாகக் கூறினார். சுந்தரர் வேறொருபுறம் படுத்துக்கொண்டார். மீண்டும் முதியவர் தம்மீது கால் நீட்டுவதுணர்ந்து, "இங்கு எனைப் பல்காலும் மிதித்த நீ யார்?" என்று கேட்க, அவர் 'அறிந்திலையோ?' என்று கேட்டு மறைந்தார். தாம் கேளாமலிருக்கவும் தம்மீது திருவடியை வைத்தருளிய முதிய அந்தணர் சிவபெருமானே என்று சுந்தரர் உணர்ந்தார்.

சுந்தரர் சிதம்பரத்தில் தில்லைக் கூடத்தினைக் கண்டு வணங்கி அவன்புகழ் பாடினார். திருவாரூருக்குச் செல்லும்படி இறைவன் கட்டளையிட்டார். திருவாரூர் செல்லும் வழியில் சுந்தரர் பல தலங்களைக் கண்டு வழிபட்டார். சீர்காழிக்கருகில் செல்லும்போது இறைவன் காட்சிக் கொடுத்தார். சம்பந்தர் பிறந்த இடமாகிய சீர்காழியை மிதிக்க அஞ்சி வலமாகச் சென்றார்.

திருவாரூர் மக்கள் சுந்தரருக்குச் சிறந்த வரவேற்பளித்தனர். நம்பியாரூரர் என்று பெற்றோர் சுந்தரருக்கு இட்ட பெயர் திருவாரூரிறைவன் பெயராகும். திருவாரூரிறைவன் சுந்தரருடைய முன்னோர்களின் குலதெய்வம். திருவாரூரில் சுந்தரர் வாழ்க்கையில் ஒரு பெரிய நிகழ்ச்சி நடைபெற இருந்தது. இவ்வுலகில் பிறப்பதற்குமுன் கயிலையில் சுந்தரர் காதலித்த இரு தெய்வமகளிருள் ஒருவராகிய கமலினி திருவாரூரில் பிறந்து பரவையார் என்ற பெயருடன் வளர்ந்து மணப்

பருவம் எய்தினர். ஒரு நாள் சுந்தரரும் பரவையாரும் கோயிலில் சந்தித்தனர். பரவையாரைத் தமக்கு மணஞ் செய்விக்குமாறு இறைவனைச் சுந்தரர் வேண்டிக்கொண்டார். திருவாரூர் அன்பர்கள் கனவில் சிவன் தோன்றிப் பரவையாரைச் சுந்தரருக்கு மணஞ்செய்விக்கச் சொன்னர். அவ்வாறே திருமணம் நிறைவேறியது. சுந்தரர் இல்வாழ்க்கை நடத்தலானர்.

வழக்கம்போல் சுந்தரர் கோயிலுக்குச் சென்றபோது தேவாசிரிய மண்டபத்தில் அடியார்களைக் கண்டார். தம்மை அவ்வடியார்களுக் கடியனுக்குமாறு இறைவனை வேண்டிக் கொண்டார். அவர்கள் புகழைப் பாடும்படிச் சிவன் பணித்தருள எவ்வாறு பாடுவது என்று சுந்தரர் கேட்டார். 'தில்லை வாழந்தணர் தம் அடியார்க்குமடியேன்' என்று சிவபெருமான் அடியெடுத்துத்தர சுந்தரர் அறுபத்துமூன்று நாயன்மார் பெருமையைத் திருத்தொண்டத் தொகை யென்னும் பதிகத்தில் பாடினர். சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்திற்கு இப்பதிகமே அடிப்படையாகும்.

குண்டையூரிலே சுந்தரரிடம் அன்புகொண்ட ஒரு வேளாளர் இருந்தார். சுந்தரர் இல்லறத்திற்கு வேண்டிய நெல் முதலியவற்றை அவர் தருவது வழக்கம். மழையின்மையால் ஒருமுறை தருவதற்குப் போதிய நெல் கிடைக்கவில்லை. மிகவும் வருந்தி உணவுகொள்ள மறுத்தார். அவர் கனவில் சிவன் தோன்றிப் போதிய நெல் அளிப்பதாகச் சொன்னர். மறுநாள் காலையில் ஊரில் எங்கு பார்த்தாலும் நெற்குவியல்கள் மலையெனக் கிடந்தன. வேளாளர் மிக மகிழ்ந்தார். ஆனல், நெல்லை எவ்வாறு திருவாரூருக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பது? சுந்தரரிடம் சொல்வதற்காகத் திருவாரூருக்குப் புறப்பட்டார். இறைவனே இந்நிகழ்ச்சி பற்றி சுந்தரரிடம் கூறினமையால் சுந்தரர் குண்டையூருக்குப் புறப்பட்டார். சுந்தரரும் குண்டையூர் வேளாளரும் சந்தித்துக் குண்டையூருக்கு மீண்டனர். சுந்தரர் நெற்பெருங் குவியல்களைக் கண்டார். நன்றியுணர்ச்சி ஓங்கி நின்றது. இவ்வற்புதத்தை முழுவதும் நிறைவேற்றி நெல்லைத் திருவாரூருக்கு

எடுத்துச் செல்ல இறைவனைத் தவிர வேறு யாரிடம் வேண்டுவது? இரவில் சிவகணங்கள் நெல்லைத் திருவாரூருக்கு எடுத்துச் சென்றன. பரவையார் மனையில் மட்டுமன்று. ஆரூரில் அனைவர் மனைகளிலும் நெல் நிறைந்தது.

திருநாட்டியத்தான்குடியில் கோட்புலியார் என்ற சிவனடியாரிருந்தார். அவர் சுந்தரரைத் தம் ஊருக்கு அழைத்தார். தம் ஊருக்குவந்த சுந்தரருக்குச் சிங்கடி, வனப்பகை யெனப் பெயரிய தம் இருமகளிரை மணஞ் செய்துதர விரும்பினார். சுந்தரர் இதற்கு இசைய மறுத்து அவ்விருவரைத் தம் மகளிராகக் கருதுவதாகச் சொன்னார். சில பதிகங்களில் சுந்தரர் தம்மை அவ்விருவரின் தந்தையாகக் கூறிக்கொள்கிறார்.

திருவாரூரில் திருவிழாவுக்குரிய நாள் நெருங்கியது. விழாவிற்கு வரும் கணக்கற்ற அடியார்களுக்குப் பரவையார் உணவளிப்பதற்காகப் பொருள் வேண்டியிருந்தது. பொருள் பெறுவதற்காகச் சுந்தரர் திருப்புகலூருக்குச் சென்றார். நேரே கோயிலுக்குச் சென்று தம் குறையிரந்து ஒரு பதிகம் பாடினார். அயற்சியால் அருகிலிருந்த மடத்தில் செங்கற்கள் மீது தலை வைத்துப் படுத்தார், சற்று உறங்கி விழித்தபோது செங்கற்களெல்லாம் பொன்னாக மாறியிருக்கக் கண்டார். விழாவிற்கு வரும் அடியார்களுக்கு உணவளிப்பதற்காகப் பொன்னைத் திருவாரூருக்கு எடுத்துச் சென்றார்.

பல தலங்களை வழிபட்டு ஓரிரவு திருவாலம்பொழிலில் தங்கினார். இறைவன் கனவில் தோன்றி, "மழபாடியை மறந்தனையா?" என்று கேட்டார். சுந்தரர் மழபாடிக்குச் சென்று அங்கே சில நாள் தங்கி இறைவனைப்பாடி வணங்கி வந்தார். திருப்பாச்சிரமத்தில் இறைவனைப் பொன் கேட்டார். உடனே கிடைப்பதாயில்லை. பதிகம்பாடி பொன் பெற்றார். திருப்பைஞ்ஞீலியில் பிக்ஷாடனர் உருவைக் கண்டார். மன்னர்க்கு மன்னராம் பரம்பொருள் ஆண்டியாகப் பிச்சையேற்க வருவதன் பொருளை நினைந்து வியப்பில் ஆழ்ந்தார். திருப்பாண்டிக் கொடுமுடியில் நமச்சிவாயப் பதிகம் பாடினார். திருப்பேரூரில் தில்லைக்கூத்த பிரானின் காட்சி கிடைக்கப் பெற்றார். சிதம்பரம் செல்ல விரும்பிப் புறப்பட்டு வழியில்

பல தலங்களில் வணங்கினார். திருக்கூடலையாற்றுக்கு அருகிலிருக்கும்போது அதைப் பாராது திருமுதுகுன்றம் செல்லலானார். எதிரேவந்த ஓர் அந்தணரைத் திருமுதுகுன்றத்திற்கு வழி கேட்டார். வேண்டுமென்றே திருக்கூடலையாற்றூருக்கு வழிகாட்டிவிட்டு அவ்வந்தணர் மறைந்துவிட்டார். இத்தலத்தைப் பாராது போகக் கூடாதென்பது இறைவன் திருவுள்ளம். திருக்கூடலையாற்றூரில் இறைவனை வணங்கிய பிறகு சுந்தரர் திருமுதுகுன்றதிற்குச் சென்றார்.

இறைவனிடம் பொன் வேண்டுமென்று கேட்டுச் சுந்தரர் பன்னீராயிரம் பொற்காசுகள் தரப்பெற்றார். இவற்றைத் திருவாரூரிலுள்ள அனைவரும் மருளுற வியப்ப அங்கே வரப் பெறவேண்டுமென்று இறைவனை வேண்டினார். இறைவன் பொற்காசுகளை மணிமுத்தாற்றிலிட்டுப் பின் திருவாரூர் குளத்தில் எடுத்துக்கொள்ளச் சொன்னார். திருவாரூரில் பெறப்போகும் பொன்னுடன் ஒத்திட்டுப் பார்ப்பதற்காகப் பொன்னில் ஒருசிறுதுண்டு வைத்துக்கொண்டு மற்றக்காசுகளை ஆற்றிலிட்டார். பிறகு சிதம்பரத்தைப் பார்த்துக்கொண்டு திருவாரூர் அடைந்தார்.

திருவாரூரில் சுந்தரர் திருமுதுகுன்றத்தில் நடந்த அற்புதத்தைப் பற்றிப் பரவையாரிடம் கூறினார். ஆற்றிலிட்ட பொன் குளத்தில் கிடைக்கும் என்பதைப் பரவையார் நம்பவில்லை. சுந்தரர் பரவையாரைக் குளத்திற்கு அழைத்துச் சென்றார். குளத்தில் இறங்கித் தேடினார். பொன் கிடைக்கவில்லை. சுந்தரர் பதிகம்பாடப் பொன் கிடைத்தது. தாம் எடுத்து வைத்திருந்த பொன்னொடுஒத்திட்டுப் பார்த்தபோது குளத்துப் பொன்னின் உரை தாழ்ந்திருக்க மீண்டும் பதிகம் பாடினார். இம்முறை பொன் சரியாக இருந்தது.

திருவாரூரில் சிலநாள் தங்கிப் பிறகு சுந்தரர் தலங்கள் பார்க்க மீண்டும் புறப்பட்டார். சம்பந்தர் பொற்றாளங்கள் பெற்ற திருக்கோலக்கா உள்ளிட்ட பலதலங்களைப் பார்த்து வணங்கினார். திருக்குருகாவூர் செல்லும்போது சுந்தரரும் அடியார்களும் பசி, நீர் வேட்கையால் வருந்தினர். இறை

வன் அந்தணர் வடிவத்தில் தோன்றிப் பொரிசோறும் தண்ணீரும் தந்தார். அடியார்கள் அனைவரும் உண்பதற்கு வேண்டிய அளவில் வியக்கத்தக்க வகையில் உணவு பெருகியது. உணவருந்திச் சற்று இளைப்பாறத் துயில்கொண்டு பிறகு விழித்தபோது அந்தணரைக் காணவில்லை. இறைவனே தமக்கு உணவளித்தார் என்றுணர்ந்து சுந்தரர் நன்றியுடன் பதிகம் பாடினார்.

இவ்வாறே மீண்டும் திருக்கச்சூரில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. இறைவனை வணங்கியபின் கோயிலைவிட்டு வெளியே வந்தபோது சுந்தரருக்குப் பசி யெடுத்தது. உணவு செய்ய ஏற்பாடும் ஆகவில்லை. அந்தணராகச் சிவன் தோன்றிப் பிச்சையெடுத்து உணவு தருவதாகச் சுந்தரரிடம் கூறி வீடு தோறும் சென்று சுந்தரருக்கும் அடியார்களுக்கும் வேண்டிய உணவைப் பிச்சை யெடுத்துவந்தார், சுந்தரர் நன்றி பெருகும் மகிழ்ச்சி கொண்டார். அந்தணராக வந்தவர் மறைந்தார்.

சுந்தரர் காஞ்சி, காளத்திபோன்ற தலங்களுக்குச் சென்றார். காளத்தியிலிருந்து திருவொற்றியூருக்குச் சென்றார். கயிலையிலிருந்த அணிந்திதையார் இங்கே வேளாளர் குடியில் பிறந்து சங்கிலியார் என்ற பெயருடன் வளர்ந்து வந்தார். சிவனடியார் ஒருவருக்குத்தாம் தொண்டு செய்ய வேண்டுமென்று சொல்லி எவரையும் மணஞ்செய்துகொள்ள மறுத்தார். திருவொற்றியூரில் கோயில் திருப்பணி செய்து வந்தார். அவர் மேற்கொண்ட பணி இறைவனுக்கு மலர் மாலை தொடுத்துத் தருதலாகும். ஒருநாள் சுந்தரர் சங்கிலியாரைக் கோயிலில்கண்டு உடனே காதல் கொண்டார். எதுவேண்டுமென்றாலும் இறைவனைக் கேட்பது சுந்தரர் இயற்கையாயிருந்தது. எனவே, சங்கிலியாரைத் தமக்கு மணஞ் செய்விக்குமாறு இறைவனை வேண்டிக்கொண்டார். இறைவன் இதற்கிணங்கிச் சங்கிலியார் கனவில்தோன்றிச் சுந்தரருடைய விருப்பத்தைக் கூறி அவரை மணஞ்செய்து கொள்ளச் சொன்னார். சங்கிலியாருக்கு இணங்க விருப்பந்தான். ஆனால், சுந்தரர் பரவையாருடனிருப்பதற்காக

மீண்டும் திருவாரூர் சென்றுவிட்டால் என் செய்வது ? திரு வொற்றியூரைவிட்டுச் செல்வதில்லை யென்று சுந்தரர் வாக் குறுதிதரச் செய்வதாக இறைவன் கூறினார். தாம் வாக்குறுதி தரும்போது இறைவன் கோயிலுக்கு வெளியே சென்று மகிழடிக் கீழிருக்கவேண்டுமென்று சுந்தரர் கேட்டுக்கொண் டார். இறைவன் உறையும் பிற தலங்களுக்குச் செல்ல வேண்டிய தம்மை இவ்வாக்குறுதி கட்டுப்படுத்தக்கூடாது என்று சுந்தரர் நினைத்தார். இறைவன் என்ன செய்வது ? இவ்வேமாற்றத்திற்கு உடன்படவில்லை. மகிழடியின் கீழ் வாக்குத் தரச்சொல்லும்படி சங்கிலியாரைக் கேட்கச் சொன் னார். அவ்வாறே வாக்குத் தரப்பெற்றது. திருமணமும் நடந்தேறியது. திருவொற்றியூரில் சிலகாலம் சுந்தரர் சங்கிலி யாரோடு இன்ப வாழ்க்கை நடத்தினார்.

இளவேனிற் காலம் வந்தவுடன் சுந்தரருக்குத் திருவாரூர் விழா நினைவுண்டாயிற்று. பரவையாரின் ஆடல் பாடல் நினைவுக்கு வந்தன. திருவொற்றியூரில் தொடர்ந்திருக்க உளங்கொள்ளவில்லை. வாக்குறுதி தந்திருந்தும் திருவாரூருக் குப் புறப்பட்டார். திருவொற்றியூர் எல்லையை நீங்கியதும் பார்வையிழந்தார். மனந்தளராமல் வழிகேட்டுக்கொண்டே செல்லலானார். திருவெண்பாக்கத்தில் இறைவன் ஊன்று கோல் ஒன்று கொடுத்தார். காஞ்சியில் இடக்கண் பார்வை பெற்றார். திருத்துருத்தியில் அவருடலைப் பற்றியிருந்த பிணி நீங்கியது. இறுதியில் திருவாரூர்போய்ச் சேர்ந்தார். கோயி லுக்குச் சென்று இறைவனை வேண்டி வலக்கண் பார்வையும் பெற்றார்.

தாம் திரும்பிவந்த செய்தியைச் சுந்தரர் பரவையாருக்குத் தெரியப்படுத்தினார். ஆனால் ஏற்ற காரணத்திற்காகச் சினம் கொண்டிருந்த பரவையார் சுந்தரரை வரவேற்க மறுத்தார். பரவையார் சினத்தைத் தணித்தருளுமாறு சுந்தரர் இறை வனை வேண்ட, அர்ச்சகர் கோலத்தில் அவர் சென்று சுந்தர ருக்காகப் பரிந்து பேசினார். பரவையார் இசையவில்லை. இறைவன் சென்று மீண்டும் தம் உண்மை யுருவில் வந்தார். பரவையார் அவரடி விழுந்து வணங்கித் தம்மைப் பொறுத்

தருளும்படி வேண்டினார். சினம்தீர்ந்த பரவையார் சுந்தரர் வரவை எதிர்பார்த்திருந்தார். சுந்தரர் வந்த பிறகு இருவரும் முன்போல இன்பமாய் வாழ்ந்தனர்.

ஊடல் தீர்க்க இறைவனைப் பணி கொண்டதற்காகச் சுந்தரர்மீதுசினங்கொண்டவரான ஒரு அடியாரைப்பற்றிமுன் குறிப்பிட்டோம். அவ்வடியார் பெயர் ஏயர்கோன் கலிக்காம நாயனார் என்பதாகும். நிகழ்ந்ததை நினைக்கவும் கலிக்காமர் அஞ்சினார். அவர் கொண்ட கோபத்தை மாற்றுவதற்காக இறைவன் அவருக்குச் சூலைநோய் உண்டாக்கினார். சுந்தரர் உதவியால்தான் இந்நோய் நீங்குமென்றும் அவருக்கு அறிவித்தார். கலிக்காமரிடம் சென்று அவர் நோயைத் தீர்க்கும்படிச் சுந்தரருக்கு ஆணை பிறப்பித்தார். ஆனால், சுந்தரரைக் காண விரும்பாமல் அவர் வருமுன் கலிக்காமர் உடைவாளால் தம் வயிற்றில் குத்திக்கொண்டு உயிர் நீத்தார். சுந்தரர் சென்றதும் அவருக்கு ஒருவரும் இச் செய்தியைக் கூறவில்லை. கலிக்காமரிடம் தம்மை அழைத்துச் செல்ல வேண்டுமென்று சுந்தரர் வற்புறுத்த கலிக்காமர் வீழ்ந்து கிடந்த அறைக்கு அவரை அழைத்துச் சென்றனர். சுந்தரர் மிக வருந்தி கலிக்காமர் உடை வாளை யெடுத்துத் தம் உயிரைப் போக்கிக்கொள்ள முயன்றார். இறைவனருளால் கலிக்காமர் உயிருடன் எழுந்து சுந்தரரைத் தடுத்தார். சுந்தரருடைய அன்பு கலிக்காமருக்குத் தெளிவாயிற்று.

மற்றொரு அடியாரான சேர மன்னனான சேரமான் பெருமாளுடன் சுந்தரர் நெருங்கிப் பழகினார். சுந்தரரைக்கண்டு வணங்குவதற்காகச் சேரமான் திருவாரூருக்கு வந்தார். இருவரும் சேர்ந்து பலதலங்களுக்குச் சென்றனர். மதுரையில் சோழ பாண்டிய மன்னர்கள் அவர்களை வரவேற்றுச் சிறப்புச் செய்தனர். இராமேசுவரம் வரை சென்று மீள்கையில் திருச்சுழி, திருக்கானப்பேர், இவைகளைப் பார்த்துக்கொண்டு திருவாரூர் அடைந்தனர்.

சேரமான் வற்புறுத்தலுக்கிணங்கச் சுந்தரர் மேற்குக் கரையில் சேரத் தலைநகருக்குச் செல்ல உடன்பட்டார். திருக்கண்டியூர் சென்றனர். காவிரியின் மறுபுறத்தில் திருவை

யாறு உளது. சேரமான் அங்குச் செல்லவிரும்பினார். ஆனால், பெருவெள்ள மிருந்ததால் ஒடம் செல்லமுடியாம லிருந்தது. சுந்தரர் ஒரு பதிகம் பாடினார். ஆற்று வெள்ளம் இருபுறம் பிரிந்து மணற்பரப்பில் வழிவிட, இரு அடியார்களும் தொண்டர்களும் ஆற்றின் அக்கரையை யடைந்தனர்.

இயற்கையழகு மிக்க காட்சிகளைப் பார்த்துக்கொண்டு மேற்குக் கரைப்புறமாக இரு அடியார்களும் சென்றனர். சேரர் தலைநகரான கொடுங்கோளூரில் சிறந்த வரவேற்பிருந்தது. திருவஞ்சிக் களத்தில் இறைவனைத் தொழுது சுந்தரர் ஊர்வலமாக மன்னரின் பட்டத்து யானைமீதமர்ந்து அழகுறச் செல்ல சேரமன்னன் அவர் பின்னிருந்து கவரிவீச அரண்மனை யடைந்தனர். சேரமானும் அவர் குடிமக்களும் செய்த சிறப்புக்களை இன்புறச் சிலநாள் நுகர்ந்து பின் சுந்தரர் திருவாரூருக்குப் புறப்பட்டார். பிரிவுத் துன்பம் பொறுத்தற்கரியதாயிருந்தது. சுந்தரர் சேரமானுக்குத் தேறுதல்கூறி விடைபெற்றார். சேரமான் சுந்தரருக்கு அரிய பரிசில்கள் வழங்கினார். வழியில் திருமுருகன் பூண்டியில் சிவகணங்கள் வேடர் வடிவில் தோன்றி அவற்றைப்பற்றிச் சென்றன. சுந்தரர் கோயிலுக்குச் சென்று இறைவனிடம் முறையிட்டார். வேடுவர் பறித்துச்சென்ற பொருள் வியக்கத்தக்க வகையில் மீண்டும் கிடைத்தது.

திருவாரூரில் சிலநாள் தங்கி மறுபடியும் சுந்தரர் சேர நாட்டிற்குப் புறப்பட்டார். கொங்கு நாட்டில் திருப்புக்கொளியூரில் ஒரு தெருவில் ஒரு வீட்டில் அழுகையொலியும் அதற்கெதிர் வீட்டில் மங்கல ஒலியும் எழுந்தன. சுந்தரர் இதற்குக் காரணம் கேட்டார். இரு பிள்ளைகள் குளிக்கச் சென்றபோது ஒரு பிள்ளையை முதலை விழுங்கியது ; முதலை விழுங்கிய பிள்ளை வீட்டினர் அழுதுகொண் டிருந்தனர் ; உயிர் தப்பிவந்த பிள்ளைக்குப் பூணூல் அணிவிழா நடந்துகொண்டிருந்தது என்று தெரியவந்தது. பிள்ளையை யிழந்த பெற்றோர் தம் வருத்தத்தைக் காட்டாமல் வந்து சுந்தரரை வணங்கி நின்றனர். அவர்கள் அன்பைக்கண்டு மகிழ்ந்த சுந்தரர் குளத்தருகில் சென்று இறந்த பிள்ளையை மீண்டும்

தரர் சொல்லி இறைவனை வேண்டிப் பதிகம் பாடினார். அற்புதம் நிகழ்ந்தது. முதலை பிள்ளையைத் திரும்பத் தந்தது.

இவ்வற்புத நிகழ்ச்சிபற்றிய செய்தி எங்கும் பரவியது. சேரநாட்டு மக்களும் இதனைக் கேள்வியுற்றனர். அவர்கள் சுந்தரரை மிக்க மகிழ்ச்சியோடு வரவேற்றனர். சேரமான் அளப்பரும் மகிழ்ச்சிகொண்டார். வெண்கொற்றக் குடை பிடித்துச் சுந்தரரை அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். சேரமான் திருமஞ்சனம் செய்துகொண் டிருக்கும்போது சுந்தரர் திருவஞ்சைக்களம் சென்று தம்மைக் கயிலைக்கு அழைத்துக் கொள்ளுமாறு இறைவனை வேண்டினார். சுந்தரரை யழைத்துவருமாறு தேவர்களையும் வானவர்களையும் இறைவன் அனுப்பினார். அவரையழைத்துச் செல்ல வெள்ளானையொன்று வந்தது. சுந்தரர் அதன்மீதமர்ந்து கயிலைக்குப் புறப்பட்டார். இதற்குள் சேரமானும் அங்கே வந்து அங்கிருந்த குதிரையின் காதில் சிவமந்திர முரைத்து ஏறியமர்ந்தார். குதிரை புறப்பட்டு வெள்ளானையை வலம்வந்து முன்செல்லத் தொடங்கியது. சேர வீரர்கள் சுரிகையால் தங்கள் உடலை வீழ்த்தி வீரயாக்கையுடன் தங்கள் தலைவரைத் தொடர்ந்தனர். அடியாரிருவரும் கயிலையடைந்தனர். சுந்தரர் இறைவன் திருமுன் செல்ல வாயிற்காவலர் சேரமானை வெளியே நிறுத்தினர். சேரமானையும் திருமுன் அழைத்துக் கொள்ளும்படி இறைவனை சுந்தரர் வேண்டிக்கொண்டார். சிவகணத் தலைவரான நந்தியின் ஆணைபெற்றுச் சேரமானையும் இறைவன் திருமுன் அழைத்துச் சென்றனர். இறைவன் திருமுன் நின்று அடியார்களிருவரும் அவர் புகழ்பாடி அவருக்குத் தொண்டு செய்தனர். இறைவியாம் பார்வதியினருளால் சுந்தரரின் இரு மனைவியரும் கயிலைக்கு வரவழைக்கப் பட்டனர். பரவையாரும் சங்கிலியாரும் மீண்டும் கமலினி அனிந்திதையாயினர்.

சகமார்க்கத்தையே சுந்தரர் வாழ்க்கை பெரிதும் விளக்குகிறது. அதாவது நண்பருடன் உரிமையாகப் பழகுவதை வாழ்க்கை தெளிவாக்குகிறது. ஆனால், சுந்தரர் நட்புரிமை கொண்டது இறைவனிடத்தாகையால் இறைவன் உயர்வை

அவர் மறந்ததில்லை. இறைவனையே முழு முதலாகக் கொண்ட அவர் நட்பு பொதுவாகக் காணப்பெறும் எளிய வகையைச் சார்ந்ததன்று. அவர் பதிகங்களில் நட்புக்குரிய அணுக்கத் தன்மையைக் காணலாமெனினும் அவை ஆழ்ந்ததொண்டு உணர்ச்சியில் பிறந்தவையாம்.

சுந்தரர் 38,000 பதிகங்கள் பாடியதாக மரபு. ஆயின் இப்போது கிடைப்பவை ஒருநூறு பதிகங்களே. இப்பதிகங் களில் அவர் வாழ்க்கை பற்றிய பல குறிப்புக்கள் காணலாம். தமக்கு முன் வாழ்ந்த சம்பந்தர் திருநாவுக்கரசர் போன்ற பல அடியார்களைப் பற்றியும் குறிப்புக்கள் அவற்றிலே உள. தமக்கு வேண்டியது இவ்வுலகப் பொருள் எதுவாயினும் அதை இறைவனிடம் கேட்கத் தயங்குவதில்லை. எப்படி பேரின் பம் இறைவனுடைய அருள் அளிப்போ அப்படியே சிற்றின் பமும் அவருடைய அருளால் பெறற்பாலதே என்பது சுந்தர ருடைய துணிபு.

சுந்தரரும் தமக்கு முன்னிருந்த அடியார்களைப்போல சிவ பெருமானின் பெருமையைப் பரக்கப் பேசுகிறார். சிவன் உட னுயும் வேறுயுமிருப்பவர். அவர் எப்பொருளினூடும் இருப் பவர். ஆயினும், எதற்கும் மேற்பட்டவர். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளையும் பற்றிக் குறிப் புக்கள் அவர் பதிகங்களில் உள. சுந்தரர் தம் விடுதலையை மட்டும் கோரவில்லை. பிறரும் வீடுபேறடைய வேண்டுமென் பதே அவர் அவா. இறைவனே அவரைத் தோழனுகக் கொண் டாலும் சுந்தரர் பணிவுகொண்டவர், தம் குறைகளையுணர்ந் தவர். தம் பிழைகளுடனேயே தம்மை இறைவனுக்குத் தந் தார். இறைவனும் அவரை அப்படியே ஏற்றுக்கொண்டார்.

# மாணிக்கவாசகர்

தலைவன் தலைவி முறையில் இறைவனிடம் பழகுவதில் தனிச் சிறப்பும் உண்டு; தனிப்பட்ட இடர்ப்பாடுகளும் உண்டு. இம்முறையில் கடவுளிடம் பழகும் அடியார்கள், ஆணாயினும்சரி, பெண்ணாயினும் சரி தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் கருதுகின்றனர். இம்முறையின் அடிப்படைக் கொள்கை கடவுள் ஒருவரே ஆண் (தலைவர்), பிற உயிர்கள் அனைத்தும் பெண் (தலைவிகள்) என்பதாம். கோபியர்களுடன் ஸ்ரீ கிருஷ்ணன் உறவு கொண்டதாக உள்ள உவமைக் கதை இவ்வுண்மையைச் சுட்டிக் காட்டுகிறது. பிருந்தாவனத்து ஆய்ச்சியர் அன்பே தலையாய அன்பு என்று நாரதர் தம் பக்தி சூத்திரத்தில் பாராட்டுகிறார். இந்து சாஸ்திரங்களில் இறைவனிடம் பெறும் பேரின்பம் சிற்றின்பத்தோடு ஒப்பிட்டுப் பேசப்படுகிறது. அடிப்படை உண்மையை உணராது இவ்வுவமைகளை அவை உள்ளவாறே மெய்யெனக் கொள்வது இடர்ப்பாடு விளைவிப்பதாகும். இந்து சமயத்தின் உட்பிரிவுகள் சிலவற்றில் இவ்வாறு கொண்டதால் இழிவான வழக்கங்கள் ஏற்பட்டன. ஆனால். தலைவன் தலைவி முறை தூயதாக உள்ளபொழுது மிகச் சிறந்து விளங்கியது. இறைவனிடம் முழுவதும் ஈடுபட்டிருப்பதும் அவரொருவருக்கே ஆட்செய்வதும் அவரையே அடைய வேண்டும் என்று மிகுந்த ஆர்வம் கொள்வதும் இம்முறையில் காணலாகும்.

மாணிக்கவாசகர் வாழ்க்கையிலும் அவர் மணிமொழிகளிலும் சிறந்த தலைவன் தலைவி முறையைப் பார்க்கிறோம். இம்முறையில் நேரக்கூடிய இடர்ப்பாடு இறைவனை ஆசிரியராகவும் உடன் கொள்வதால் நீக்கப் பெறுகிறது. சிவபெருமான் முதலில் குருவாகத் தோன்றி மாணிக்கவாசகரை ஆட்கொண்டார் இவ்வாறு இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட பின்னர் இறைவனுக்குத் தொண்டு செய்து அவருடன் இரண்டறக் கலத்தலை விடப் பிறிதொரு கடமையும் தமக்கில்லையென மாணிக்கவாசகர் உணர்ந்தார்.

மாணிக்கவாசகர் பாடிய திருவாசகம், திருக்கோவை யார் இரண்டும் சைவத் திருமுறைகளில் எட்டாவதாகத் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. திருவாசகத்திற்கு உருகா தார் ஒரு வாசகத்திற்கும் உருகார் என்றொரு பழமொழி நிலவுகிறது. மாணிக்கவாசகரின் பாக்கள் சொல்லழகும் பொருளழகும் வாய்ந்து உள்ளத்தை யுருக்கும் தன்மையுடை யன. பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த இராமலிங்க அடிகள் மாணிக்கவாசகரைப் பாராட்டிப் பின் வருமாறு பாடியுள்ளார்.

வான்கலந்த் மாணிக்கவாசக நின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவை
[கலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாம லினிப்பதுவே.

சேக்கிழார் இயற்றிய பெரிய புராணத்தில் மாணிக்க வாசகரின் வாழ்க்கை வரலாறு இல்லை. திருவாதவூரடிகள் புராணம் அடிகளாரின் வரலாறு முழுவதையும் தருகிறது. வரலாற்றின் சில பகுதிகளைமட்டும் பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனி வர் இயற்றிய திருவிளையாடற் புராணம், திருப்பெருந்துறை புராணம், திரு உத்தரகோசமங்கைப் புராணம் போன்றவற் றில் காணலாகும்.

பாண்டியர்களின் தலைநகரான மதுரைக்கருகில் உள்ள திருவாதவூரில் ஆதிசைவர் மரபில் மாணிக்கவாசகர் பிறந் தார். (காலம் கி. பி. மூன்றும் நூற்றுண்டு, ஆறும் நூற்றுண்டு இவ்வரையறைக்குள் இருந்திருக்கலாம்) இவர் பிறந்த அமாத் தியர் குலத்திலிருந்துதான் மன்னர்களுக்கு அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதுவழக்கம். இவர் தகப்பனூர்சம்புபாதாசிரதர், தாயார் சிவஞானவதி. இவருக்குப் பெற்றோரிட்ட பெயர் யாதெனத் தெரியவில்லை. பிறந்த ஊரின் பெயராகத் திருவாத வூரர் என்ற பெயர் வழங்கி வந்தது. தக்க வயதில் கல்வி பயி லத் தொடங்கிப் பதினறும் ஆண்டிற்குள் சாத்திரங்கள் கலை

கள் அனைத்தும் உணர்ந்தவரானார். இவர் கல்வித் திறனைக் கேள்வியுற்ற பாண்டிய மன்னன் இவரை யழைத்துவரச் சொன்னான். இவர் மேம்பாட்டை யறிந்து தென்னவன் பிரம ராயன் என்ற பட்டமளித்துத் தலைமை யமைச்சராக்கினான். திருவாதவூரர் திறம்பட அமைச்சுத் தொழில் புரிந்துவந்தார். ஆனால், அவர் உட்கருத்து உலகியலினின்றும் விடுபட்டு ஆன் மீய முன்னேற்றத்திற்கான வழிதேடவேண்டும் என்பதே. சிவ பிரானிடம் அவர் கொண்டிருந்த அன்பு வளர்வதாயிற்று. தக்க குருவை நாடியிருந்தார்.

குருவைப் பார்க்கவேண்டும் என்ற முயற்சியில் வெற்றி காண அவர் நீண்டகாலம் காத்திருக்கவில்லை. ஒருநாள் மன் னன் அரசவையிலிருந்தபோது கீழ்க்கடல் துறைமுகத்தில் விற் பனைக்காக நல்ல குதிரைகள் வந்திருப்பதாகத் தூதுவன் செய்தி கொண்டு வந்தான். நல்ல குதிரைகள் வாங்குவ தற்கு வேண்டிய பொருள் எடுத்துக்கொண்டு முதலமைச் சரையே போகும்படி மன்னன் கூறினான். மன்னன் பணி செய் யப் போகும்போது தாம் நாடியிருந்த குரு கிடைக்க வேண்டு மென்று மதுரைச் சொக்கநாதரை முதலில் வணங்கிய பின் திருவாதவூரர் புறப்பட்டார். பரிவாரங்களுடன் நீண்ட பய ணம் செய்து துறைமுகப்பட்டினமான திருப்பெருந்துறையை யணுகும்போது வேத பாராயண ஒலிகேட்டார். ஒலி எழுந்த இடத்தை யடைந்தபோது ஒரு சோலையில் குருந்த மரத்தடி யில் அடியார் சூழ ஒரு குரு வீற்றிருக்கக் கண்டார். சிவபெரு மானே திருவாதவூரரை யாட்கொள்வதற்காக மானிட உருக் கொண்டு இவ்வாறு எழுந்தருளியிருந்தார். மன்னன் பணியை முற்றும் மறந்து தாம் நாடியிருந்த குரு இவரே எனத் துணிந்து அவரிடம் அடைக்கலம் புகுந்தார். திருவருளால் கவிபாடும் ஆற்றல் பெற்றுத் தேனூறும் அழகிய மொழிகளில் இறைவன் புகழ்பாடத் தொடங்கினார். இறைவன் இவர் பாக் களைக் கேட்டு மகிழ்ந்து மாணிக்கவாசகர் என்ற பெயர் கொடுத்தார். மாணிக்கவாசகர் துறவுபூண்டு அடியார் கூட் டத்தைச் சேர்ந்தார். குதிரை வாங்குவதற்காகக் கொண்டு

வந்த பொருளை அடியார் திருப்பணியிலும் கோயில் திருப் பணியிலும் செலவிட்டார்.

மாணிக்கவாசகருடன் வந்திருந்தவர்கள் திருப்பெருந் துறையிலேயே சில நாளிருந்து பார்த்தனர். குதிரைக ளுடனோ அவையின்றியோ மதுரை திரும்ப மாணிக்கவாசகர் உளங்கொண்டதாகத் தெரியவில்லை. எனவே, அவர்கள் மதுரை சென்று நிகழ்ந்தவற்றை மன்னனிடம் கூறினார்கள். மன்னன் சினங்கொண்டு உடனே மதுரைக்கு மீளுமாறு மாணிக்கவாசகருக்கு ஓலையெழுதி யனுப்பினான். இறைவ னுக்கு ஆடிமையாகிய தமக்கு இப்போது அவரைத் தவிர வேறு யார் தலைவராக இருக்கக்கூடும்? எனவே, தம் குருவை யடைந்து தாம் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டார். மதுரைக்குச் சென்று ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரு மென்று சொல்லும்படி மாணிக்கவாசகருக்கு இறைவன் கட் டளையிட்டார். அரிய மாணிக்கம் ஒன்று கொடுத்து மன்ன னுக்குத் தரச் சொன்னார்.

மாணிக்கவாசகர் மதுரைக்குச் சென்று குதிரைகள் ஆவணி மூலத்தன்று வருமென்று சொல்லித் தாம் கொண்டு வந்த மாணிக்கத்தைக் கையுறையாகக் கொடுத்தார். அமைச் சர் நடவடிக்கைகளில் ஐயங்கொள்வதற்கிடமில்லை யென்று கண்டு மன்னன் மகிழ்ச்சிகொண்டான். ஆனால், இம்மகிழ்ச்சி நிலைத்திருக்கவில்லை. ஆவணி மூலநாள் நெருங்கிக்கொண் டிருந்ததும் திருப்பெருந் துறையிலாவது அங்கிருந்து மதுரை வரும் வழியிலாவது குதிரைகள் வரும் அறிகுறிகள் ஒன்றும் காணவில்லை யென்று ஒற்றர்கள் மன்னனிடம் கூறினர். மன்னன் வெகுண்டு அமைச்சரைச் சிறையிலடைத்து ஒறுக் கும்படிக் கட்டளையிட்டான். தமக்கு அருள்புரியுமாறு மாணிக்கவாசகர் இறைவனை வேண்டிக்கொண்டார். இறை வன் முன்பு சொன்ன சொல் தவறவில்லை. ஆவணி மூலத் தன்று குறிப்பிட்ட நேரத்தில் மதுரையில் பரிகள் வந்து சேர்ந்தன. புதுமையான தோற்றமுடைய வேற்று நாட்டினர் குதிரைகளைச் செலுத்திக்கொண்டு வந்தனர். இறைவன் குதிரை வீரர்களின் தலைவனாக வந்தார். அழகிய குதிரைகளைக்

கண்டவுடன் மன்னன் மீண்டும் மகிழ்ச்சிகொண்டு அமைச்சரைச் சிறையினின்றும் விடுதலை செய்யச் சொன்னான். சொன்ன சொற்படி எழுந்தருளிய தம் இறைவனைக் காண்பதற்காக மாணிக்கவாசகர் மன்னனிடம் விரைந்து சென்றார். குதிரை வணிகர் தலைவனைத் தனக்குக் காட்டும்படி மன்னன் அடிகளாரைக் கேட்டான். அடிகள் வணிகர் தலைவன் கோலத்தில் வந்த இறைவனைச் சுட்டிக் காட்டியதும் தன்னையறியாமலேயே மன்னன் எழுந்து கைகூப்பி அஞ்சலி செய்தான். எனினும், உடனே தன் முனைப்பு ஏற்பட இவ்வாறு வணங்கியது தவறென நினைத்தான். குதிரைகளைப்பற்றி நுட்பமான கேள்விகள் கேட்டுப் பிறகு குதிரை நூல் வல்லாரைக்கொண்டு அவற்றின் இலக்கணங்களை ஆராய்ந்தான். குதிரைகளுக்கு வேண்டிய எல்லா இலக்கணங்களும் சரியாக இருக்கக்கண்டு குதிரைகளைக் கயிறுமாறித் தரச்சொல்லி வாங்கிக்கொண்டான். வணிகர் தலைவனாகிய இறைவனுக்குப் பொன்னாடை பரிசளித்தான். இறைவன் அதைத் தம் சவுக்கின்மீது ஏற்றுக்கொண்டார். மன்னன் இதை அவமதிப்பதாகக் கருதி வெகுண்டான். ஆனால், இவ்வாறு ஏற்றுக்கொள்ளுதல் அந்நாட்டினர் வழக்கம் என்று அடிகளார் கூறினார். வணிகத் தலைவரும் உடன் வந்தோரும் விடைபெற்றுச் சென்றனர். குதிரைகள் குதிரைப்பந்தியிற் சேர்க்கப்பட்டன.

அன்று நள்ளிரவில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. பெரும் பொருள் கொடுத்து வாங்கிய பரிகள் நரிகளாயின. குதிரைப் பந்தியைவிட்டுத் தெருக்களில் ஓடி குழப்பமும் அழிவும் செய்துவிட்டு மறைந்துவிட்டன. இச் செய்தியறிந்த மன்னன் மீண்டும் சினம்கொண்டான். முதலமைச்சர் தன்னை யேமாற்றியதாக முடிவு செய்தான். அவரைச் சிறையிலடைத்து எடுத்துச்சென்ற பொருளைத் திரும்பத் தரும்வரையில் தண்டிக்கச் சொன்னான். கடும் வெயிலில் வைகை மணலில் அடிகளாரை நிற்கச்செய்து துன்புறுத்தினார்கள். மன்னனுக்கு நல்லுணர்வு உண்டாக்குவதற்காக இறைவன் வைகையில் நீர் பெருகித் தெருக்களிலெல்லாம் வெள்ளம் வரச் செய்தார். இந்நிகழ்ச்சி மாணிக்கவாசகரைத் துன்புறுத்திய

தற்காக ஏற்பட்ட தண்டனை யென்றுணர்ந்த மன்னன் அவரை வரவழைத்துத் தனக்காக இறைவனிடம் பரிந்து பேசச் சொன்னான். வெள்ளம் குறையத் தொடங்கியது. மாணிக்கவாசகர் சொற்படி உடைந்த வைகைக் கரையைப் பழுதுபார்க்க ஏற்பாடுகள் தொடங்கின. குடிமக்கள் இவ் வேலையை மேற்கொள்ளவேண்டும் என்று மன்னன் ஆணை பிறப்பித்தான். ஒவ்வொரு வீட்டவருக்கும் கரையில் அடைக்க வேண்டிய பகுதி வரையறை செய்யப்பட்டது.

வந்தி என்ற மூதாட்டி பிட்டுசெய்து விற்று வாழ்க்கை நடத்திவந்தாள். தனக்குத் தரப்பட்ட பகுதியில் கரை அடைக்க இயலாதவளா யிருந்தாள். கூலியாள் கிடைத்தால் பிட்டினைக் கூலியாகக் கொடுக்க எண்ணங்கொண்டாள். இவ்வாறு வேலை செய்ய ஒருவரும் முன்வரவில்லை. சிவபெரு மானிடம் பேரன்புகொண்ட வந்தி அவரிடமே தன் குறை யிரந்தாள். அவள் வேண்டுகோளுக்கேற்ப வேலை செய்ய ஒரு இளைஞன் வந்தான். திருவிளையாடல் புரிய எண்ணங்கொண்டு சிவனே இவ்வாறு வந்தார். கூலியாள்போல் நடித்து வைகைக் கரையில் விளையாடிக்கொண் டிருந்தார். மன்னன் வந்து பார்த்தபோது வந்தியின் கூலியாள் தனக்கிட்ட வேலையைச் செய்யாதிருப்பதுகண்டுத் தன் கைப்பிரம்பால் முதுகிலடித் தான். கூலியாளின் தோள்மீதிருந்த கூடை மண் நீரில் விழுந்து கரையெல்லாம் அடைபட்டது. பிரம்படி மன் னன் உட்பட எல்லா உயிர்கள் மீதும் பட்டது. வந்தி இறை வன் திருவடியடைந்தாள். கூலியாளாக வந்த இறைவன் மறைந்துவிட்டார். மாணிக்கவாசகரை யவமதித்ததற்காக மன்னனைக் கடிந்து வானில் குரல் கேட்டது. மன்னன் தான் செய்த பிழைக்காக வருந்தி மாணிக்கவாசகரிடம் சென்றான். அவர் சிவயோகத்திலிருந்தார். நாட்டையாளும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி மன்னன் அவரை வேண்டினான். ஆனால், அடிகள் உலகியலில் மீண்டும் ஈடுபடுவதாயில்லை. உலகையும் உலகியலையும் அவர் துறந்துவிட்டார். இறைவன் அவரைத் தில்லைக்கு வரும்படிப் பணித்தார்.

தில்லைக்குச் செல்லுமுன் தம் குருவாக இறைவனைக்கண்ட திருப்பெருந்துறைக்குச் சென்றார். அடியார்கள் சூழத் தம் குரு வீற்றிருப்பதைக் கண்டார். சிலநாள் கழித்து இறைவன் கயிலைக்கு மீள எண்ணங்கொண்டார். அடியார்களும் அவருடன் செல்ல விரும்பினர். திருக்குளத்தில் தழல் தோன்றும் போது அதில் கலந்து தம்மை வந்தடையலாம் என்று அவர்களுக்குச் சொன்னார். ஆனால், இதற்கு மாணிக்கவாசகர் விலக்கு. அவர் திருவுத்தர கோசமங்கை, திருக்கழுக்குன்றம் போன்ற தலங்களைப் பார்த்துக்கொண்டு தில்லைக்குச் சென்று இறைவன் புகழ்பாடி மக்களுக்குச் சிவபெருமானுடைய பெருமையை உணர்த்தவேண்டி யிருந்தது.

திருவுத்தரகோச மங்கையில் மாணிக்கவாசகர் இறைவன் காட்சி பெற்றார், அங்கிருந்து வேறு பல தலங்களுக்குச் சென்றார். திருவண்ணாமலையில் இறைவன் மீண்டும் குருவாகக் காட்சி தந்தார். மாணிக்கவாசகர் திருவண்ணாமலையிலிருந்தபோது மாதங்களின் மிகப் புனிதமான மார்கழிமாதம் வந்தது. மார்கழி மாதத்தில் பொழுது விடிவதற்குமுன் மணமாகாத இளம் பெண்கள் துயில்நீங்கி எழுந்து கூட்டமாகக் குளத்திற்குச் சென்று நீராடிக் கோயிலுக்குச்சென்று ஒன்றுசேர்ந்து பாடி இறைவனை வணங்குவர். இவ்வழி பாட்டை உளத்திலமைத்து மாணிக்கவாசகர் திருவெம்பாவை பாடினார். திருக்கழுக்குன்றத்தில் மீண்டுமொரு முறை இவருக்குக் குருவின் காட்சி கிடைத்தது.

தலயாத்திரையின் இறுதிப்பகுதி தொடங்கியது. அடிகளார் சிதம்பரம் நோக்கினார். சிதம்பரம் சென்றதும் திருவீதிகளைக் கடந்து கோயிலுக்குள் சென்றார். கூத்தப்பிரான் திருமுன் உலகை மறந்து இறைவன் நினைவில் ஒன்றியிருந்தார். இந்நிலையிலிருந்து மீண்டவுடன் இறைவனைப் பல பாடல்கள் பாடிப் புகழ்ந்தார். சிவபெருமான் மூன்று திருமேனி கொள்வதன் பொருளையுணர்ந்தார். நடராஜர் உருவத் திருமேனி ; மூலஸ்தான இலிங்கம் அரு-உரு ; உருவமில்லாத ஆகாயம் (சிதம்பர ரகசியம்) அருவத் திருமேனி. சிதம்பரத்தில் தமக்குத் திருவடிப் பேறு கிடைக்குமென்று இறைவன்

கூறினமையால் அடிகளார் சிதம்பரத்தின் எல்லைப்புறத்தி லிருந்து வந்தார். சிவயோகத்திலிருந்து தெளிந்தவுடன் கோயிலுக்கு நாள்தோறும் சென்று இறைவனை வழிபடுவார். திருவாசகத்தின் பல பகுதிகள் சிதம்பரத்தில் இயற்றப் பெற்றவை.

பௌத்த சமயத் துறவிகளோடும் தன் ஊமை மக ளோடும் ஒருநாள் இலங்கை மன்னன் சிதம்பரத்திற்கு வந் தான். இலங்கைக்குச் சென்றிருந்த சைவத்துறவி யொருவர் வாயிலாக இலங்கை மன்னனும் ஏனையோரும் சிதம்பரத்தின் பெருமையைப்பற்றிக் கேள்வியுற்றனர். மன்னனும் பௌத்த சமயத்தைச் சார்ந்தவனுயினும் சிதம்பரத்தில் தன் ஊமை மகள் பேசும் ஆற்றல் பெறலாம் என்ற நம்பிக்கை உடையவனு யிருந்திருக்கலாம். சைவர்களை வாதில் வெல்வதற்காகப் பௌத்த துறவிகள் வந்திருந்தனர். பௌத்தர்களோடு வாது செய்வதற்காக மாணிக்கவாசகரை அழைக்கும்படி இறைவன் தீக்ஷிதர்கள் கனவில் தோன்றிக் கூறினுர். வாதம் கோயிலில் நடைபெற்றது. மக்கள் பெருந்திரளாகக் கூடி யிருந்தனர். சோழமன்னனும் வாதத்தை நேரில் கேட்பதற் காக வந்திருந்தான். இலங்கை மன்னனும் அவன் பரிவாரங் களும் அங்கே கூடியிருந்தனர். பௌத்தர்கள் தங்கள் சமயத்தை யெடுத்துரைத்தார்கள். மாணிக்கவாசகர் சிவ பெருமான் பெருமையைப் புகன்றுர். வாதங்களைவிட்டுப் பௌத்தர்கள் சிவனைப் பழிக்கலாயினர். பௌத்தர்கள் நாவி னின்றும் கலைமகளையகற்ற வேண்டுமென்று மாணிக்கவாசகர் இறைவனை வேண்டிக்கொண்டார். அவ்வாறே நிகழ்ந்தது. பௌத்தர்கள் ஊமைகளாயினர். இந்நிலையைப் பயன்படுத் திக்கொண்டு இலங்கை மன்னன் மாற்று நிகழ்ச்சியாகத் தன் ஊமைப் பெண்ணைப் பேசும்படிச் செய்யவேண்டுமென்று மாணிக்கவாசகரைக் கேட்டுக்கொண்டான். மாணிக்கவாசகர் இவ் வேண்டுகோளுக்கிணங்கிப் பௌத்தர்கள் கேட்ட கேள்வி களுக்கு விடை கூறுமாறு ஊமைப் பெண்ணைப் பணித்தார். திருவாசகத்திலுள்ள திருச்சாழல் இலங்கை இளவரசி கூறிய பதிலையமைத்துப் பாடியதாகும். இலங்கை மன்னனும் அவ

னுடன் வந்திருந்தவர்களும் சைவர்களாயினர். ஊமைகளாகி விட்ட பௌத்தர்களுக்கிரங்கி மீண்டும் அவர்களைப் பேச வைக்கவேண்டுமென்று இலங்கை மன்னன் அடிகளை வேண்டிக் கொண்டான். பேசும் ஆற்றலைப் பெற்றவுடன் அவர்களும் சைவர்களாயினர். தாம் மேற்கொண்ட பணி நிறைவேறியவுடன் அடிகளார் தம் இருப்பிடம் சென்றார்.

அந்தணர் உருவங்கொண்டு ஒரு நாள் மாணிக்கவாசகரை யடைந்து அடிகள் அருளிய பாக்களைத் தாம் எழுத விரும்புவதாகக் கூறினார். அடிகள் கூறிக்கொண்டுவர இறைவன் எழுதினார். திருவாசகத்தை எழுதி முடித்தவுடன் தில்லைக்கூத்தனைப் பொருளாக வைத்து அடிகள் கோவை நூலொன்று இயற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அடிகள் பாடியதை இறைவன் எழுதி ஏட்டின் முடிவில் 'வாதவூரன் விளம்பிட அம்பலவன் எழுதியது' என்று குறிப்பிட்டு அழகிய சிற்றம்பலமுடையார் என்று கையெழுத்திட்டுப் பொன்னம்பலத்தின் வாயிற்படியில் வைத்தார். வழிபாட்டிற்காகச் சென்ற தில்லையந்தணர் இறைவன் கையெழுத்தால் எழுதப்பெற்ற ஏட்டைக் கண்டனர். இச்செய்தி எங்கும் பரவியது. மாணிக்கவாசகரிடம் மக்கள் திரண்டு சென்றனர். செய்தியைக் கேட்ட அடிகள் இறைவன் தமக்குச் செய்த தனிப்பேரருளைப் புகழ்ந்தார். பாக்களுக்குப் பொருள் கூறவேண்டுமென்று அன்பர்கள் கேட்க, கோயிலுக்குச் சென்று பொருள் கூறுவதாக மொழிந்தார். அனைவரும் கோயிலுக்குச் சென்றனர். இறைவன் திருவுருவைக் காட்டி 'இவரே பொருள்' என்று கூறி உள்ளே சென்று இறைவனுடன் இரண்டறக் கலந்து மறைந்து விட்டார். ஆறு கடலுடன் சேர்ந்துவிட்டது. அடிகளாரின் அருள் வாழ்வு இவ்வாறு நிறைவெய்தியது.

திருவாசகத்தில் 51 தலைப்புக்களில் 656 பாக்கள் உள்ளன. திருக்கோவையார் 400 பாக்கள் கொண்ட நூல். சிவபெருமானிடத்தில் மாணிக்கவாசகருக்குப் பொங்கித்ததும்பும் அன்பு உள்ளத்தையுருக்கும் இப்பாக்களில் காணலாகும். இறைவனையடைய சைவசித்தாந்தம் வகுக்கும் நான்கு நெறி

களில் சன்மார்க்கத்தையே மாணிக்கவாசகர் பெரிதும் வற்புறுத்துகிறார். சிவஞான சித்தியார் சன்மார்க்க நெறியைப் பின்வருமாறு விளக்குகிறது.

சன்மார்க்கம் சகலகலை புராணவேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாகமேலாம்
பதி, பசுபாசம் தெரித்துப் பரசிவனைக்காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடிஞான
ஞேயமொடு ஞாதிருவும் நாடாவண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றிஞானப்
பெருமையுடையோர் சிவனைப் பெறுவர்காணே.

இறைவன் முதலில் குருவாக எழுந்தருளி மாணிக்கவாசகருக்குத் திருவருள் புரிந்து அவருக்கு மெய்யுணர்வு தந்தருளினார் என்பது குறிப்பிடத் தக்கது. முதன்மையாக அவர் கடைப்பிடித்த ஞானமார்க்கம் சன்மார்க்கம் எனப்பெறும். பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் பற்றிய மெய்யுணர்வும் அறிதல் தொழிலில் நிகழும் காண்பான், காட்சிபோன்ற வேறுபாடுகள் அற்ற உள்ளுணர்வும் ஞானத்தின்பாற்படும். இந்த மெய்யுணர்வே உயிரைத் தளையினின்றும் விடுவித்து முழு முதலோடு ஒன்றுவிப்பது.

திருவாசகம் அடிகளார் பலசமயங்களில் பாடிய பாக்களின் தொகுப்பாகும். பலபாக்களில் திருப்பெருந்துறையில் சிவபெருமான் குருவாக எழுந்தருளித் தமக்கு அருள்புரிந்த செய்திகுறிப்பிடப் படுகிறது. நரியைப் பரியாக்கியது, வைகைக் கரையையடைக்க மண் சுமந்ததுபோன்ற திருவிளையாடல்களைப் பற்றிய குறிப்புக்களும் உள. சமயாசாரியர் நால்வருள் மாணிக்கவாசகரே சைவத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பற்றிப் பெரிதும் பேசுகிறார். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் பற்றிய விளக்கங்களைக் காண்கிறோம். எல்லாவற்றிற்கும் தலைவனாகிய பதி சிவபெருமான். அவரே முழுமுதல். உருவாயும் அருவாயும் இருப்பவர். உயிர்களுக்கு முதலும், நடுவும், முடிவுமானவர். ஆனால்,

இவை தமக்கின்றி இருப்பவர். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களை நடத்துபவர். அனைத்தாம் சமயங்களுக்கும் மெய்யுணர்வுக் கொள்கைகளுக்கும் அவரே பொருளாயுள்ளவர். அடியார்களை ஆட்கொள்வதற்காக அவர் வெவ்வேறு உருக்கொள்ளுகிறார். அன்பே அவருடைய சிறந்த பண்பு. ஓம் என்ற பிரணவமும் ஐந்தெழுத்து மந்திரமும் அவர் சிறப்புப் பண்புகளுக்குரிய குறியீடுகள். உயிர் சிவனைப்பற்றி நிற்பது. சிவனை மறந்த நிலையில் பிறப்பு இறப்பு என்ற சுழலில் சிக்கிப் புல் பூண்டு, புழு, பறவை, விலங்கு, மக்கள் என்ற பலதிறப்பட்ட பிறவிகளுக்குள்ளாகிறது. ஆணவம், மாயை, கர்மம் என்ற மூன்று தளைகளால் உயிர் பிணிப்புறுகிறது. இம்மூவகை அழுக்கினின்றும் நீங்குவதற்காக முழு அன்புடன் இறைவனிடம் அடைக்கலம் புகவேண்டும். மாணிக்கவாசகர் தம்மை நாய் என்றும் நாயினும் கடைப்பட்டவன் என்றும் கூறிக் கொள்ளுகிறார். சிவபெருமானுடைய திருவருளின்றி உயிர்கள் தளைகளினின்றும் விடுபட்டு நிறை வெய்துதல் இயலாததாம். இறையருளைப் பெறுதற்குரிய தகுதி உயிருக்கு ஏற்பட்டவுடன் இறைவன் அதைக் காத்தருள்கிறார். உயிர் எங்கிருந்தாலும் எந்நிலையிலிருந்தாலும், முதன்மையாக வேண்டப்படுவது இறைவனிடத்து இடைவிடாத, தளராத அன்பேயாகும். கண்ணப்பர், சண்டேசுவரர் போன்ற அடியார்களைப் பின்பற்றுவது எல்லோருக்கும் இயல்வதன்று என்பது உண்மையாயினும் உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கும் கருவூலங்களாக இவர்களைக் கொள்ள வேண்டும். இறைபணி, அன்பு, மெய்யுணர்வு என்ற செந்நெறியில் சென்றால் தளைகளினின்றும் விடுபட்டு உயிர் சிவபெருமானோடு ஒன்றிவிடுகிறது.

சிதம்பரத்தில் இறைவனே மாணிக்கவாசகரைப் பாடச் சொல்லி எழுதிய நூல் திருக்கோவையார் என்று முன்னரே குறிப்பிட்டோம். கோவை என்பது தமிழ் இலக்கியத்திற்குத் தனிச்சிறப்பாக அமைந்த செய்யுள் வகைகளுள் ஒன்று என்று கருதப்படுகிறது. கோவையென்பது கோத்து ஒழுங்குபெற

அமைக்கப்பெற்ற பகுதிகளையுடையது என்று பொருள்படும். நுகர்வோரைத் தவிர ஏனையோருக்குப் புலனாகாத அனுபவங்களைப்பற்றிக் கூறுவது கோவை என்று தமிழிலக்கணம் கூறுகிறது. உலகெங்குமே உலகியல் முறையில் தலைவன் தலைவிக்கிடையே நிகழும் அன்புக்கு அடையாளமான குறியீடுகள், மரபுகள் இவற்றை இறைவனுக்கும் உயிருக்கும் நிகழும் அன்புக்கு அறிகுறியாகத் தலைவன் இறைவனோடு இம் முறையில் பழகுபவர் ஆளக்காண்கிறோம். மேல்போக்காக பார்க்கும் போது உலகியல் அன்பே பொருளாகத் தோன்றினும் உண்மைப் பொருள் இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பே. இனிய கவிதை வடிவில் திருக்கோவையாரில் இறைவனைக் கூடுவதில் ஏற்படும் இன்பமும் பிரிவதில் நிகழும் துன்பமும் பேசப்பெறுகின்றன.

திருக்கோவையார் நலத்தைப் பாராட்டும் செய்யுள் ஒன்று வருமாறு :

"ஆரணங் காணென்பர் அந்தனர்; யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர்; காமுகர் காம நன்னூலதென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர் ; எழுத்தென்பர்
இன்புலவோர்
சீரணங் காயசிற்றம்பலக் கோவையைச் செப்பிடினே."

மாணிக்கவாசகர் மிகச்சிறந்த தீர்க்கதரிசியும் கவியுமாவர். தேன் ஊறும் மொழிகளில் சிவபெருமானைப் புகழ்ந்து பாடித் தம்மையண்டினவர் உள்ளத்தில் தெய்வீகப் புரட்சி யுண்டாக்கினார். இறவாப்புகழ் வாய்ந்த அவர் நூல்கள் என்றென்றும் மக்கள் உள்ளத்தையுருக்கி இறைவனிடம் செலுத்தும் தன்மை வாய்ந்தவை. திருவாசகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பின் முன்னுரையை அருள் திரு G. U. போப் அவர்கள்; "வழிபடுவதற்குரிய கடவுள், இறவாமைபற்றிய உறுதி, வழிபாட்டிற்கு அழைப்பு இவை தென்னிந்தியாவில் வேண்டி யிருந்தன. இவற்றைத் தென்னிந்தியா மாணிக்க வாசகரின் பாக்களில் கண்டது" என்று கூறி முடிக்கிறார்.

---

# நம்மாழ்வார்

தென்னாட்டுச் சைவத்திற்கு நாயன்மார்கள் எப்படியோ அப்படியே தென்னாட்டு வைணவத்திற்கு ஆழ்வார்கள் உளர். 'ஆழ்வார்' என்ற சொல் 'இறைவன் அருள் வெள்ளத்தில் ஆழ்ந்து கிடப்பவர், இறைவன் அன்பிலும் இன்பத்திலும் மூழ்கியிருப்பவர்' என்ற பொருளுடையதாம். வைணவக் கொள்கைப்படி திருமாலின் தொண்டர்களான ஆதிசேடன், கருடன் முதலியோரும் அவருடைய ஆயுதங்களான சங்கு சக்கரம் போன்றவையும் பன்னிரு ஆழ்வார்களாக அவதாரம் செய்தார்கள். ஸ்ரீமன் நாராயணனிடத்தில் அன்புகொண்ட மெய்யடியார்கள் பெரும்பாலும் திராவிட நாட்டின் தூய ஆறுகளான தாமிரபரணி, வைகை, பாபஞசினி, காவேரி, இவைகளையடுத்த இடங்களிலே பிறப்பார்கள் என்று ஸ்ரீமத் பாகவதத்தில் (V 38-40) முன் அறிவிப்பு உளது. ஸ்ரீ முஷ்ண மாஹாத்மியத்தில் இவ்வடியார்கள் பிராமணன், க்ஷத்திரியர் போன்ற எல்லா வகுப்புக்களிலும் பிறந்து திராவிட மொழி பாசுரங்கள் பாடி உயர்வற உயர்ந்த உண்மையை யெடுத்தோதுவார்கள் என்று கூறப்பட்டுள்து.

ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களின் தொகுப்பு திவ்யப் பிரபந்தம் எனப் பெயர் பெறும். ஏறத்தாழ ஆயிரம் பாசுரங்கள் கொண்ட நான்கு பகுதிகளாக இவை வகுக்கப் பெறுவதால் நாலாயிரப் பிரபந்தம் எனப்பெறும். நாலாயிரப் பிரபந்தம் மூன்று இரகசியங்கள் என்பவற்றை யெடுத்துரைப் பதாகச் சொல்வதுண்டு. திருமந்திரமாகிய இரகசியம் முதலிரண்டு ஆயிரங்களில் கூறப்படுகிறது. சரம சுலோகம் மூன்றும் ஆயிரத்திலும் நான்காம் ஆயிரத்திலும் பேசப் பெறுகின்றன. திருமந்திரம் மூன்று சொற்களாலானது; ஓம்நம என்ற இரு சொற்கள் முதலாயிரத்திலும் நாராயணாய என்ற சொல் இரண்டாமாயிரத்திலும் விளக்கப்பெறுகின்றன. சரம சோகம் என்பது ஸ்ரீ கிருஷ்ணன் பகவத்கீதையின் முடிவில்

கூறுவது, உயிர் தன்னை அறவே இறைவனிடம் ஒப்புவிக்கவேண்டும் என்று வற்புறுத்துவது வீடுபேற்றுக்கு வழி, வீடுபேறடைவதற்குத் திருமகள் உயிர்களுக்காகத் திருமாலிடம் பரிந்து பேசுவது என்பனபற்றி இருவரிகளில் த்வயமந்திரம் கூறுகிறது.

ஆழ்வார்களில் தலைசிறந்தவர் நம்மாழ்வாராவர். மூன்றுமாயிரமாகிய திருவாய்மொழியும் நான்காம் ஆயிரத்தில் சில பகுதிகளும் அவரியற்றியன. வேதாந்த தேசிகர் திருவாய்மொழியைத் திராவிட உபநிடதம் என்கிறார். இராமாநுஜரும் அவருக்குப்பின்வந்த ஆசாரியர்களும் திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி அல்லது ஈடு என்ற விளக்க உரைகள் வெளி வருவதற்குக் காரணமாயிருந்தனர். ஆசார ஹ்ருதயம் என்பது இவைகளுக்குப் பின் ஏற்பட்ட உரைகளுள் ஒன்று. வேதாந்த தேசிகர் விரிவான பேருரை ஒன்று எழுதியதாகத் தெரிகிறது.

நம்மாழ்வார் உட்பட எல்லா ஆழ்வார்களுடைய வரலாற்றையும்பற்றித் தெரிந்துகொள்ள உதவும் மூல நூல்கள் திவ்ய சூரி சரித்திரம், பிரபன்னாமிர்தம், குருபரம்பரை பிரபாவம், பிரபந்தசாரம் உபதேச ரத்னமாலை, பழநடை விளக்கம், போன்றவையாம். பிற மெய்யடியார்கள் வரலாற்றைப் போல நம்மாழ்வார் வரலாற்றிலும் எது உண்மையாக நடந்தது, எது கதையாக வளர்ந்தது என்று பிரித்தறிவது எளிதன்று.

நம்மாழ்வாரை உயிராகவும், பொய்கை, பூதம், பேய் ஆழ்வார்களை உள்ளமாகவும் பிற, ஆழ்வார்களை உடலாகவும் கூறுவது வைணவ மரபு. கலியுகத்தின் தொடக்கத்தில் சேனை முதலியார் அல்லது விஷ்வச்சேனர் நம்மாழ்வாராகப் பிறந்து திருமாலிடம் அன்பு செலுத்தும் நெறியைப் புதுப்பித்து வலியுறுத்துவார் என்று பவிஷ்ய புராணத்தில் முன் அறிவிப்பு உளது. பிரமாண்ட புராணம் நம்மாழ்வார் பிறப்பிடத்தை பாண்டிய நாட்டில் தாமிரபரணிக் கரையில் உள்ள ஸ்ரீநகரி (திருநகரி) என்று குறிப்பிடுகிறது.

இப்போது நம்மாழ்வார் பெயரால் ஆழ்வார் திருநகரி என்று வழங்கும் திரு நகரியில் (இதற்குத் திருகுருகூர் என்றும் பெயருண்டு) காரியார் என்றொரு சிற்றரசனிருந்தார். அவர் திருவண்பரிசாரத்தைச் சேர்ந்த உடைய நங்கையாரி என்பவரை மணஞ் செய்து கொண்டார். திருவண்பரிசாரத்திலிருந்து திருக்குருகூர் வரும் வழியில் ஒருநாள் மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த மஹேந்திரமலைக்கருகில் உள்ள திருக்குறுங்குடியில் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள நம்பியென்ற திருநாமமுடைய பெருமாளை வணங்கி மகப்பேறு கோரினார்கள். பெருமாள் அர்ச்சகர் வாயிலாக அவர்களை வாழ்த்தித்தாமே அவர்களுக்கு மகனாக வந்து பிறப்பதாகக் கூறினார். உடைய நங்கையார் கருத்தரித்து உரிய காலத்தில் நன்மகளை யீன்றெடுத்தார்கள், இம்மகவே நம்மாழ்வார் (நம்முடைய ஆழ்வார்) என்று பிற்காலத்தில் உலகத்திற்கு அறிமுகமானது. இக்கலியுகத்தின் நாற்பத்து மூன்றாம்நாள் (கி.மு. 3102) இவர் பிறந்தார் என்பது வைணவ மரபு. இதனை யேற்காத சில அறிஞர்கள் நம்மாழ்வார் பிறப்பு கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கும் ஒன்பதாம் நூற்றாண்டிற்கும் இடையிலிருந்திருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள்.

• திருமாலின் கௌஸ்துபமும் சேனை முதலியாரும்சேர்ந்து பராங்குசர் என்ற நம்மாழ்வாராக அவதாரம் செய்ததாக நம்பப்படுகிறது. திருமாலின் அம்சம், அவருடைய ஐந்து ஆயுதங்கள், ஆதிசேடன், சேனை முதலியார் ஆக எட்டு உறுப்புக்கள் இவ்வவதாரத்தில் பொருந்தியிருப்பதாகவும் ஒரு நம்பிக்கை நிலவுகிறது. இவையெல்லாம் வைணவ அடியார் வரலாற்றில் நம்மாழ்வாருக்குள்ள உயர்வையும் அவருக்கு அளிக்கப்பெறும் பணிவு கலந்த மதிப்பையும் காட்டுவனவாகும்.

காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் பிறந்த குழந்தை பிறகுழந்தைகளைப் போன்றதன்று. குழந்தைகள் பிறந்தவுடனே ‘சட’ என்ற ஒரு பிராணவாயு அவைகளைச் சூழ்ந்து தாய் வயிற்றிலிருந்தபோது அவைகளுக்கிருந்த மெய்யுணர்வை மறைத்துவிடுகிறது என்ற ஒரு பொது நம்பிக்கையுண்டு. குழந்தையாகப் பிறந்தபோது நம்மாழ்வாருக்கு இவ்

வாறு நிகழவில்லை; அவர் இவ்வாயுவைக் கடிந்து நீக்கியதால் 'சடகோபர்' என்ற பெயர் பெற்ருர். அழுதல், பாலுண்ணல் கைகால்களையசைத்தல் போன்ற செயல்களின்றியிருந்த இக் குழந்தையைக் கண்ட பெற்ருேர் வியப்பில் மூழ்கினர். பேச்சின்றி அமைதி, ஒளி, இனிமை விளங்க இக்குழந்தை இருந்தது. குழந்தையை என்ன செய்வதென்று பெற்ருேர்களுக்குத் தெரியவில்லை. பிறந்த பன்னிரண்டாம் நாள் திருநகரியில் உள்ள கோயிலுக்கு எடுத்துச் சென்றனர். பெருமாளை வணங்கிப் பின் பிற குழந்தைகளினின்றும் மாறுபட்டிருந்த இக்குழந்தைக்கு மாறன் என்று பெயரிட்டனர். கோயிலருகிலிருந்த திருப்புளியமரத்தடியில் பொன்ஞல் செய்து வைரமிழைத்த தொட்டிலில் குழந்தையைக் கிடத்தினர். இன்றும் காணக் கூடிய அந்தப் புளிமரம் ஆதிசேஷனின் அவதாரமாகக் கருதப் படுகிறது.

கண்களையும் வாயையும் திறவாமல் புளிமரத்தடியில் நம்மாழ்வார் பதினுருண்டுகள் இருந்தார். தெரியாமல் இறைவனுக்குச் செய்த தவறு இதற்குக் காரணமாயிருக்கலா மென்று பெற்ருேர்கள் நினைத்தனர். இறைவனின் பெருமையை உணரக்கூடிய ஒருவரும் தம்மிடம் வராமையால் நம்மாழ்வார் கண்களைத் திறக்கவோ பேசவோ தேவையில்லை யென்பதை அவர்கள் அறியவில்லை. இறையன்பிலும் இறையுணர்விலும் மூழ்கி நம்மாழ்வார் சமாதி நிலையிலிருந்தார். ஆனுல், காலப்போக்கில் நம்மாழ்வாரின் பெருமையையுணர்ந் தவரும் மிகுந்த பக்குவமடைந்திருந்தவருமான ஒருவர் வந் தார். இவரே மதுரகவியாழ்வார்.

திருக்குருகூரையடுத்த திருக்கோளூரில் மதுரகவி பிறந் தார். சேனை முதலியாரிடம் பணிபுரியும் குமுத கணேசரின் அவதாரமாக இவரைக் கருதுகின்றனர். வேதங்களையும் சமய நூல்கள் பிறவற்றையும் கற்றிருந்த இவர் கவிபாடும் ஆற்ற லுடையவராதலால் மதுரகவி யென்ற பெயர் பெற்ருர். திருமாலிடத்தில் இவருக்கு அன்பு பெருகவே திருப்பதிகளுக்கு யாத்திரையாகச் சென்ருர். வடக்கே அயோத்தியையடைந்து அங்கே ஸ்ரீ இராமசந்திரர் கோயிலில் சிலகாலம் வழிபட்டு

வந்தார். ஓரிரவு தம் பிறப்பிடமாகிய தென்திசையை நோக்க, பேரொளியைக் கண்டார். அது எங்கிருந்து உண்டானதென்பதைக் காண்பதற்காக அதை நோக்கிச் சென்றார். திருக்குருகூரையடைந்ததும் புளிமரத்தடியில் சமாதியிலிருந்த நம்மாழ்வாரிடமிருந்து ஒளியேற்பட்டதென்று கண்டார். சமாதியிலிருந்த உருவத்திற்கு உணர்வு உண்டோ இல்லையோ என்று பார்ப்பதற்காக ஒரு கல்லை எடுத்துப்போட்டார். நம்மாழ்வார் கண்களைத்திறக்க மதுரகவி அவர் உயிருள்ளவர் என்று உறுதிகொண்டார். பிறகு, "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று நம்மாழ்வாரைக் கேட்க அவர், முதல் முறையாக வாய்திறந்து "அத்தைத்தின்று அங்கே கிடக்கும்" என்று பதில் சொன்னார். நம்மாழ்வாரிடம் பேரன்புகொண்டு அவரடிபணிந்து சீடராகத் தம்மை யேற்றுக்கொள்ளும்படி வேண்டினார். நம்மாழ்வார் அவருக்கு அருள்பாலித்துத் தமக்குப் பணிவிடை செய்வதற்கு இசைந்து வைணவ சமயத்தின் இரகசியங்களை உணர்த்தியருளினார்.

கருடவாகனத்தில் திருமகளுடன் பெருமாள் நம்மாழ்வாருக்குக் காட்சி கொடுத்தார். திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமானின் பல கோலங்களையும் கண்டார். இறைவன் புகழை அமுதினுமினிய பாசுரங்களில் பாடினார். வானவரும் முனிவர்களும் புளிமரத்தடியிலிருந்த மெய்யடியாரைக் காண்பதற்காக வந்தார்கள். மதுரகவி இப்பாசுரங்களுக்கு இசையமைத்து மக்களுய்யுமாறு பாடினார். முதலாயிரத்திலுள்ள கண்ணினுண் சிறுத்தாம்பு என்ற பாசுரம் மதுரகவியால் தம் குருவைப்பற்றிப் பாடப்பெற்றது. மரத்தடியில் தியானத்திலிருந்து முப்பத்தைந்தாம் ஆண்டில் நம்மாழ்வார் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

நாலாயிரப் பிரபந்தத்தில் நம்மாழ்வாரியற்றிய திருவாய்மொழி மூன்றுவது ஆயிரமாக அமைந்துளது என்று முன்பு குறிப்பிட்டோம். திருவாய் மொழியைச் சாமவேதத்தின் சாரம் என்பர். நான்காம் ஆயிரத்திலுள்ள மற்ற மூன்று திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதியாகும்.

இவை முறையே, ரிக், யஜுர், அதர்வ வேதங்களின் சாரம் என்பர்.

ஸ்ரீவைணவத்தில் கூறப்பெறும் அர்த்த பஞ்சகம் எனப் பெயரிய ஐந்து பொருள்களைப்பற்றி நம்மாழ்வார் தம் பாசுரங் களில் விளக்கிச் செல்கிருர். இவ்வைந்தாவன: (1) இறைவன், (2) உயிர், (3) நெறி, (4) வீடு, (5) வீடுபேற்றினுக்குத் தடை யாயிருப்பது.

நாராயணனே பரம்பொருள். அவர் அனைத்தாம் நற் பண்புகளுக்கும் உறைவிடம். அவர் தீமையால் தொடக்குருத வர். உயிர்களும் உலகமும் அவர் பண்புகள்(விசேஷணங்கள்). உலகம் யாவையும் ஆக்குதல், நிலைபெறுத்தல், நீக்குதல் ஆகிய முத்தொழில் புரிகிருர். இப்பிரபஞ்சத் தொழில்கள் அவருடைய திருவிளையாட்டாகும் (லீலை). நாராயணனே எல்லாப் பொருள்களுக்கும் வித்தானவர்; பலதிறப்பட்ட உயிர்களுக்கும் பிறப்பிடம். அன்பர்கள் அவரைப் பல உருவங் களில் பல பெயர்களுடன் வழிபடுகிருர்கள். வெவ்வேறு கடவுளரைத் தாம் வணங்குவதாக அவர்கள் நினைக்கலாம். ஆனால் எல்லா வழிபாட்டிற்கும் பொருளானவர் நாராயணன் என்பதே உண்மை,

இறைவனிடம் தன்னை அறவே ஒப்புவித்தல் (பிரபத்தி) விடுதலைக்கு வழியாகும். வேறு நினைவின்றி உயிர் இறைவ னிடம் தன்னை யொப்புவித்தல் வேண்டும். தன் முனைப்பு ஒரு சிறிதுமின்றி இடைவிடாது இறைவனையே நினைக்கவேண்டும். அவரிடம் அடைக்கலம் புகவேண்டும். அவரையே வாழ்க்கை யின் தனிப்பெரும் நோக்கமாகக் கொள்ளவேண்டும். மிக எளிதானதும், பயன்மிக்கதும், அனைவருக்கும் பொதுவானது மான நெறி இறைவனிடம் உயிர் தன்னை ஒப்புவித்தலே. உயிர் இவ்வாறு செய்ததும் இறைவன் தன் அருள் நீராட்டி, தூய்மை செய்து, தடைகளை நீக்கி அதற்கு வீடுபேறு தரு கிருர்.

இறைவன் பெருமையைப் பாடி, உயிர்கள்மீது அவர் கொண்டுள்ள இரக்கத்தால் மீண்டும் மீண்டும் அவதாரம்

செய்வதை அன்பு ததும்பக் கூறுகிறார். பொய்நெறி நீங்கி இறைவனைச் சேருமாறு மக்களுக்கு உணர்த்துகிறார். பொருள் பெறுவதற்காகச் செல்வர்களைப் பாடுவதில் தம் திறனைப் பாழாக்காமல் இறைவனைப் பாடுவதில் தம் ஆற்றலைப் பயன் படுத்துமாறு தம்மையொத்த கவிகளைக் கேட்டுக்கொள்ளு கிறார்.

கிருஷ்ணாவதாரமே நம்மாழ்வாரை மிகவும் கவர்ந்தது. இறைவனையடைய அவர் மேற்கொண்ட நெறி தலைவன் தலை வியர் செல்லும் காதல் நெறியாகும். உயிரே இறைவனின் மணமகள். இறைவனே அதற்கு உண்ணும்சோறும், பருகும் நீரும், நுகரும் எல்லா இன்பமுமாவர். இறையன்பில் தலை நின்றவர் பிருந்தாவனத்துக் கோபியராவர். அவர்கள் முறை யைப் பின்பற்றும் அநுபூதிமான்கள் இறைவனை நாடி அடை கிறார்கள். இறைவனைச் சேரமுடியாத பிரிவாகிய இருள் சூழ்ந்த இரவில் அவர்கள் வாடுகிறார்கள். இறைவனும் உயிர் வேட்கைகொண்டு தம்முடைய உறுப்பாகிய உயிரோடு மீண் டும் சேரவிரும்பி ஏங்குகிறார்.

தாம் அடைந்த ஆழ்ந்த இறையனுபவத்தினால் நம்மாழ் வார் பாடுகிறார். தாம் பெற்ற இன்பத்தை தம்முடன் நுகர்ந்து பங்குகொள்ள அனைவரையும் அழைக்கிறார். தெவிட் டாத இறை இன்பம் இருக்க (ஆராவமுது) எதற்காக மக்கள் துன்பத்தில் முடியும் நிலைபேறில்லா, சிற்றின்பத்திற்காக அலை கிறார்கள் என்று வியப்படைகிறார். எனவே, அவர் "இறை வனை நாடுங்கள் அவர் புகழ் பாடுங்கள். அவரைப் புகலாகக் கொள்க. அவர் பெருமையைப் பேசுக, இடைவிடாது அவர் திருநாமத்தைக் கூறுக, அவர் உங்களைக் காப்பார், உய்விப் பார்" என்று மக்களுக்கு அறிவுரை கூறுகிறார்.

# ஆண்டாள்

தலைவன் தலைவி முறையில் இறைவனுடன் தொடர்பு கொள்வதற்கு ஆழ்வார்களுள் பெண்ணாகப் பிறந்த ஆண்டாளே மிகச் சிறந்த எடுத்துக்காட்டாவர். அழகியல் முறையில் (aesthetic approach) இறைவனையடைய செய்யும் முயற்சி இடர்ப்பாடுடையது. ஆனால், கவர்ச்சி வாய்ந்தது. உபநிடதங்கள் முழுமுதலை (பிரமத்தை)ப் பரம ஆனந்தமாகவும் ரசமாகவும் விவரிக்கின்றன. பக்திநூல்கள் இறைவனை மன்மதனுக்கும் மன்மதனாகவும் புவன சுந்தரனாகவும் பேசுகின்றன. அநுபூதிமான்கள் பலர் தலைவி செலுத்தும் அன்பு முறையை மேற்கொண்டு இறைவனை மணமகனாகக் கருதுகின்றனர். காதலர் ஒருவரை யொருவர் நாடுதல், மணஞ்செய்ய உறுதி கொள்ளுதல், மணஞ் செய்துகொள்ளுதல், ஊடற் பிரிவும் அதனால் ஏற்படும் துன்பமும், மீண்டும் கூடுதல் என்ற உலகியல் காதல் நிகழ்ச்சிகளைப் போலவே இறைவனிடம் தலைவன் தலைவி முறையில் பழகும் அநுபூதிமான்கள் வாழ்க்கையிலும் காணலாகும். அநுபூதிமான்களுடைய காதல் விளையாட்டில் அன்பர்களுக்குள் ஆண், பெண் என்ற வேற்றுமை கிடையாது. ஏனெனில், இறைவன் ஒருவரே ஆண், ஏனைய உயிர்களெல்லாம் அவருடன் ஒப்பிடும்போது பெண்களே என்றாலும், பெண் அடியார்கள் பிறப்பாலேயும் பெண்களாகையால் தலைவி முறை அவர்களுக்கு இயற்கையாக அமைந்துவிடுகிறது. இதனால் ஆண்களைவிடப் பெண்கள் வசதி மிக்கவர்களாகிறார்கள். இறைவனைத் தலைவனாகக்கொண்ட தலைவியர்களில் ஆண்டாளே தலைசிறந்தவர். ஏனெனில் அறியாப் பருவமுதற்கொண்டே ஆண்டாள் இறைவனிடம் தம்மை முழுவதும் யாதொரு தளைகளுமின்றிக் கொடுத்து விட்டார்.

மதுரைக்குத் தென்மேற்கே ஐம்பது கல் தொலைவில் ஸ்ரீவில்லிபுத்தூர் உளது. உடன் பிறந்தோரான வில்லி,

காந்தன் என்ற இரு வில்லியர் தலைவர்கள் இவ்வூரை யமைத்தனர். இறைவன் கட்டளைக்கேற்ப அவர்கள் காட்டையழித்து ஸ்ரீவில்லிபுத்தூர் என்ற புதிய ஊரை யமைத்ததாகப் புராணக் கதை கூறுகிறது. பெரியாழ்வார் என்ற விஷ்ணுசித்தரும் அவர் மகளான ஆண்டாளும் இவ்வூரிலேயே பிறந்தனர்.

விஷ்ணுவையே நினைத்திருப்பவர் என்ற காரணத்தால் விஷ்ணுசித்தர் என்று பெயர்பெற்ற பெரியார் கருடனுடைய அவதாரமென்பர். வழிவழியாட்செய்யும் அந்தணர் குடியில் தோன்றினார். கிருஷ்ணாவதாரமே அவருக்கு மிகவும் உகந்ததாயிருந்தது. இறைவனிடம் கொள்ளும் பல உறவு முறைகளில் குழந்தையிடம் தாய் கொள்ளும் வாத்சல்ய பாவமே பெரும்பாலும் இவர் மேற்கொண்டதாகும். பெருமாளுக்கு எவ்வாறு தொண்டு செய்வது என்று நினைத்துப் பார்த்ததில் வட மதுரையில் கம்சனைப்பார்க்க ஸ்ரீ கிருஷ்ணன் சென்றபோது வழியில்வந்த மாலாகாரர் கொடுத்த மலர் மாலையை அருள்கூர்ந்து அவர் ஏற்றுக்கொண்டது இவர் உள்ளத்தைக் கவர்ந்தது. பூந்தோட்டம் வைத்து விஷ்ணுவுக்கு மிகவும் உவப்பான துளசிச் செடிகள் மிகுதியாக வளர்த்து ஸ்ரீவில்லிபுத்தூர் கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமாளுக்கு நாள்தோறும் மாலைகள் தொடுத்துத்தர உறுதி கொண்டார். அவர் சாஸ்திரங்கள் கற்றவரல்லர். ஒருநாள் பெருமாள் அவர் கனவில் தோன்றி மதுரைக்குச் சென்று பாண்டிய மன்னன் ஸ்ரீவல்லபதேவன் கூட்டிய அறிஞர் சபையில் வைணவ சமயத்தின் மேன்மையை நிலைநாட்டச் சொன்னார். விஷ்ணுசித்தர் அவ்வாறே செய்து வாதில் வென்றார். மன்னன் அவருக்குப் பரிசுகள் தந்தான். அக் காலத்தில் அவரே பெரிய ஆசாரியர் என்று அனைவரும் பாராட்டினர், வானவர்கள் சூழத் திருமகளுடன் திருமால் கருடன்மீது காட்சி கொடுத்து விஷ்ணுசித்தரை வாழ்த்தினர். காணற்கரிய இந்தச் சிறந்த காட்சியைக் கண்ட விஷ்ணுசித்தர் மகிழ்ச்சியிற் மூழ்கினார். ஆனால், இறைவனுக்கு ஊறு ஏற்படுமோ என்று அச்சம் தோன்றியது. தாய்மை உள்ளம் கொண்ட அவர், 'இடர்ப்பாடு மிக்க இவ்வுலகில் விஷ்ணு

இவ்வாறு தோன்றியதால் அவருக்கு இடர் ஏற்படலாம், அவர் அழகு, ஆற்றல், பெருமை இவைகளுக்கு ஏதாவது ஊறு ஏற்படலாம்' என்று நினைத்துப் பெற்றவள் குழந்தையை வாழ்த்துவதுபோல இறைவனை வாழ்த்தினார். திருப்பல் லாண்டு என்ற வாழ்த்துப் பாடலைப் பாடித் தம்முடன் இவ் வாழ்த்தில் கலந்துகொள்ளும்படி அனைவரையும் அழைத்தார். விஷ்ணுவை வாழ்த்தக்கூடிய தகுதி அவருக்கிருந்ததால் அவர் பெரியாழ்வார் என்ற பெயர் பெற்றார்.

மதுரையில் வெற்றியடைந்தபின் மீண்டும் ஸ்ரீவில்லிபுத் தூரில் கோயில் திருப்பணி தொடர்ந்து செய்யலானார். ஒரு நாள் தோட்டத்தில் துளசிச் செடிகளுக்குப் பாத்தி கட்டிக் கொண்டிருக்கும்போது, புதுமையாக ஒரு குழந்தையைத் துளசிச் செடியருகில் கண்டார். அது பச்சிளங் குழவிப் பருவத்தைக் கடந்த ஒரு பெண்குழந்தை. ஜனக மன்னனுக் குச் சீதை கிடைத்ததுபோலப் பெரியாழ்வாருக்கு இக் குழந்தை இறைவன் கொடுத்த பரிசாகும். குழந்தை யில்லாத தம் வீட்டிற்குக் குழந்தையை யெடுத்துச் சென்று கோதை என்ற பெயர் கொடுத்து அன்பும் பரிவும் காட்டி வளர்த்து வந்தார். கோதை என்ற பெயர் பின்னர் ஆண்டாள் என மாறியது. வைணவ மரபுப்படி இது நடந் தது கலியுகத்தில் 97-ம் ஆண்டிலாகும். இக்கால ஆராய்ச்சி யாளர் ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பர்.

சிறந்த முறையில் கோதை வளர்ந்தாள். பூதேவியின் அவதாரமாகையால் தம் தலைவனை விஷ்ணுவிடம் இயல் பாகவே அவருக்கு அன்பு பிறந்தது. பெரியாழ்வாரும் இவ் வன்பு பெருகுவதற்குக் காரணமாயிருந்து, தூய்மை பெறுவ தற்கான சடங்குகள் செய்து வைணவ சமயத்தின் மறை பொருள்களைத் தெரிவித்து விஷ்ணுவின் மேன்மையை விரும் பிப் பாராட்டவும் அவர் கோதையைப் பழக்கினார்.

இளமை தொட்டே கோதை தம்மை ஸ்ரீரங்கநாதரின் பிராட்டியாக நினைத்து வந்தார். வயது வரவர ஸ்ரீரங்நாத ரின் பிராட்டியாவதற்கு எல்லா வகையிலும் தகுதிபெறு வதைத் தவிர வேறொன்றில் கருத்திலரானார். ஸ்ரீவில்லி

புத்தூரில் கோயில் கொண்டுள்ள பெருமாளுக்குத் தம் தகப்ப ஞர் தொடுக்கும் மாலைகளைத் தாம் நாள்தோறும் அணிந்து கண்ணுடியில் பார்த்துக்கொண்டு இறைவன் எழிலுக்குத் தாம் ஈடானவரேயென்று அமைவுகொள்வார். பிறகு மாலை களைக் கழற்றி முன்போல பூக்கூடைகளில் வைத்து விடுவார். தம் மகள் அவற்றையணிந்தசெய்தி தெரியாது விஷ்ணுசித்தர் அவைகளைக் கோயிலுக்கு எடுத்துக் சென்று பெருமாளுக்கு அணிவிப்பார். ஆனல், ஒரு நாள் தம் மகள் செய்வதைக் கண்டு இச்செய்கை இறைவனுக்குக் குற்றமான தென்று நினைத்து மகளைக் கடிந்துவிட்டுக் கோயிலுக்கு மாலைகளை யெடுத்துச் செல்லவில்லை. இறைவன் அவருக்குக் காட்சி கொடுத்து அன்று ஏன் மாலைகள் கொண்டுவரவில்லை என்று கேட்டார். பெரியாழ்வார் நிகழ்ந்ததைக் கூற, இறைவன் கோதை அணிந்த மாலைகளே தமக்கு மிக உகந்தன என்றும் அவற்றைத் தமக்குத் தருவது தவறன்று என்றும் கோதை யின் செய்கை மிகவும் தூய்மையான தென்றும் கூறினுர். இறைவன் கட்டளையைத் தம் மகளிடம் தெரிவித்து மாலை களைக் கோயிலுக்கு எடுத்துச் செல்லுமுன் கோதை அவற்றை யணியும்படி தாமே கூறுவார். கோதை விஷ்ணுவின் பிராட்டி யென்றுணர்ந்த பெரியாழ்வார் அவருக்கு ஆண்டாள் என்ற பெயர் தந்தார். மாலைகளைத் தாம் அணிந்து இறைவனுக்குக் கொடுத்தமையால் சூடிக்கொடுத்த நாச்சியார் என்ற பெயர் பெற்றனர்.

ஆண்டாள் வளர வளர இறைவனிடத்தில் அவர் கொண்ட அன்பும் வளர்வதாயிற்று. நனவில் அவர் எண்ண மெல்லாம் இறைவனை மணஞ் செய்து கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியிருக்கும். கனவெல்லாம் இறைவனுடனி ருக்கும் இன்பத்தைப் பற்றியிருக்கும். யமுனைக்கரையில் பிருந் தாவனத்தில் கோபிகளுடன் ஸ்ரீகிருஷ்ணன் கூடிக் களித்த காலத்திற்குத் தம் தெளிவான கற்பனையாற்றலால் செல்வார். தாமே கோபியாய்விடுவார். காலையிலெழுந்து தோழியரை யெழுப்பித் தூய ஆற்றில் நீராடி நந்த கோபர் மனைக்குச் சென்று தம் நெஞ்சிடங்கொண்ட இறைவனை வணங்குவார்.

மார்கழித் திங்களில் தாம் விரும்பிய இறைவனை மணஞ் செய்து கொள்வதற்காகக் கார்த்யாயனியின் அருளை வேண்டிப் பாவை நோன்பு நோற்றார். தம்மை இறைவனுக்கே விதிக்க வேண்டும் என்று இன்பவாழ்விற்குத் தெய்வமான காமனிடம் வேண்டிக்கொண்டார்.

தம் மகளுக்குக் கடவுள்பித்து மிகுதியாவதைக் கண்டு பெரியாழ்வார் கவலை கொண்டார். திருமணம் செய்வித்தால் இப்பித்து தீருமென்று எண்ணினார். பக்குவமாக இவ்வெண்ணத்தை மகளிடம் ஒரு நாள் தெரிவித்து அவர் யாரை மணஞ் செய்துகொள்ள விரும்பினார் என்று கேட்டார். மானிடரை மணஞ்செய்து கொள்வதைவிட இறக்கவே தாம் விரும்புவதாக அழுத்தமாக அவர் பதிலுரைத்தார். இறைவனை மணஞ் செய்துகொள்ளத் தாம் உறுதி கொண்டதாகவும் இவ்வுறுதியை எக்காரணத்தாலும் தாம் விடப்போவதில்லை யென்றும் கூறினார். விஷ்ணு கோயில் கொண்டுள்ள திருப்பதிகள் நூற்றெட்டாகும். ஒவ்வொன்றிலும் ஒரு தனிக் கோலத்திலிருக்கிறார். இவற்றுள் திருமணத்திற்காக எதனைத் தேர்ந்தெடுப்பது ? ஒவ்வொரு கோலத்தின் தன்மையையும் சிறப்பையும் விளக்கினார். ஸ்ரீரங்கநாதரைப்பற்றி விளக்கிக் கூறும்போது ஆண்டாள் உளம் நெகிழ்ந்து கண்ணீர் பெருக மெய்சிலிர்த்துத் தம் வயம் இழந்தார். ஸ்ரீரங்கநாதரையே அவர் உளங்கொண்டார் என்பது தெளிவாயிற்று. ஆனால், இத்திருமணம் எவ்வாறு நிகழக்கூடும் ?

ஸ்ரீரங்கநாதர் பெரியாழ்வாருக்குக் காட்சி கொடுத்து அவர் அச்சத்தைப் போக்கி இவ்வற்புதம் நிகழும் என்றும் தாமே திருமணத்திற்கு ஏற்பாடு செய்வதாகவும் கூறினார். கோயில் மரியாதைகளுடன் ஸ்ரீ வில்லிபுத்தூருக்குச் சென்று தாம் மணஞ் செய்துகொள்ளப்போகும் ஆண்டாளைத் தம்மிடம் அழைத்துவரும்படி அர்ச்சகர்களுக்குக் கட்டளையிட்டார். தொண்டர்களும் அர்ச்சகர்களும் தொடரப் பெரியாழ்வார் முன்செல்ல ஒரு பல்லக்கில் ஆண்டாள் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். உள்ளே சென்று அழகு வாய்ந்த இறைவனைப் பார்த்தவுடன் அவரிடம் ஈர்க்கப்பட்

டார். பாம்பணையில் பள்ளிகொண்டுள்ள பெருமாள் பக்கம் சென்று அணைமீது ஏறிப் பெருமாள் பக்கம் நின்றார். உடனே பெருமாளுடன் ஒன்றாகி மறைந்தார். அங்கிருந்தவர்களெல்லாம் வியப்பில் மூழ்கினர். பெரியாழ்வார் இன்பமும் துன்பமும் பொங்கக் கண்ணீர் உகுத்தனர். தம்மகள் பெருமாளுடன் சேர்ந்துவிட்டதால் இன்பம், தம்மைவிட்டு நீங்கியதால் துன்பம். இறைவன் குறல் கேட்டது—பெரியாழ்வாரைத் தம் மாமனார் என்று அழைத்து ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஸ்ரீரங்கநாதர், ஆண்டாள் உருவங்களை வைத்து அன்புடனும் ஆர்வத்துடனும் வழிபடவும் முன்வழக்கமாகச் செய்திருந்த திருப்பணியைத் தொடர்ந்து செய்யவும் ஆணை பிறந்தது.

திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்பன ஆண்டாளியற்றிய பிரபந்தங்களாகும். இவை முதலாயிரத்தைச் சேர்ந்தவை. அவையிரண்டும் காதல் பாக்கள்—முழு ஏக்கம், தவிப்பு முதல் தலைவனோடு கூடியதால் உண்டாகிய கட்டிற் கடங்கா மகிழ்ச்சி, அமைதியான இன்பம்வரை பல உணர்ச்சி நிலைகளைக் காட்டுவன. தலைவன் இங்கே இறைவன் என்பதை நாம் நினைவு கொள்ளவேண்டும்.

மார்கழித் திங்களில் கன்னிப் பெண்கள் பாவைநோன்பு நோற்கிறார்கள். நாள்தோறும் காலையில் எழுந்து தாம் தகுந்த மணமகனைப் பெறுவதற்காகவும் நாடு நலம் பெறுவதற்காகவும் காத்யாயனியின் அருளை வேண்டி வணங்குகிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணனை யடைவதற்காகப் பிருந்தாவனத்துக்கோபியர் இந் நோன்பை மேற் கொண்டனர். இம் முறையைப் பின்பற்றித் திருப்பாவையில் ஆண்டாள் கோபியர்களுள் தம்மையும் ஒருவராகக் கருதி ஸ்ரீ கிருஷ்ணனிடம் கொண்டுள்ள அன்பையும் காதலையும் வெளிப்படுத்துகிறார். இந்தப் பாக்களில் தம்மையே இறைவனுக்குப் பரிசாகத் தந்து அவருடைய அடிமையாக உறுதி பூண்டு இறைவன் தம்மை ஏற்றுக்கொள்வதையே பெரும் பேறாகக் கருதிப் பாடுகிறார்கள், முப்பது நாட்களுக்கேற்ப முப்பது பாசுரங்களில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவிளையாடல்கள், இளமையிற்செய்த குறும்புகள். வெற்றிச் செயல்கள் இவை போற்றப் படுகின்

றன. ஒவ்வொரு பாசுரத்தின் மையக் கருத்தும் அன்பு கொண்ட உயிரின் காதலை இறைவன் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்பதேயாகும்.

இறைவனிடத்துக் காதலே திருமொழியின் மையக் கருத்தாகும். இது திருப்பாவையைவிட அளவில் பெரிய பிரபந்தம். தாம் மணஞ்செய்துகொள்ள வேட்கைகொண்டுள்ள இறைவனிடம் ஆண்டாள் கொண்டுள்ள கரைகடந்த காதலை இதன் ஒவ்வொரு சொல்லும் எடுத்துக் காட்டுகிறது. காதல் மையல் ஏறிய பெண் செய்யும் ஒவ்வொன்றையும் ஸ்ரீ கிருஷ்ணனையடைவதற்காக ஆண்டாள் செய்கிறார். தமக்காகத் தலைவனிடம் பரிந்து பேசி அவரிடம் தம்மைச் சேர்க்குமாறு காதலர் தெய்வமாகிய காமனை வேண்டிக் கொள்கிறார். தம் தோழியர் வாயிலாகவும் பறவைகள் மேகங்கள் வாயிலாகவும் காதற் செய்திகளை ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அனுப்புகிறார். இயற்கைப் பொருள்களிடம் தலைவன் தம் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்கவில்லை யென்று குறை கூறுகிறார். இறைவனை மனஞ்செய்து கொண்டு அவரோடு இன்பமாக வாழ்வதாக இனிய கனவு காண்கிறார். விழித்தெழுந்ததும் இக் கனவைத் தோழியரிடம் கூறுகிறார். இறைவனுள்ள இடத்திற்குத் தம்மை யழைத்துச் செல்லுமாறு வேண்டிக்கொள்கிறார். ஓய்வின்றி அலைந்து அகப்பட்டோரை யெல்லாம் தம் தலைவனைப் பார்த்தார்களா என்று கேட்கிறார், பிருந்தாவனத்தில் அவனைக் கண்டதாக அவர்கள் கூற ஊக்கங் கொண்டு பயணத்தைத் தொடர்ந்து செய்கிறார். ஆண்டாள் கொண்டுள்ள கரைபுரண்டோடும் காதலைத் தெளிவாகவும் நயமாகவும் கூறும் இவ்வழகிய பாக்கள் தலைவன் தலைவி நெறியை மிக விளக்கமாக நமக்குக் காட்டுகின்றன.

---

## சங்கரர்

சங்கரர் தோன்றிய காலம் நாம் வாழும் இக்காலத்தை யொத்திருந்தது. குழப்பமும் பூசலும் ஆன்மீய வறட்சியும் சமூக ஒற்றுமையின்மையும் ஏற்பட்டிருந்த காலமது. நாடு ஆளும் தலைவனின்றியிருந்தது. சமயம் வழிகாட்டுவோறின்றி யிருந்தது. அக்காலத்திலிருந்த வருந்தத்தக்க நிலையைத் தம் பிரம்ம சூத்திர பாஷ்யத்தில் சங்கரர் பின்வருமாறு குறிப்பிடுகிறார். " இக்காலத்தவர் கடவுளரோடு உரையாட முடியாதவராயிருத்தல் போல முற்காலத்தவரும் இயலாதவராயிருந்தனர் என்று கூறுவோர், இவ்வுலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ் இப்போது ஆள்வோர் (சார்பௌமர்) இன்மையால் முற்காலத்திலும் அத்தகைய மன்னர்கள் இருந்ததில்லையென்று வாதிக்கலாம். அல்லது, வாழ்க்கையின் வருணங்கள் ஆஸ்ரமங்கள் பற்றிய தொழில்களும் கடமைகளும் இப்போது பொதுவாக நிலை குலைந்திருப்பதைப் போல முற்காலத்திலும் இருந்திருக்கலாம் என்று வாதிக்கலாம்." சங்கரர் காலத்தில் இந்தியா அரசியலில் பிரிவுகளுக்குள்ளாகியும் சமூகத்தில் சீர் குலைந்தும் இருந்தது. கணக்கற்ற சிற்றரசுகள் தம்முள் ஒற்றுமையின்றித் தலைமைக்காக ஒன்றோடொன்று போரிட்டுக் கொண்டிருந்தன. சமூக வகுப்புக்கள் தம் கடமைகளில் கருத்தின்றி உரிமைகளுக்காகக் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தன. வெறுப்புணர்ச்சி பகைமையை யுண்டாக்கியது. தன்னலத்திற்கும் பேராசைக்கும் அமைதி இரையானது. காலத்தின் போக்கை யுணராது சாஸ்திரங்களில் உட்பொருளைவிட்டு வெற்றுரைகளைப்பற்றி நிற்போரும் (Literalists) சடங்குகளை முதன்மையாகக்கொள்வோரும் (Ritualists)ஒருபுறம்; பழமையும் புனிதமும் வாய்ந்த அனைத்தையும் பறித்து அழிக்க முற்பட்ட சூன்யவாதிகளும் சிலையுடைப்புக் கொள்கையினரும் (Iconoclasts) மறுபுறம். மெய்யுணர்வுக் கொள்கைகளிலிருந்த குழப்பத்தோடு சமய வழிபாட்டு முறைகளிலும் பகைமை

காணப்பட்டது. மெய்ப்பொருள் ஒன்றே என்ற வேதத்தின் பழைய அறிவுரையை மக்கள் மறந்தனர். இறைவனைப்பற்றிய தங்கள் குறுகிய கருத்துக்களைப்பற்றிக் கொண்டு, வெறியுணர்ச்சி கொண்டு சமயத்தில் வாழ்க்கைக்கு வேண்டிய ஆறுதல் காண்பதை விட்டு அதனை எதிர்ப்புக் கருவியாகக் கையாண்டனர்.

முழுவதும் குழப்பமும் பூசலுமாயிருந்த காலத்தில்தான் சங்கரர் பிறந்தார். நெஞ்சிலும் உள்ளத்திலும் ஏற்பட்ட புண்களை ஆற்றுவதிலும் ஆன்மீயத் தெளிவிற்கும் நலத்திற்கும் மக்களுக்கு வழிகாட்டுவதிலும் தாம் இவ்வுலகில் வாழ்ந்த குறைந்த காலத்தைச் செலவிட்டார். மிகச் சிறந்த ஆன்மீய மருத்துவரானதால் சமூகத்தின் உயிரை வாட்டிய நோய் ஒற்றுமையின்மையால் உண்டானது என்று கண்டார். இந் நோயைத் தீர்க்கக்கூடிய ஒரே மருந்து ஒற்றுமையென்ற காக்கும் அறிவு, இரண்டற்ற பரம்பொருள் என்று உபநிடதங்கள் கொளுத்தும் மெய்யறிவு என்று கற்பித்தார்.

சங்கரர் வாழ்க்கையைப்பற்றிப் புராணக் கதைகளே உள. இவற்றுள்ளும் முரண்பாடுகள் ஆங்காங்கே காணப்படுகின்றன. மாதவர், ஆனந்தகிரி, சித்விலாசர், சதாநந்தர் ஆகியோர் எழுதிய சங்கர விஜயங்கள் உள. பதஞ்சலி விஜயம், சிவரகசியம், பிரம்மாண்ட புராணம், ஸ்காந்தபுராணம் ஆகியவற்றில் சங்கரர் வாழ்க்கையில் நிகழ்ந்த சிலவற்றைப் பற்றிய குறிப்புக்கள் காணலாகும்.

கேரளத்தில் ஆல்வாய் எனுமிடத்திலிருந்து, ஏறக்குறைய ஆறுகல் தொலைவில் சூர்ணநதிக் கரையில் காலடி என்ற அமைதியான ஊர் இருக்கிறது. (சூர்ணநதிக்குப் பூர்ணை என்றும் பெரியாறு என்றும் வேறு பெயர்கள் உண்டு.) இவ்வூரில் நம்பூதிரிகள் இனத்தில் சங்கரர் பிறந்தார். நந்தன ஆண்டில் வைகாசித் திங்களில் புனர்வசு நக்ஷத்திரத்தில் சுக்லபக்ஷம் பஞ்சமி திதியில் சங்கரர் பிறந்ததாக மரபு. இது கலியுகம் 2593-ம் ஆண்டில் (கி. மு. 509) நிகழ்ந்ததாகக்

கூறப்படுகிறது. ஆராய்ச்சியாளர்கள் பெரும்பாலோர் இப்போது ஏற்கும் காலம் கி. பி. 788 என்பதாகும். பர்த்ருஹரிக்குப் பின்னும் (சுமார் 600 கி. பி.) வாசஸ்பதிமிஸ்ரருக்கு முன்னும் (சுமார் 841 கி. பி.) சங்கரர் இருந்திருக்க வேண்டுமென்று ஓரளவு திட்டமாகக் கூறலாம்.

காலடியில் நம்பூதிரி குலத்தில் சிவகுரு என்று ஒருவர் இருந்தார். அவர் மனைவி பெயர் ஆர்யாம்பா. நீண்டகாலம் அவர்கள் மகப்பேறின்றி யிருந்தனர். திருச்சூரிலுள்ள புகழ் பெற்ற சிவன்கோயிலுக்குச் சென்று வருஷாசலேஸ்வரரை மகப்பேறு தந்தருளுமாறு வேண்டிக்கொண்டனர். இவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி இறைவனே சங்கரராகப் பிறந்தார் என்று கூறப்படுகிறது. சங்கரர் முற்போக்கான அறிவுடைய குழந்தையாயிருந்தார். ஐந்தாம் ஆண்டில் உபநயனம் செய்யப்பட்டது. எட்டாம் ஆண்டிற்குள் எல்லா சாஸ்திரங்களையும் கலைகளையும் கற்றுமுடித்தார். ஏறக்குறைய இந்தச் சமயத்தில் இவர் தகப்பனார் காலமாய்விட்டார். சங்கரரைப் பாதுகாத்து வளர்த்து அவர் வாழ்க்கைக்கு வழிசெய்யும் பொறுப்பு முழுவதும் அவர் தாயைச் சார்ந்தது. பிள்ளையின் மனம் துறவறத்தில் சென்றிருப்பதாகத் தாயார் கண்டிருக்கலாம். ஒரே பிள்ளையாதலால் அவரையிழக்கத் தாயாருக்கு மனம் வரவில்லை. ஆகையால் இளமையிலேயே அவருக்கு மணஞ் செய்விக்க ஏற்பாடுகள் நடைபெறலாயின. ஆனால் சங்கரருக்கு உலகியலில் உளஞ் செல்லவில்லை. குறிக்கோளற்று வாழ்ந்து மரம்போல் கிடந்து சிறிது காலத்தில் வாடிப் போவதற்காகச் சங்கரர் பிறக்கவில்லை. வாழ்க்கையிலேயே மிகச் சிறந்த குறிக்கோளுக்காகச் சங்கரர் பிறந்தார். அதாவது, ஒப்புயர்வற்ற இன்பத்தை மக்கள் பெறவேண்டும் என்பதாகும். இதற்காக அவர் அஞ்சாது உறுதியுடன் பரம்பொருளை நாடித் தாம் பெற்ற இன்பத்தை உலகவர் பெறச் செய்ய வேண்டுமென்ற நோன்பை மேற்கொண்டார். விளையாட்டுப் பொருள்களில் கருத்தைச் செலுத்தும் இளவயதில் அவர் உலகத்தைத் துறப்பதற்கு எண்ணங் கொண்டார். ஆனால், மகன் இப்படிச் செய்வதற்கு (அல்லது செயல்களி

னின்றும் விலகுவதற்குத்) தாயார் உடன்படவில்லை. (ஏனெனில் துறவு என்பதைச் செயல்களைத் துறப்பது என்றும் கொள்ளலாமன்றோ?) எந்தத் தாய்தான் குழந்தையையிழக்க உடன்படக்கூடும்? எனவே, ஓர் அற்புதம் நிகழவேண்டுவதாயிற்று. தாயும் மகனும் நீராட ஆற்றுக்குச் சென்றபோது ஒரு முதலை மகன் காலைப் பிடித்துக்கொண்டது. நெருக்கடியான இந்நிலையில் துறவறத்தை மேற்கொள்வதற்காகத் தாயின் இசைவு கோரினார். உயிர்போகும் தருவாயில் துறவறத்தை மேற்கொள்வது (ஆபத்சந்நியாசம்) என்று ஒரு வழக்கம் உண்டு. சங்கரர் வேண்டுகோள் மறுக்க முடியாததாயிருந்தது. வேண்டா வெறுப்பாகத் தாயார் உடன்பட்டார். சங்கரரை முதலை விட்டுவிட்டு எப்படி மாயமாய் வந்ததோ அப்படியே மாயமாகப் போய்விட்டது. சங்கரர் தீங்கின்றிக் கரையேறினார். துறவு வாழ்க்கையை மேற்கொள்ள உறுதி பூண்டார். ஆனால், ஊரைவிட்டுப் போகுமுன் தாயாரின் இறுதிக் காலத்தில் அவர்களுடனிருப்பதாகவும் இறுதிக் கடன்களைச் செய்வதாகவும் உறுதி கூறினார்.

சிறு வயதான எட்டாம் ஆண்டில் சங்கரர் தம் வீட்டையும் ஊரையும் விட்டு குருவைத் தேடிக்கொண்டு வடக்கே புறப்பட்டார். சங்கரருக்கு ஆயுள் எட்டாண்டுகள்தாம் என்றொரு செய்தி மரபு உண்டு. சங்கரர் ஊரைவிட்டுப் புறப்படுவதற்கு முன் அகஸ்தியர் நாரதர் முதலான மெய்யடியார்கள் சிலர் அவர் வீட்டிற்குச் சென்றனர். சங்கரரும் அவர் தாயாரும் அளித்த வரவேற்பால் மகிழ்ந்து சங்கரர் பின்னுமொரு எட்டாண்டுகள் வாழும்படி வாழ்த்தினர். ஆயுள் இவ்வாறு மிகுதியாயிற்று எனினும் கிடைத்த காலம் வீணாக்க முடியாத அருமை வாயந்ததாக இருந்தது. வடக்கே சென்று நர்மதையாற்றங்கரையில் தம் குருவைகண்டார். கௌடபாதரின் சீடரான கோவிந்தபாதர் ஒரு குகையில் வசித்து வந்தார். கல்வியறிவுடையவர்களும் மெய்யுணர்வினரும் அவரைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டிருந்தார்கள். சங்கரர் அவரையடைந்து தமக்குச் சந்நியாசம் தரும்படி வேண்டிக் கொண்டார். குரு அவரையுடனே ஏற்றுக்கொள்ள இசைந்

தார். சங்கரரைவிட ஏற்றமும் தகுதியும் வாய்ந்த சீடர் வேறு யாரை அவர் எதிர்பார்க்கக் கூடும்? சந்நியாசம் தருவ தற்கான சடங்குகள் நிகழ்ந்தன. சங்கரர் வேதாந்த உப தேசம் பெற்றுர்.

கோவிந்தபாதர் ஆஸ்ரமத்தில் சங்கரர் இருந்தபோது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. நர்மதையாற்றில் வெள்ளம் பெருகி இரு கரைகளிலுமிருந்த ஊர்களுக்குப் பரவியது. வெள்ளத் தில் ஊர்கள் அமிழ்ந்துபோகும் நிலையேற்படவே மக்கள் கலக்கம் கொண்டனர். சங்கரர் ஜலகர்ஷண மந்திரத்தை யுச் சரித்துக் கமண்டலத்தைத் தரையில் வைத்தார். வெள்ளம் வடிந்து போயிற்று. தம் குருவின் ஆஸ்ரமத்தையும் அதன் சுற்றுப்புறத்தையும் வெள்ளத்தினின்றும் சங்கரர் காப்பாற்றி னுர். நர்மதையில் பெருகும் வெள்ளத்தைத் தடுத்துச் சுற் றுப்புறம் அழியாமல் காப்பவரே பிரம்ம சூத்திரத்திற்கு உரை காணவல்லவர் என்று அத்திரி மஹரிஷி முன்னரே கூறி யிருந்தார். குரு கோவிந்தருக்கு இச் செய்தி தெரியும். இஃ தல்லாமலும் சங்கரருடைய பெருமை அவருக்குத் தெரிந் திருந்தது. எனவே, காசிக்குச் சென்று பிரம்ம சூத்திரத்திற் கும் மற்ற இரு பிரஸ்தானங்களான உபநிடதங்கள், பகவத் கீதையாகியவற்றிற்கும் உரை காணும் திருப்பணியைச் சங்கர ருக்குக் கொடுத்தார்.

இந்தியாவின் வரலாற்றுக் காலமெல்லாம் கல்விக்கும் தெய்வீகத்திற்கும் புகழ்பெற்று விளங்கும் காசிக்குச் சங்கரர் சென்றுர். காசியில்தான் சங்கரர் தம் முதல் சீடரை யேற் றுக்கொண்டார். சங்கரரின் திருவருளுக்கு உரியரான இச் சீடர் சோழ நாட்டிலிருந்து காசிக்குச் சென்றிருந்த விஷ்ணு சர்மா என்பவராவர். சங்கரர் அவருக்குச் சனந்தனர் என்ற சந்நியாசப் பெயர் கொடுத்தார். விரைவில் வேறு சீடர்களும் சங்கரரை வந்தடைந்தனர். பொறுமை கொள்ளுதல் மனித இயற்கையாதலால் இவர்களுக்குள் பொறுமை ஏற்பட்டது. சனந்தனருடைய பெருமையை ஏனைய சீடர்களுக்குப் புலப் படுத்த சங்கரர் திருஉளங் கொண்டார். சீடர்களுடன் சங்கரர்

7

நீராடிக் கொண்டிருக்கும்போது ஆற்றின் மறுகரையில் சனந்தனர் தம் குருவின் மாற்று உடைகளை யெடுத்துக்கொண்டு வந்து கொண்டிருந்தார். சங்கரர் அவரை வரும்படி அழைத்தார். உடனே வேறெந்த நினைப்புமின்றிச் சனந்தனர் ஆற்றில் இறங்கி நடக்கத் தொடங்கினூர். அவர் கால்வைத்த இடத்திலெல்லாம் ஒழி தாமரை தோன்றி அவர் காலைத் தாங்கிக் கொண்டது. இதனுல் அவருக்குப் பத்மபாதர் என்ற பெயர் உண்டாயிற்று.

சங்கரரின் சீடர்கள் வேறு இருவரைப்பற்றி இங்கே குறிப்பிடலாம். சங்கரரின் திருவருளால் தம் ஊமைப் பிள்ளை பேசக்கூடும் என்று நினைத்துத் திவாகரர் என்பவர் அப்பிள்ளையை அழைத்து வந்தார். ஆசாரியர், " நீ யார்?" என்று கேட்டபோது அப்பிள்ளை தான் உடல், உள்ளம் ஆகியவற்றின் வேருய ஆன்மா என்று பதிலளித்தது. இந்தப் பதில் பத்து சுலோகங்களாக அமைந்தது. ஒவ்வொரு சுலோகத்திலும், " என்றும் உள உணர்வு என்ற தன்மைவாய்ந்த ஆன்மா நான் " (ஸநித்யோபலப்தி ஸ்வரூபோஹமாத்மா) என்று கூறப்பட்டுளது. ஆசாரியர் மிக மகிழ்ந்து அந்தப் பிள்ளைக்கு ஹஸ்தாமலகர் என்ற சந்நியாசப் பெயர் கொடுத்துத் தம் சீடஞக ஏற்றுக்கொண்டார். உள்ளங்கை நெல்லிக் கனிபோன்ற தெளிவுடைய ஞானத்தையுடையவர் என்பது இப்பெயர்க்குப் பொருளாகும். ஏறத்தாழ இதே சமயத்தில் களாநாதர் என்பவரும் சீடரானூர். தம்மைச் சீடராக ஏற்றுக்கொள்ளும்படிச் சங்கரரை வேண்டிக்கொண்டு பாடுவதற்கு அரிதான தோடக சந்தத்தில் சங்கரரைப் புகழ்ந்து பாடினூர். சங்கரர் தோடகாசாரியர் என்ற பெயர் கொடுத்து அவரை யேற்றுக்கொண்டார்.

சங்கரர் காசியிலிருந்தபோது நடந்த இரு நிகழ்ச்சிகளைப் பற்றி இங்கே குறிப்பிடலாம். ஆற்றில் நீராடிய பிறகு தம் சீடர்களுடன் சங்கரர் விசுவநாதர் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்தார். கையில் கள்ளையேந்தி நாய்கள் சூழச் சண்டாளனெருவன் எதிரே வர, சங்கரர் அவனை விலகிப்

போகச் சொன்னார். விலக வேண்டுவது உடலா, உயிரா என்று சண்டாளன் கேட்டான். உடலாயின் அனைவருடைய உடலும் ஒரே தன்மை வாய்ந்ததுதான். ஆன்மாவாயின் அது ஒன்றாகவும் எங்கும் ஒரே தன்மை வாய்ந்ததாகவுமுளது என்று கூறினான். இந்தச் சண்டாளன் எளியவனல்லன் என்று சங்கரர் உடனே உணர்ந்தார். சிவபெருமானே இவ்வாறு சண்டாளர் உருவத்தில் வந்தார். சங்கரர் அவரடிபணிந்து வணங்கி யாரொருவர் இரண்டற்ற நிலையடைகிறாரோ அவர், பிராமணராயினும் சரி, சண்டாளனாயினும் சரி, அவரே தமக்குத் தலைவராவர் என்ற கருத்தமைந்த பாக்களைப் பாடினார்.

அடுத்த நிகழ்ச்சி சங்கரர் அகக்குருடராயிருந்த ஓர் இலக்கணப் புலவரைக் கடிந்து கொண்டதைப்பற்றியாகும்.

ஆசாரியர் காசியில் ஒரு வீதி வழியாகச் சென்றுகொண்டிருந்தபோது ஒரு புலவர் இலக்கண விதியை நெட்டுருச் செய்வது அவர் காதில் விழுந்தது. பொருளற்ற விதியைப் படித்துக் காலத்தை வீணாக்குவதற்காக அவரைக் கடிந்து மோஹமுத்கரம் என்ற தலைப்பையுடைய இனிய கவி பாடினார். "கோவிந்தனை வழிபடு! கோவிந்தனை வழிபடு! கோவிந்தனை வழிபடு! ஓ அறிவிலியே! நீ இறப்பதற்குரிய சமயம் வரும்போது இலக்கண விதியை ஒப்புவிப்பதால் தப்ப முடியாது!" என்ற சொற்கள் அடிப்படைக் கருத்தாகத் திரும்பத் திரும்பக் கூறப்படுகின்றன.

சண்டாள உருவில் வந்த இறைவன் கட்டளைக்கிணங்க சங்கரர் இமயத்திலுள்ள பதரிகாஸ்ரயத்திற்குச் சென்று வியாசரைக் கண்டு அவர் வாழ்த்தைப் பெற்றார். தம் பரம குருவாகிய கௌடபாதரையுங் கண்டு அவர் வாழ்த்தையும் பெற்றார். பின்னர் காசிக்கு வந்து தம் பேருரைகளை எழுதினார். வேறு நூல்களையும் இயற்றினார். மணி கர்ணிகை கட்டத்திலுள்ள முக்தி மண்டபத்தில் இந்நூல்களை யெழுதித் தம் சீடர்களுக்கு அவற்றின் பொருளை விளக்கினார் என்று கூறப்படுகிறது. முதலில் விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்குப் பேருரை கண்டு பிறகு உபநிடதங்கள், பகவத்கீதை, பிரம்ம சூத்திரம்

ஆகிய பிரஸ்தானத் திரயங்களுக்கு உரை கண்டதாகச் செவி வழிச் செய்தியொன்றுண்டு. பிரம்ம சூத்திரப் பேருரையை அவர் விளக்கிக் கொண்டிருக்கும்போது முதியவர் கோலத்தில் வியாசர் தோன்றி உரைக்கு அடிப்படைச் சான்று காட்டும் படிச் சொன்னார். இருவருக்கும் நீண்ட சொற்போர் நடந்தது. பத்மபாதர் சொற்போரை நிறுத்தும்படி அவர்களிரு வரையும் கேட்டுக் கொண்டார். சிவபெருமானுடைய அவதாரமான சங்கரரும் விஷ்ணுவின் அவதாரமான வியாசரும் இச்சொற்போரை நிகழ்த்தினால் அமைதி இருக்க முடியாது என்பதே அவர் கூறிய காரணமாகும். தம்மைப்பற்றிய உண்மை வெளிப்படவே, வியாசர் சங்கரரை வாழ்த்தி அவர் கண்ட உரை சரியானது என்று ஏற்றுக்கொண்டு பின்னும் பதினறு ஆண்டுகள் (32 வயதுவரை) இவ்வுலகில் வாழும்படி வாழ்த்திச் சென்றார். சங்கரர் இந்தியா முழுவதும் சென்று வேதாந்த உண்மையை மக்களிடையே பரவச் செய்யவேண்டு மென்றும் வியாசர் விரும்பினார்.

சங்கரர் காசியிலிருந்து புறப்பட்டுக் கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்று ஆறுகளும் (திரிவேணி) ஒன்றாகச் சேரும் இடமான பிரயாகைக்குச் சென்றார். மீமாம்சாரியரான குமாரிலபட்டர் உமியில் தீவளர்த்து அதில் புகுந்து உயிர்விடப் போவதாக அறிந்து அவரிடம் விரைந்து சென்றார். குறைகளைச் சுட்டிக் காட்டிச் சங்கரர் மறுக்க விரும்பிய சமயங்களுள் மீமாம்சையும் ஒன்றாகும். குமாரில பட்டருடன் வழக்கிடுவதால் இந்நோக்கம் நன்கு நிறைவேறும். ஆனால், குமாரிலர் வழக்கிடுவதற்கு ஏற்ற நிலையிலில்லை. முன் செய்த குற்றத்திற்குக் கழுவாயாக அவர் உயிர்விடத் துணிந்தார். பௌத்த சமயாசாரியர்களிடம் அச் சமயத்தின் மறை பொருள்களைத் தெரிந்து கொள்வதற்காகப் பௌத்தனாக நடித்ததே அவர் செய்த குற்றமாகும். பௌத்த சமயத்தைச் செவ்வையாக மறுக்க வேண்டுமென்பதற்காக அவர் இம் முறையைக் கையாண்டார். கர்மகாண்டமேமுதன்மைவாய்ந்தது என்ற உறுதியுடையவராதலால் தாம் தெரிந்து செய்த குற்றத்திற்கு உரிய தண்டனையை யேற்க வேண்டுமென்று

முடிவு செய்தார். உயிர்விடுதலே இக்குற்றத்திற்குரிய தண்டனையாகும். இந்நிகழ்ச்சிகளனைத்திற்காகவும் சங்கரர் வருந்தினர். குமாரிலருடன் வழக்கிட்டுப் பூர்வ மீமாம்சையிலுள்ள குறையை யெடுத்துக்காட்ட வாய்ப்பு ஏற்படவில்லை. ஆனால் மாஹிஷ்மதியில் மண்டன மிஸ்ரருடன் சங்கரர் வாது செய்யலாம் என்று குமாரிலர் கூறினர்.

வேதங்களையும் தர்க்க முறைகளையும் மண்டனர் துறை போகக் கற்றவர்; தளராப் பிடியுடைய மீமாம்சகர். மண்டனர் வீட்டிற்குச் சங்கரர் சென்றபோது உள்ளே ஸ்ரார்த்தம் நடந்து கொண்டிருந்ததால் கதவு அடைக்கப்பட்டிருந்தது. தமது யோக சக்தியால் சங்கரர் உள்ளே சென்று மண்டனரை வாதுக்கு அழைத்தார். சங்கரர் வரலாற்றிலேயே சங்கர-மண்டன சம்வாதம் கவர்ச்சி மிக்க நிகழ்ச்சியாகும். வேதத்தின் பொருள் தர்மம் என்பது மீமாம்சகர் கொள்கை. இதற்கு மாறாக பிரம்மம்-ஆத்மா பற்றியதே வேதத்தின் முதன்மையான கருத்து என்பது வேதாந்த முடிபு. வேதாந்தத்தை நிலை நாட்டுவதற்காகத் தோன்றிய சங்கரர் மீமாம்சை சரியான முடிபு அன்று என்று எடுத்துக்காட்ட வேண்டுவதாயிற்று. தர்ம காண்டத்தை முதன்மையாகக் கொள்ள வேண்டுமே என்பதைத் திறம்படக் கூறுபவரான மண்டனருடன் சங்கரர் நிகழ்த்திய சம்வாதம் அவர் வாழ்க்கையிலேயே முதன்மை வாய்ந்ததாகும்.

சம்வாதம் நீண்ட காலம் நடைபெற்றது. மண்டனரின் மனைவியான பாரதி சிறந்த அறிவுடையவர். சம்வாதத்திற்குப் பாரதி நடுவராக இருந்தனர். வழக்கிடுவோர் கழுத்தில் மாலையணிவித்து யாருடைய மாலை வாடுகிறதோ அவரே தோற்றவராவர் என்று கூறினர். வாதம் பலநாள் நடந்தது. மண்டனர் அணிந்திருந்தமாலை வாடத் தொடங்கியது. தம் மனைவி வகுத்த முறைப்படி தாம் தோல்வியுறவே, மண்டனர் தோல்வியை ஒப்புக்கொண்டு சந்நியாசம் மேற்கொண்டு சங்கரரின் சீடராக உடன்பட்டார்.

இந்தச் சமயத்தில் தம்மையும் வழக்கில் வென்றாலன்றிச் சங்கரரின் வெற்றி நிறைவுறாது என்று பாரதி கூறினர். சாஸ்

திரங்களில் சிக்கலான பல பகுதிகளைப்பற்றி வாதம் நிகழ்ந் தது. சங்கரர் ஒவ்வொன்றிலும் தம் மேன்மையைப் புலப் படுத்தினார். சங்கரர் வரலாற்றை யெழுதுவோர் வீணுகப் பின்வரும் நிகழ்ச்சியைப் புகுத்துகிருர்கள். எப்படியாவது சங்கரரைத் தோல்வியுறச் செய்ய வேண்டுமென்பதற்காகப் பாரதி, சங்கரருக்கு அறவே பயிற்சியில்லாத காம சாஸ்திரத் தில் கேள்விகள் கேட்கத் தொடங்கிஞராம். சங்கரர் தமக்கு விடை தெரியாது என்று ஒப்புக்கொண்டு கால தவணை கேட் டார். சங்கரருக்கு வசதியாக இந்தச் சமயத்தில் அமருகன் என்ற மன்னன் இறந்தான் என்று சங்கரரின் வரலாறு எழு தியவர்கள் கூறுகின்றனர். யோக சக்தியால் சங்கரர் தம் உட லைச் சீடர்கள் பாதுகாப்பில் வைத்துவிட்டு அமருகன் உடலில் புகுந்தார். மன்னன் வியக்கத்தக்க வகையில் உயிர்பெற் றெழக் கண்ட குடிமக்கள் மகிழ்ந்தனர். அமருகன் உடலி லிருந்து கொண்டு அரசிகளோடு அரண்மனையில் சங்கரர் வாழ்ந்து நாட்டைச் சிறந்த முறையில் ஆண்டுவந்தார். மன் னருடன் பழக நேர்ந்தவர்கள் மன்னர் உடலிலிருப்பது வேறு யாரோ-ஒருவேளை யாராவது யோகியாயிருக்கலாம் என்று நினைத்தார்கள். யோகியின் உடலைக் கண்டுபிடித்து அதை யெரித்துவிடும்படி ஏவலாளரை எவருக்கும் தெரியாமலனுப் பினர். ஏவலாளர் உடலைக் கண்டுபிடித்து அதனை யெரிக்க முற்பட்டனர். இதற்குள் சங்கரரின் சீடர்கள் மன்னரைப் பார்க்க இசைவு பெற்று மறைமுகமாக அவர் அவ்வுடலில் புகுந்ததன் நோக்கத்தை நினைவூட்டினர். சங்கரர் தம்பழைய நிலையை யடைந்து மன்னன் உடலைவிட்டுத் தன்னுடலில் புகுந்து நரசிம்மமூர்த்தியை வணங்கித் தீயினின்றும் தீங்கின் றித் தப்பி எழுந்தார்.

சங்கரர் மண்டனர் வீட்டிற்கு மறுபடியும் வந்து பாரதி யோடு வாதத்தைத் தொடர்ந்து நடத்திஞர். காமசாஸ் திரத்திலும் இப்போது அவர் வெல்ல முடியாதவராஞர். பாரதி தோல்வியை ஒப்புக்கொண்டார். மண்டனருடன் தொடங்கிய வாதத்தில் இப்போது சங்கரர் முழு வெற்றி கண்டார். சிறந்த இல்லறத்தவராயிருந்த மண்டனர் தமக்

குச் சந்நியாசம் தந்து சீடராக ஏற்றுக்கொள்ளும்படி சங்கரரை வேண்டினார். சங்கரர் அவருக்குச் சந்நியாசம் தந்து சுரேஸ்வரர் என்ற பெயர் கொடுத்தார். மண்டனரைப் பின்பற்றிப் பாரதியும் சங்கரர் குழுவைச் சேர்ந்தார்.

திக்விஜயம் செய்து இந்தியாவை ஆன்மீய வெற்றி கொள்வதற்குச் சமயம் வாய்வதாயிற்று. திக்விஜயம் என்றால் என்ன? அதன் பொருள்யாது? என்று கூறுவதற்குமுன் ஒரு நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிடவேண்டும். இது, சங்கரர் தம் தாயிடம் கொண்டிருந்த தூய கனிந்த அன்பையும் தம் தாயாருக்காக அவர் கட்டுப்பாடான வழக்கங்களை மீறத் துணிந்ததையும் காட்டும். தம் தாயின் இறுதிக்காலம் நெருங்குவதைச் சங்கரர் உணர்ந்தார். தாயாருக்குக் கொடுத்த வாக்குறுதியை நினைவுகூர்ந்து காலடிக்குச் சென்றார். மகனைக்கண்ட தாய் மனமகிழ்ந்தார். இப்போது தம் தாய்க்குக் குருவாகி ஆன்மீய நெறியையுணர்த்தி வாழ்க்கை முடிவை அமைதியுடனும் நம்பிக்கையுடனும் ஏற்கும்படி அவர்களைத் தேற்றினார். முடிவு, பரபரப்பின்றி அமைதியாக ஏற்பட்டது. இறுதிக் கடன்களைச் சங்கரர் செய்யக்கூடாதென்று உறவினர் தடுத்தனர். இல்லறத்தை யேற்றுச் சிறிது காலம் உலக வாழ்க்கையை நடத்தாமல் துறவு பூண்டதை அவர்களால் பொறுக்க முடியவில்லை. இறுதிக் கடன்களைத் துறவி செய்வதற்கு இப்போது உடன்பட முடியுமா? அறவே ஒத்துழைக்க மறுத்தனர். தம் தாயாரின் வீட்டுத் தோட்டத்தில் ஒரு மூலையில் வாழைமட்டைகளை யடுக்கி உடலை எளிதாக எடுத்துச்செல்வதற்காக அதனைக் கூறுபடுத்தி யோக சக்தியால் தீமூட்டினார். உறவினரான நம்பூதிரிகளுக்குச் சாபம் ஏற்பட்டது. ஸ்ருங்கேரி பீடத்தைச்சேர்ந்த ஓர் ஆசாரியரால் அண்மையில் இச்சாபம் விலக்கப்படும் வரையில் நம்பூதிரிகள் இறந்தவர் உடலை ஒரளவு கூறுசெய்தே தம் தோட்டங்களில் எரித்துவந்தனர்.

சூறுவளியெனச் சங்கரர் செய்த பயணத்தைப்பற்றிப் பார்ப்போம். இந்தியா முழுவதும் ஒரு முறைக்குமேல் சுற்றி

வந்திருக்கிறார். மும்முறை சுற்றிவந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. அவர் எங்குச்சென்றாலும் மக்களுக்கு உயரிய உள்ளக் கிளர்ச்சி ஏற்பட்டது. ஆனால், சில இடங்களில் எதிர்ப்பையும் அடக்கவேண்டியிருந்தது. எதிர்ப்பை அடக்க அவர் கையாண்டமுறை தெளிவூட்டி உடன்படச் செய்தல், இனிய அறிவு முறைகளைப் பயன்படுத்தல்,—இவற்றிற் கெல்லாம் மேலாகத் தம்முடைய நிறைவான நுகர்ச்சியை அடிப்படையாகக் கொள்ளுதல் என்ற போக்கில் அமைந்தது. தம்மைப்பற்றி ஓரிடத்தில்தான் குறிப்பிடுகிறார்—அதுவும் மறைமுகமாக. இக்குறிப்பு பிரம்ம சூத்திர பாஷ்யத்தின் இறுதியிலிருக்கிறது. "உடலோடிருக்கும்போதே தமக்கு ஏற்பட்ட பிரம்ம ஞானத்தை நெஞ்சார ஒருவர் உணர்ந்திருக்கும்போது அதனை வேறொருவர் எப்படி மறுக்கமுடியும்?"

மக்களில் பெரும்பாலோர் தவறான கொள்கைகளால் நெறிபிறழ்ந்து சென்று கொண்டிருந்தனர். நாத்திகத்தை மறுக்க வைதிகர்கள் காலத்திற்கொவ்வாத வறண்ட சடங்கு முறைகளைக் கையாண்டனர். இந்தச் சமயத்தில் சங்கரர் மீண்டும் உபநிடதத் தத்துவத்தின் உச்சிக்குச் சென்று அங்கிருந்து மக்களுக்கு இறவாமை தரக்கூடிய நீரைக் கொண்டு வந்தார்.

சங்கரர் அழிப்பதற்காக வரவில்லை, காப்பதற்காகவே வந்தார். அவர் கற்பித்த அத்வைதக்கொள்கை பிறகொள்கைகளுக்குப் பகையென்று கருதக்கூடாது. சங்கரரின் பரம குருவான கௌடபாதர் அத்வைதத்திற்கும் துவைதக் கொள்கைகளுக்கும் யாதொரு முரணும் கிடையாது என்று முன்னரே கூறிச்சென்றார். உயர்ந்தது தாழ்ந்ததை மறுக்காமல் அதிலுள்ள உண்மையை வைத்துக்கொண்டு அதனை உயர்த்துகிறது. உடல் எவ்வாறு தன்னுடைய உறுப்புக்களோடு போரிடுவதில்லையோ அவ்வாறே அத்வைதமும் பிற கொள்கைகளோடு பிணங்குவதில்லை. குழப்பமும் பூசலும் மிக்கிருந்த காலத்தில் சங்கரர் ஒற்றுமையையும் நிறைவையும் மீண்டும் கண்டுபிடித்துப் பிணக்குகளைத் தீர்த்து உறுப்புக்

களைத் தத்தம் இடத்தில் பொருத்தவே முயன்றார். பரம் பொருள் ஒன்று என்பதை (பிரம்மாத்வைதத்தை) நிலை நாட்டுவதோடு கொள்கைகளுக்குள்ளும் வேற்றுமையின் மையை (தர்சனாத்வைதத்தை) நிலைபெறச் செய்வதே அவர் வாழ்க்கையின் நோக்கமாகும். இம் முயற்சியில் அவர் வேதத்தின் முதன்மையான அறிவுரையைக் கடைப்பிடிக்கிறார். "பரம் பொருள் ஒன்றே" என்ற மேலான உண்மையை எடுத்தோதும் வேதம், சமயப் பிணக்குகளைத் தவிர்ப்பதற்காக உடனே, "உணர்ந்தவர்கள் பல்வேறு பெயரால் அதனை வழங்குகின்றனர்," என்று கூறுகிறது.

பிறரைத் தழுவிச் செல்லவேண்டுமென்று சங்கரர் விரும்புவதற்குச் சான்று சூத்ரபாஷ்யத்தின் முகவுரைப் பகுதியிலேயே காணலாகும். அத்வைதக் கொள்கைக்கு இன்றியமையாத கருத்து அத்யாசம் என்பதைப் பற்றியதாகும். ஒரு பொருள் தன் தன்மைக்கு மாறாகப் பிறிதொரு தன்மையை உடையது போலத் தோன்றுவதே அத்யாசம் என்பது, நாத்திக தர்சனங்கள், ஆத்திக தர்சனங்கள் அனைத்திற்குமே உடன்பாடு. கிளிஞ்சல் வெள்ளியைப்போல் தோன்றுகிறது. ஒன்றாகிய நிலா இரண்டுபோல் தோன்றுகிறது. பிறகொள்கைகள் குறைவுடையனவே. ஆனாலும், அவற்றிலும் ஓரளவு உண்மையுண்டு. பன்மையில் ஒருமையையும் தோற்றத்தில் வேறுபாடுடன் விளங்கும் பொருள்களிலும் ஒற்றுமையையும் நாடுகிற அத்வைதி, கொள்கைகளில் எந்த அளவுக்கு ஒற்றுமை காணப்படுகிறதோ அதனை வற்புறுத்தி மேலும் அதனைப் பெரிதாக்கி நிறைவுறச் செய்யாமலிருக்க முடியாது!

உதவும் நோக்கத்தோடு சங்கரர் சீர் தூக்கிப் பார்த்ததால் ஆத்திக நாத்திக தரிசனங்கள் அனைத்துமே நன்மையடைந்தன. ஆத்திக தரிசனமான பூர்வமீமாம்சையும் நாத்திகத்தைச் சேர்ந்த பௌத்தமும் சங்கரரின் ஆராய்ச்சிக்குப் பெரிதும் உள்ளாயின. வெற்றுச் சடங்குகள் ஒரு புறமும் வறண்ட சூன்ய வாதம் மறுபுறமும் நாட்டைப் பிரித்துப் பாழாக்கின

இவை நேர் மாறுன கொள்கைகளுடையனவேனும் நாத்திகத்தைக் கற்பிப்பதில் புதுமையான வகையில் மீமாம்சையும் பௌத்தமும் இணைந்து நின்றன. அருளாளரான சங்கரர் சடங்குகளையே வற்புறுத்தும் அறக் கொள்கையையும் எதிர் மறை முடிவையுடைய மெய்யுணர்வுக் கொள்கையையும் விலக்க வேண்டியதாயிற்று. மீமாம்சையும் பௌத்தமும் நெறிபிறழ்ந்து வெவ்வேறு புறமாகச் செல்லாமல் அவற்றை நெறிப்படுத்த வேண்டியதாயிற்று. அவர் செய்த திருத்தத்தால் அவை நன்மையேயடைந்தன. ஞான மார்க்கத்திற்குத் துணையாக அல்லது உறுப்பாக இருப்பதே கர்ம மார்க்கம் அல்லது சடங்கு முறைக்குப் பொருத்தமானது என்று சங்கரர் காட்டினுர். புத்தர் வற்புறுத்திய சிறந்த அஹிம்சைக் கொள்கை வேதத்தில் காணப்படாததன்று. இந்து அறக் கொள்கையின் ஓர் இன்றியமையாப் பகுதியாக இது சேர்த்துக் கொள்ளப்பட்டது. புத்தரும் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்பட்டார்.

மெய்யுணர்வுக் கொள்கைகளைப்போல சமயமும் சங்கரருடைய கற்பனையால் நன்மையடைந்தது. சமயக் கொள்கைகளிலும் நிலையங்களிலும் புகுந்துகொண்ட தீமைகளை அவர் நீக்க முயன்ருர். (இதனுல் அவர் உயிருக்கே பல முறை இடர் விளைந்தது.) அவைகளைத் தூய்மையுறச் செய்து கடவுளையும் பல நெறிகளாக அவற்றைக் காக்க விரும்பினுர். சகுணப் பிரமம் சங்கரர் கொள்கைப்படி பரம் பொருளன்று. ஆனுல், சகுணப் பிரமத்தை ஒரு வேண்டாப் பொருளாகவோ பாமரருக்காக ஏற்படுத்தப்பட்ட பொருளாகவோ அவர் கருதவில்லை. அத்வைத அனுபவம் அடைவதற்காக இறைவனிடம் அன்பு செலுத்துவது இன்றியமையாததாகிறது. இவ்வாறு பார்க்கும்போது இறைவனை எப்பெயர் கொண்டு வணங்குகிருேம் என்பதைவிட எவ்வளவு உண்மையுடனும் ஆழ்ந்த அன்புடனும் வணங்குகிருே மென்பதே முதன்மை வாய்ந்தது என்று தெரிகிறது. ஹரி ஸ்தோத்திரத்தில் சங்கரர் பின்வருமாறு கூறுகிருர்: "சம்சாரம் என்ற இருளைப் போக்குபவரும் ஒரு பொருளாயிருப்பினும் அறிவின் வேறு

பாட்டினுல் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், அக்னி, சூர்யன், சந்திரன், இந்திரன், வாயு, யக்ஞம் என்று பலவகையாகப் பேசப்படுபவருமான ஹரியைப் புகழ்ந்து வணங்குகிறேன்.'' சமயத்தின் மெய்ப்பொருள் ஒன்றே. அதனைப் பற்றிய பேச்சு பல திறத்ததாக இருக்கலாம். சங்கரர் உண்மையான ஆன்மீயப் பொதுமையை மேற்கொண்டு சொல்லிலும் செயலிலும் அதனைக் கடைப்பிடித்து வந்தார். வேறுபாட்டுணர்ச்சியின்றி இறைவனின் பல மூர்த்தங்களுக்கும் தம்பாக்களில் வழிபாடு செலுத்தியிருக்கிருர். இந்து சமயத்தின் உட்பிரிவுகள் ஆறையும் தூய்மைப்படுத்தி நிலைநாட்டியிருக்கிருர்.

பதரி, கேதாரத்திலிருந்து கன்னியாகுமரி, இராமேசுவரம் வரையிலுள்ள எண்ணற்ற கோயில்களிலும் சமய நிலையங்களிலும் இந்து சமயத்திற்கும் தத்துவத்திற்கும் சங்கரர் செய்த சிறந்த தொண்டு இன்றும் காணலாகும். சங்கரர் கயிலையிலிருந்து ஐந்து இலிங்கங்கள் கொண்டுவந்து ஐந்து தலங்களில் நிலைநிறுத்தியதாகச் செவிவழிச் செய்தியுளது. அவ்வைந்தாவன : கேதாரத்தில் முக்திலிங்கம், நேபாளத்திலுள்ள நீலகண்ட க்ஷேத்திரத்தில் வரலிங்கம், சிதம்பரத்தில் மோக்ஷலிங்கம், ஸ்ருங்கேரியில் போகலிங்கம், காஞ்சியில் யோகலிங்கம். பஞ்சாயதன முறை வழிபாடும் சங்கரரால் ஏற்படுத்தப்பட்டது. ஆதித்யன், அம்பிகை, விஷ்ணு, கணநாதர், மஹேஸ்வரர் ஆகிய ஐவருக்கும் வழிபாடு சேர்ந்து செய்யப்படுகிறது. ஆனுல், முதன்மை வழிபடுவோரின் இஷ்ட தேவதைக்குத் தரப்படுகிறது. எவற்றிற்கும் மேலாகச் சங்கரர் ஏற்படுத்தித் தம் சீடர்களின் பொறுப்பில் விட்டுச் சென்ற மடங்கள் உள. இம்மடங்கள் இன்றும் உள. தலைசிறந்த மெய்யுணர்வுத் திறம்வாய்ந்த மெய்யடியார்கள் இவற்றின் தலைவர்களாயிருந்து வருகின்றனர். இவ்ற்றுள் முன்னணியில் நிற்பன பதரிகாஸ்ரமத்திலுள்ள ஜோதிர் மடமும், துவாரகையிலுள்ள காலிகா பீடமும், பூரிஜகன்னுதத்தில் கோவர்த்தன பீடமும், ஸ்ருங்கேரியில் சாரதா பீடமும், காஞ்சியில் காமகோடி பீடமுமாம். பிறவியெடுத்-

த்தின் நோக்கம் நிறைவேறவே, சங்கரர் தமது முப்பத்தி யிரண்டாமாண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தார். கோதரத்தில் ஒரு குகையில் நுழைந்து மறைந்துவிட்டார் என்று வழக்காறு உளது. அவர் காஞ்சியில் சரவஜ்ன பீடத்திலமர்ந்து தமது இறுதிக் காலத்தைக் கழித்தார் என்று ஒரு மரபு உளது.

விரிவுரைகள், விளக்கங்கள், கவிகள் இன்ன பல சங்கரர் எழுதியவையாகக் கருதப்படுகின்றன. அவற்றுள் எவை அவர் எழுதியன என்று தவருகக் கருதப்படுகின்றன என்று உறுதி செய்வதற்காக அறிஞர்கள் முயன்று வந்திருக்கின்றனர். அவரால் எழுதப்பட்டவை என்பவை குறித்து ஐயமிருக்கக் கூடியவற்றை நீக்கி அவரால் எழுதப்பட்டவை என்று துணிந்து கூறக் கூடியவற்றை மட்டும் கணக்கிட்டாலும் பெரிய ஆசாரியரான இவர் எழுத்தின் பரப்பைக் கண்டு வியப்படையாமலிருக்க முடியாது. உப நிடதங்களுள் முதன்மையானவை, பகவத்கீதை, பிரம்மசூத்திரம் ஆகியவற்றிற்கு இவர் கண்ட விரிவுரைகள், உபதேச சாஹஸ்ரீ, விவேக சூடாமணி போன்ற விளக்கநூல்கள், சிவானந்தலஹரி, சௌந்தர்யலஹரி போன்ற புகழ் நூல்கள்—இவையனைத்தும் எல்லா மக்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் உரிய இலக்கியச் செல்வமாகும். சிறந்த மெய்யறிஞர் ஒருவர் இவருடைய தெளிந்த ஆழ்ந்த நடையைப் பிரசன்ன கம்பீரம் என்று பாராட்டுகிருர். நுண்ணுணர்வும் ஆய்வுத் திறனும் சங்கரர் இயற்றிய நூல்களில் காணலாகும். பரப்பிரமத்தைப் பற்றி அவர் கூறுவது உணர்ந்துகொள்வதற்கு எளிதன்று என்பது உண்மைதான். அதைப் பிறர்க்கு எடுத்துரைக்க முயல்வது கட்டாயம் அரியதை விளக்கும் முயற்சியாகும். ஆனுல், சங்கரர் விளக்கும் முறை வழக்கமான—ஆனுல், வேண்டப்படாத இடர்ப்பாடான—குழப்பத்தை யுண்டாக்குவதில்லை. உரை நடையாகவும் கவியாகவும் அவர் எழுதிய மாபெரும் நூல்களில் கருத்து ஆழத்தையும் மொழித் தெளிவையுங் காணலாம்.

சங்கரரே தமது கொள்கையின் பிழிசாருன கருத்தை அரை சுலோகத்தில் பின்வருமாறு கூறுகிருர் :

பிரம்மசத்யம், ஜகன்மித்யா
ஜீவே பிரம்மைவ நா,பரா.

(பரம்பொருளே மெய், உலகம் மித்தை, ஜீவாத்மா என்று சொல்லப்படுவது பரம்பொருளே, அதனின் வேறன்று.)

பிரமம் ஆத்மா என்று உபநிடதங்கள் வழங்கும் சொற்கள் இரண்டற்ற பரம்பொருளைக் குறிக்கின்றன. பரம்பொருளின் தன்மையைச் சொற்கள் கொண்டு விளக்கமுடியாதாகையால் உபநிடதங்கள் அதனை 'நேதி நேதி,' 'இதுவன்று, இதுவன்று' என்று கூறுகின்றன. இதனுல் பரம்பொருள் இருளான பாழ் அல்லது உள்ளீடில்லாத வெறுமை என்பது பொருளன்று. அது நிறைவான பொருள். அது ஒன்றே மெய்ப்பொருள். உபநிடதங்கள் சிலவற்றில் பிரம்மத்தைக் குறிப்பதற்காகச் சத்தியம், ஞானம், ஆனந்தம் என்பன போன்ற உடன்பாட்டுச் சொற்கள் ஆளப் பெறுகின்றன. ஆனுல், இவையும் மெய்ப்பொருள் எது அன்று—பாழன்று, அறிவற்றதன்று, துன்பத்தோடு தொடர்புடையதன்று—என்பதைக் குறிக்கவே வழங்கப் பெறுகின்றன. ஒரு பொருளைப்பற்றி விளக்கிச் சொல்ல வேண்டுமென்ருல் அதனைக் கட்டுப்படுத்திக் குறையடையச் செய்வதாகிறது. குறைவும் கட்டுப்பாடும் அற்ற பொருளைக் கட்டுப்பாட்டிற்குட்பட்ட சொற்களால் விளக்க முடியாது. பிரம்மம், நிர்க்குணம், குறிகளற்றது. அது ஒன்று என்பதும் சரியன்று. ஏனெனில், எண்ணைக் குறிக்கும் சொல்லும் பரம்பொருளைக் குறிப்பதற்கு ஏற்றதன்று. இதனுல்தான் இரண்டற்றது என்ற பொருள்படும் அத்வைதம் என்ற சொல்லைச் சங்கரர் தம் கொள்கையைக் குறிப்பதற்காக வழங்குகிருர்.

உலகத்தின் காரணமாகவும், மங்களமான பண்புகள் அனைத்திற்கும் உறைவிடமாகவும் பிரம்மத்தைக் குறிப்பிடும் பகுதிகள் உபநிடதங்களிலுண்டு என்பது உண்மையே. ஆனுல், பிரம்மம் குறிகளற்றது என்ற கொள்கையை அது

உலகத்திற்கு அடிப்படையாக உளது என்ற கொள்கையோடு எப்படி இசைய வைப்பது? இச் சிக்கலைத் தீர்ப்பதற்காகச் சங்கரர் பாரமார்த்திகம், வியாவஹாரிகம் என்ற இரு நிலைகள் உள்ளனவாகக் கொள்கிறார். முடிவான உண்மை. பரம் பொருள் இரண்டற்றது, தொடர்பற்றது என்பதாகும். அது ஒன்றே உள் பொருள். அஃதின்றி வேறொரு பொருளும் கிடையாது. ஆனால், நம்முடைய வியாவஹாரிக நிலையிலிருந்து பார்க்கும்போது ப்ரம்மம், உலகத்திற்குக் காரணமான ஈஸ்வரனாகத் தோன்றுகிறது. உண்மையில் காரியப்படுவது ஒன்றுமில்லை. கயிற்றில் பாம்பு மயங்கித் தோன்றுவதைப் போலவே பிரம்மத்தின் மாயத் தோற்றமே உலகம். பரிணாம வாதத்தின் வேறான இக்கொள்கை விவர்த்தவாதம் என்ப் பெயர்பெறும்.

உலகத்தின் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பது மாயை. மாயைக்குப் பொருள் வியாவஹாரத்தில்தான் உண்டு. பாரமார்த்திகத்திலன்று. முடிவான உண்மை, எது (யா) இல்லையோ (மா) அதுவே மாயை என்பதாம். ஆனால், நம் நிலையிலிருந்து பார்க்கும்போது உண்மையை மறைத்துப் பொய்யைத் தோற்றுவிக்கும் இறைவனுடைய உணர்தற்கரிய ஆற்றலே மாயையாகத் தோன்றுகிறது. மறைக்கும் சக்திக்கு ஆவரணம் என்று பெயர்; தோற்றுவிப்பதற்கு விக்ஷேபம் என்று பெயர். மாயை என்பது உண்டா, இல்லையா என்று கேட்டால் உண்டு என்றும் சொல்ல முடியாது, இல்லையென்றும் சொல்ல முடியாது. பன்மையுடைய உலகம் தோன்றுவதால் மாயையை இல்லையென்று சொல்ல முடியாது. ஆனால், இரண்டற்ற பரம்பொருளை யுணரும்போது அடங்கி விடுவதால் உண்மையென்றும் சொல்லமுடியாது. ஆனால் உண்டு, இல்லையென்ற இரண்டுமாய் இருக்க முடியாது. ஆகையால் அது இன்னதென்று சொல்ல முடியாதது. (அநிர்வசனீயம்). மாயையைப்பற்றிய ஆராய்ச்சி அது இன்னதென்று தெளிவு படுத்துவதற்காக அன்று, அதைக் கடந்துசெல்லும் துணை புரிவதற்காகவேயாம். அதைக் கடந்து சென்றுவிட்டால் தீர்க்கவேண்டிய சிக்கல் ஒன்றும் இல்லை.

மாயையைக் கடந்துசெல்ல வேண்டியவர் யார்? ஜீவாத்மா - உயிருள்ள ஆன்மா, ஜீவாத்மா உண்மையில் பரமாத்மாதான். மாயையின் தனிச் சொரூபமான அவித்தையால், ஜீவாத்மா, உடல், மனம் என்பனவற்றைத் தானெனக் கொண்டு சம்சாரச் சுழலில் சிக்கிக் கொள்கிறது. ஆன்மாவை மறைக்கின்ற, அன்ன, பிராண, மனோமய கோசங்கள் மாயையில் தோன்றியவை. இவை ஆன்மா என்று தவருகக் கருதப் படுகின்றன. இவற்றின் பண்புகள் தவருக அழிவற்ற ஆன்மாவோடு தொடர்பு படுத்தப்பெறுகின்றன. பிறப்பும் இறப்பும் அற்ற ஆன்மா உடலோடு பிறந்து மடிவதாகக் கொள்ளப்படுகிறது; கர்மமும் போகமும் அதற்கு உண்டெனக் கருதப்படுகிறது. தவருன இந்தக் கருத்துக்களெல்லாம் அவித்தையால் ஏற்படுவன. இவற்றைப் போக்கும் வழிஞானம் ஒன்றேயாம்.

விடுதலை (மோக்ஷம்) என்பது புதிதாக உண்டாவதன்று என்ற காரணத்தால் அத்வைத வேதாந்தம் ஞானத்தை விடுதலைக்கு நேர்வழியாகக் கொள்கிறது. மோக்ஷம் என்பது ஆன்மாவின் என்றுமுள இயற்கை. அறியாமையால் இந்தச் சிறந்த உண்மை உணரப்படாமலிருக்கிறது. செய்ய வேண்டுவது அறியாமையைப் போக்குவதேயாம். அறியாமையைப் போக்கக்கூடியது மெய்யறிவு அல்லது ஞானம். மெய்யறிவு என்று இங்கே பேசப்படுவது மனத்தின் அறிவு அன்று - அது உள்ளுணர்வு அல்லது நேரான அனுபவமாம். கர்ம, பக்தி யோகங்களால் மெய்யுணர்வுக்குத் தடையாயுள்ளனவற்றை நீக்கி ஆத்ம விசாரம் வெற்றியுடன் செய்தால், இரவு தீர்ந்ததும் ஞாயிறு எழுவதுபோல இரண்டற்ற பரம்பொருளின் மெய்யுணர்வு தோன்றுகிறது. அறியாமை நீங்கியவுடன் மெய்யுணர்வினுல் விடுதலை உண்டாகிறது. மோக்ஷம் என்பது ஆன்மாவின் நித்திய ஸ்வபாவமானபடியால் உடல் சாகும் வரையில், இவ் வுண்மையை யுணர்வதற்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. உடலோடிருக்கும்போதே மெய்யுணர்வு உண்டானுல் விடுதலை ஏற்படுகிறது. இவ்வாறு விடுதலையடைவோரே ஜீவன் முத்தராவர். அவர்கள் நிலையிலிருந்து பார்த்தால் உடலென்பதே கிடையாது. விடுதலை யடையாத

வர்களின் நன்மைக்காக அவர்கள் உடலில் வாழ்வதுபோலத் தோன்றுகிறது. சிறிது காலத்திற்குப் பிறகு உடல் விழும் போது, அவர்கள் உடலினின்றும் விடுபட்டார்கள் (விதேக முத்தர்கள்) என்று சொல்லுகிறோம். ஆனால், உண்மையில், மோக்ஷத்தில் வேறுபாடுகள் கிடையா. விடுதலையானது முதல் ஆன்மாவிற்குத் தொல்லைகள் மீண்டும் இல. பரம்பொருளோடு இரண்டற்ற நிலையடைவதே அத்வைத அனுபவமாகும். 'நெஞ்சில் எழுகின்ற விருப்பங்கள் அற்றவுடன், இறப்பவன் இறவாமை பெற்று இங்கேயே பிரம்மத்தையடைகிறான்' என்று உபநிடதம் கூறுகிறது.

அத்வைதத்தை நிலைநாட்டி, இக் கொள்கைபடி முடிவில் நம்பிக்கையின்மையோ, இறுதி ஐயங்களோ ஒன்றும் இல்லை யென்று தெளிவுபடுத்திய பெருமை சங்கரரைச் சாரும் பரம்பொருள் ஒன்றே என்று அத்வைதம் கற்பிக்கும் உண்மை மறுக்க முடியாதது. ஏனெனில் மறுப்பவனின் ஆன்மாவா யிருப்பது அதுதான். உபதேச ஸாஹஸ்ரியில் சங்கரர், "ஆன்மா அறியப்படும் பொருளன்று. ஆன்மாவுக்கு மாறுதலும் இல்லை. பன்மையும் இல்லை. அதைப் பெறுவதோ, விலக்குவதோ, தன்னாலோ, வேறு எவராலோ இயலாததாம். பிறப்பும், இறப்பும், அழிவும், ஆயுளுமற்று உள்ளும் புறமும் உள்ள ஆன்மாவே தான், என்று எவன் உணருகிறானோ அவனுக்கு அச்சம் ஏது?' என்று கூறுகிறார். அச்சம் என்பது தவறான பன்மைக் காட்சியால் உண்டாகிறது. இரண்டற்ற பரம்பொருளை யுணர்ந்தால் அச்சமின்றி யிருக்கலாம். அத்வைதம், அபயம் என்பன ஒரே அனுபவத்தைக் குறிக்கும் இரு பெயர்கள். இவ்வுண்மையை மக்கள் உணரும்படி அழைத்து அதற்கான வழியையுங் காட்டியதால் தம் பெயருக்கேற்பச் சங்கரர் உலகத்திற்குப் பெருநன்மை செய்தவராவர். தனிச் சிறப்பு வாய்ந்த அவருடைய மன்பதைத் தொண்டினைப் பாராட்டும் சுலோகம் ஒன்று வருமாறு :

"ஸ்ருதிஸ்மிருதி புராணனாம் ஆலயம் கருணாலயம்
நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம்."

இதன் பொருள்: "ஸ்ருதி, ஸ்மிருதி புராணங்களி லுள்ள மெய்யுணர்வினுக்கும் அருளுக்கும் உறைவிடமாக வும், உலகத்தவருக்கு நன்மையைச் செய்பவருமாயுள்ள சங்கரபகவத் பாதருக்கு வணக்கம் செலுத்துகிறேன்" என் பதாம்.

---

# இராமாநுஜர்

இந்து சமயத்தின் எல்லா உட்பிரிவுகளிலும் மெய்யடியார்கள் இருந்திருக்கின்றனர். சைவமும் வைணவமும் இந்து சமயத்தின் இருபெரும் உட்பிரிவுகளாகும். தென்னாட்டுச் சைவத்தில் சமயாசாரியர்கள் என்றும் சந்தானசாரியர்கள் என்றும் பாகுபாடு இருப்பதுபோல வைணவத்திலும் ஆழ்வார்கள் என்றும் ஆசாரியர்கள் என்றும் பாகுபாடிருக்கிறது. பன்னிருவரான ஆழ்வார்கள் தெய்வீகத்தில் ஆழ்ந்த மெய்யடியார்களாவர். இறைவழிபாட்டை அவர்கள் முதன்மையாகக் கொண்டனர். ஆசாரியர்கள் மெய்யடியார்களாயிருந்ததோடு மெய்யுணர்வினராயு மிருந்தனர். இராமாநுஜர் வைணவத்தைப் பாதுகாத்த இவர்களினத்தைச் சேர்ந்தவராவர். நாதமுனி, ஆளவந்தார் போன்றவர்கள் காலத்தால் இவருக்கு முற்பட்ட வைணவ ஆசாரியர்களென்பது உண்மையே. எனினும், விசிஷ்டாத்வைதம் என்ற தென்னாட்டு வைணவத்தை நிலைபெறச் செய்து திட்டமாக விளக்கிய பெருமை இராமாநுஜரையே சாரும்.

இராமானுஜர் வாழ்க்கையைப் பற்றி அவர் காலத்திலேயே இரு கவர்ச்சியான நூல்கள் எழுதப்பெற்றன. ஆனால் அவை வரலாற்று முறையிலெழுதப்பட்டவையல்ல. தமிழில் அமுதனாரியற்றிய நூற்றந்தாதி பிரபந்தத்தோடு சேர்க்கப்பட்டுளது. இராமாநுஜரின் ஆந்திர சீடரான வடுகநம்பி தம் குருவைப் பற்றி 114 சுலோகங்களில் யதிராஜ வைபவம் என்ற நூல் இயற்றியுள்ளார். இராமாநுஜர் வாழ்க்கையைப் பற்றி அறிந்துகொள்ள உதவும் நூல்களுள் வேதாந்த தேசிகருடைய யதிராஜசப்ததியையும் மணவாள மாமுனிவருடைய யதிராஜ விம்சதியையும் குறிப்பிடலாம்.

சென்னையிலிருந்து காஞ்சி செல்லும் பாதையில் உள்ள ஸ்ரீ பெரும்பூதூர் என்ற அழகிய ஊரில் கி. பி. 1017-ம் ஆண்

டில் இராமாநுஜர் பிறந்தார். தகப்பனார் ஆசூரி கேசவ சோமயாஜி, தாயார் காந்திமதி. இவ்வம்மையார் ஆளவந் தார் எனப் பெயரிய யாமுனாசாரியரின் பேரரான ஸ்ரீசைல பூர்ணரின் தங்கையாவர். தம்முடைய பாட்டனாரின் இசைவு பெற்று ஸ்ரீசைல பூர்ணர் திருப்பதி திருமலையில் வெங்கடேஸ் வரரை வழிபட்டு வாழ்ந்து வந்தார். தம் தங்கையை இவர் தாம் ஆசூரி கேசவருக்கு மணஞ் செய்வித்தார், குழந்தை பிறந்தபோது இவர் தாம் இலக்ஷ்மணர் என்ற பெயரிட்டார். (இலக்ஷ்மணர் அல்லது இ ர ா ம ா நு ஜ ர் : தமிழில் இளைய பெருமாள்).

இராமாநுஜருடைய குழந்தைப் பருவத்தைப் பற்றி மிகுதியாக ஒன்றும் தெரியவில்லை. இவருடைய சிறு வயதி லேயே இவர் தகப்பனார் காலமாய்விட்டார். கோவிந்த பட்டர் என்ற உறவினருடன் இவர் கல்வி பயிலத் தொடங்கி னார். இருவரும் ஓரளவு தேர்ச்சி பெற்றவுடன் யாதவப்பிர காசர் என்ற புகழ் மிக்க புலவரிடம் வேதாந்தம் கற்பதற்காக் காஞ்சிக்குச் சென்றனர். இராமாநுஜர் விரைவாகவும் தெளி வுடனும் கல்வியில் முன்னேறினார். ஸ்ரீரங்கத்திலிருந்த இவரு டைய பாட்டனார் ஆளவந்தார் இவர் திறமையைப்பற்றிக் கேள்வியுற்று இவரைக் காண விரும்பினார். ஒருவரும் அறியா மல் காஞ்சிக்கு வந்து தாம் இன்னார் என்று தெரிவிக்காமல் வரதராஜர் கோயிலில் இராமாநுஜரைக் கண்டார். தமக்குப் பின் ஸ்ரீரங்கத்தில் ஆசாரிய பீடத்தில் அமரக்கூடிய தகுதி இராமாநுஜரிடம் இருக்கக்கண்டு உள அமைதியுடன் தம் ஊருக்குத் திரும்பிச் சென்றார். இராமாநுஜர் தொடர்ந்து சில காலம் படித்தார். ஆனால், யாதவப்பிரகாசருக்கும் அவருக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. சாஸ்திரங்களுக்கு யாதவப்பிரகாசர் கூறிய உரைகள் சில இராமாநுஜருக்கு உடன்பாடல்ல. யாதவப் பிரகாசர் ஏதோ ஒருவகையான ஒருமைக் கொள்கையினரா யிருந்திருக்க வேண்டும். சிலர் அவரை அ த் வை தி யெ ன க் கருதுகின்றனர். மனத் தாங்கலுக்கு வேறொரு காரணமும் ஏற்பட்டது. உள்ளூர் சிற்றரசரின் மகளைப் பேய் பிடித்திருந்தது. பேயை ஓட்டுவ

தற்காக யாதவப்பிரகாசரை வரவழைத்தனர். அவர் முயன்று பார்த்தார்—ஆனால், பேயை ஓட்டமுடியவில்லை. இராமாநுஜர் உத்தரவு கொடுத்தால் போவதாய் பேய் கூறியது. இராமாநுஜரை அழைத்தனர். மகிழ்ச்சியுடன் சென்று பேயைப் போய்விடச் சொன்னார். பேய் இளவரசியை விட்டுச் சென்றது. யாதவப்பிரகாசருக்குப் பொறாமை உண்டாயிற்று. தம் மாவணரைச் சூழ்ச்சியால் கொல்லத் திட்டமிட்டதாகச் சொல்லப்படுகிறது. தம் மாணவர்களில் சிலரைக் காசிக்குச் செல்லச் சொன்னார். இராமாநுஜரும் அவர் உறவினரான கோவிந்தரும் இவர்களோடு செல்ல வேண்டியவரானார்கள். இவர்களைக் கங்கையில் தள்ளி மூழ்க வைத்துத் தவறி விழுந்து இறந்துவிட்டதாகச் சொல்ல வேண்டுமென்று மாணவர்கள் சிலரிடம் யாதவப்பிரகாசர் கூறியிருந்தனர். இதையறிந்த கோவிந்தர் செய்தியை இராமாநுஜருக்குத் தெரிவித்தார். இராமாநுஜர் நள்ளிரவில் புறப்பட்டு ஒருவேடனும் வேடுவச்சியும் வழிகாட்ட காஞ்சிக்குத் திரும்பினார். காஞ்சி யடைந்தவுடன் வேடுவச்சி குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டாள். இராமாநுஜர் அருகிலிருந்த கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவருவதற்குள் இருவரும் மறைந்துவிட்டனர். இராமாநுஜர் வரதராஜர் கோயில் கோபுரத்தைக் கண்டார். தமக்கு வழிகாட்டவந்த இருவரும் பெருமாளும் பிராட்டியுமே என்று இராமாநுஜர் உணர்ந்தார். அன்று முதல் திருமஞ்சனத்திற்காக ஒவ்வொரு நாளும் இராமாநுஜர் அந்தக் கிணற்றிலிருந்து ஒரு குடம் தண்ணீர் எடுத்துச் செல்வதைக் கடப்பாடாகக் கொண்டார்.

தம்முடைய தாயாரின் விருப்பத்திற்கிணங்க இராமாநுஜர் காஞ்சியில் இல்லறம் நடத்திவந்தார். வரதராஜப் பெருமாளை வழிபட்டுவந்த திருக்கச்சி நம்பி என்ற அடியாரைப் பின்பற்றி அவர் காட்டிய வழி நின்று பெருமாளை வழிபட்டு வந்தார். ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தாருடைய உலக வாழ்க்கை முடிவுறும் காலம் வந்தது. அவருக்குப்பின் யார் ஆசாரியராக இருக்க வேண்டுமென்று அவர் விருப்பத்தை யுணர்ந்தவர்களாதலால் சீடர்கள், இராமாநுஜரை அழைத்து

வருவதற்காகத் தம்முள் மூத்தவரான பெரிய நம்பியைக் காஞ்சிக்கு அனுப்பினார்கள். காஞ்சியை யடைந்த பெரிய நம்பி இராமாநுஜர் கோயிலிலிருப்பதாக அறிந்து அங்குச் சென்று பெருமாள்முன் பதிகம் பாடினார். இதைக்கேட்ட இராமாநுஜர் அப்பாடலை யார் பாடியது என்று பெரிய நம்பியை வினவ, அவர் ஆளவந்தார் பாடியதாகச் சொன்னார். இராமாநுஜர் அவரைத் தாம் பார்க்க விரும்புவதாகச் சொல்ல பெரியநம்பி அவரை மகிழ்ச்சியுடன் ஸ்ரீ ரங்கம் அழைத்துச் செல்வதாகக் கூறினார். காலைத்திருப்பணியை முடித்துக்கொண்டு பெருமாளிடம் விடைபெற்று இராமா நுஜர் பெரியநம்பியுடன் ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார். ஆனால், இவர்கள் போய்ச்சேர்வதற்குள் ஆளவந்தார் கால மாகிவிட்டார். இறுதிக்கடன்களுக்கான ஏற்பாடுகள் நடை பெற்றுக் கொண்டிருந்தன. ஆசாரியரின் திரு உடலைப் பார்ப் பதற்காக அருகில் சென்றபோது வலதுகையில் மூன்று விரல் கள் மடிந்திருக்கக் கண்டனர். நிறைவேறாத மூன்று விருப் பங்களை இவை குறிப்பவையாகச் சீடர்கள் கூறினார்கள். இவ் விருப்பங்களுள் தலையாயது பிரம சூத்திரத்திற்கு எளிய தெளிவான உரை காணவேண்டுமென்பதாகும். இராமாநு ஜர் இவ்விருப்பங்களை நிறைவேற்றுவதாக உறுதி கூறியதும் விரல்கள் நீண்டன என்று சொல்லப்படுகிறது. இறுதிக் கடன்கள் நிறைவேறியபின் இராமாநுஜர் காஞ்சிக்கு மீண்டு வரதராஜர் கோயில் திருப்பணியைத் தொடர்ந்து செய்ய லானார். கோயிலுக்குச் சென்றபோது ஒரு நாள் தம் வருங் காலத்தைப் பற்றி இறைவன் திருவுள்ளம் யாதென்று அறிந்துகொள்ளப் பெரிதும் விரும்பினார். இறைவன் திரு வுள்ளத்தைக் கண்டுகொள்ளும்படித் திருக்கச்சி நம்பியை வேண்டினார். இறைவன் பதில், பின்வரும் சுலோகமாகக் கிடைத்தது.

ஸ்ரீமான் பரம் தத்வம் அஹம்
மதம் மேபேத பிரபத்திர்
நிரபாய ஹேது



நாவஸ்யகீச ஸ்மிருது அந்தகாலே மோக்ஷா
மஹாபூர்ண இஹார்யவர்ய.
"பரதத்வம் நாமே, பேதமேதர்ஸனம், உபாய
—மும் ப்ரபத்தியே
அந்தி மஸ்மிருதியும் வேண்டா, சரீராவஸா
நத்திலே மோக்ஷம்
பெரிய நம்பி திருவடிகளிலே ஆஸ்ரயிப்பது."

பெருமாள் திருவுள்ளத்தின்படி இராமாநுஜர் பெரிய நம்பியை யடைந்து அவரிடம் உபதேசம்பெற முடிவுசெய்து, ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார். வழியில் மதுராந்தகத்தில் தம்மைக் காண்பதற்காக காஞ்சிக்கு வந்துகொண்டிருந்த பெரிய நம்பியைப் பார்த்தார். இருவரும் உரையாடித் தத்தம் பயணத்தின் நோக்கம் ஒன்றே என்று கண்டனர். இராமாநுஜர் வேண்டுகோளின்படி மதுராந்தகம் இராமர் கோயிலில் வைணவ சித்தாந்தத்தின் மறை பொருள்களைப் பெரியநம்பி உணர்த்தியருளினர். பிறகு இருவரும் காஞ்சியை யடைந்து அங்கே சிலகாலம் தங்கியிருந்தனர்.

இராமாநுஜரின் இல்லறவாழ்க்கை இன்பமானதன்று. அவர் மேற்கொண்ட ஆன்மீய வாழ்க்கைக்கு அவர் மனைவி துணைபுரியாதது மட்டுமன்று—சில வேளைகளில் அவ்வம்மையார் தொல்லையும் விளைத்தனர். பெரிய நம்பியின் மனைவியுடன் சண்டையிடும் அளவுக்கு ஒரு நாள் நிலைமை சீர்கேடடைந்தது. இதைக் கேள்வியுற்ற பெரிய நம்பி ஒன்றும் சொல்லாது காஞ்சியை விட்டுத் தம் மனைவியுடன் புறப்பட்டு ஸ்ரீரங்கம் போய்விட்டார். குரு புறப்பட்டுப்போக நேர்ந்த காரணத்தையறிந்த இராமாநுஜர் தம் மனைவியின் தவறான நடத்தைக்காக உளம்மிக நொந்தார். இந்தச்சமயத்தில் மாமனார் வீட்டிலிருந்து அழைப்புவர, மனைவியைப் பிறந்தகத்திற்கு அனுப்பிவிட்டார். இடர்ப்பாடு நீங்கப் பெற்றவராகத் துறவறத்தை மேற்கொண்டு பற்றற்றவரானார். துறவுணர்ச்சியில் தலை நின்ற அவரை மக்கள் யதிராஜர் (யதிகளுக்கு இறைவன்) என்ற பெயரால் குறிக்கலாயினர்.

இராமாநுஜர் தம்முடன் ஸ்ரீரங்கத்திலிருக்கவேண்டும் என்றும் ஆசார்ய பீடத்திலமரவேண்டும் என்றும் ஆளவந்தாருடைய சீடர்கள் ஆவலுள்ளவர்களாயிருந்தனர். ஆளவந்தாரின் மகனை திருவரங்கப் பெருமாள் அரையர் என்பவரையே இம்முறை தங்களுக்காகப் பரிந்து பேசுவதற்காகக் காஞ்சிக்கு அனுப்பினர். இராமாநுஜர் அவர்களுடன் ஸ்ரீரங்கம் சென்று தம் வாழ்க்கையின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கான தகுதிபெறத் தொடங்கினார். இதற்கு முன்னரே பெரிய நம்பிகளிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்றிருந்தார். ஆளவந்தாருடைய சீடர்களில் ஒருவரான திருக்கோட்டியூர் நம்பியிடம் (கோஷ்டி பூர்ணர்) சென்று இரகசியார்த்தங்களைத் தெரிந்துகொள்ள விரும்பினார். திருக்கோட்டியூர் நம்பி நெடுங்காலம் இசையவில்லை. பிறகு, இராமாநுஜருடைய மெய்யான ஆர்வத்தையும் தகுதியையும் பார்த்து மகிழ்ந்து, கண்டவர்களுக்கன்றி தகுதியுடையவர்களுக்கே மந்திரத்தை யுபதேசிக்கவேண்டுமென்று கட்டளையிட்டு உபதேசித்தருளினார். இராமாநுஜருடைய வாழ்க்கையிலேயே மிக உருக்கமான நிகழ்ச்சி இதனைத் தொடர்ந்தது. மந்திரத்தை வெளிப்படுத்துவதில்லை யென்று குருவிடம் வாக்கு தந்திருந்தும் மந்திரத்தின் பேராற்றலை யுணர்ந்து கட்டுக்கடங்க முடியாதவராகி அனைவரையும் அழைத்து அவர்களுக்கு மந்திரத்தைக் கூறியருளினார். இதனால் திருக்கோட்டியூர் நம்பிக்குஞ் சற்று மனக்குறையேற்பட்டது. சீடரையழைத்து அவர் செயலுக்குக் காரணம் கேட்டார். இராமாநுஜர் கட்டளையை மீறியதற்குரிய தண்டனையை விதிக்கும்படிக் கேட்டார். கட்டளையை மீறியதற்கு நரக தண்டனையென்று அறிந்ததும், பல்லாயிரவர் உய்வதற்காகத் தாம் நரகம் புகத் தயங்கவில்லையென்றும் சொன்னார். இவ்விடையைக் கேட்டு மகிழ்ந்த குரு அவரை வாழ்த்தி வைணவ சித்தாந்தம் அவர் பெயரால் இராமாநுஜ தர்சனம் என்று வழங்கப்பெறும் என்று சொன்னார். பின்னர், திருவரங்கப் பெருமாள் அரையர், திருமலையாண்டான்—இவர்களிடம் திருவாய்மொழியும், திருமலை நம்பியிடம் இராமாயணமும்

கேட்டார். இவ்வாறு ஆளவந்தாரின் சீடர்கள் ஐவர் இராமா நுஜருக்குக் குருவாக இருந்து அவர் செய்வதற்கிருந்த அரிய செயலுக்கு அவரைப் பயில்வித்தனர்.

சிறந்த ஆசாரியரென இராமாநுஜரின் புகழ் பரவுவதாயிற்று. சீடர்கள் பலர் அவரையடுத்தனர். அவர்களுள் தலையானவர் கூரேசர் (கூரத்தாழ்வான் அல்லது ஸ்ரீவத்சாங்க மிஸ்ரர்). இவர் யக்ஞ மூர்த்தி யென்ற அத்வைதியை வாதில் வென்றார். இத்தகைய நிகழ்ச்சிகளின் வழக்கம்போல் யக்ஞ மூர்த்தி இராமாநுஜரின் சீடர் குழாத்தைச் சேர்ந்தார். இராமாநுஜர் இராமேசுவரத்திலிருந்து பத்ரிவரை யாத்திரை செல்லப் புறப்பட்டார். மேற்குக்கரை வழியாகச் சென்று கீழ்க்கரை வழியாகத் திரும்பினார். காஷ்மீரத்தில் உள்ள ஸ்ரீ நகரிலிருந்தபோது, பிரம சூத்திரத்திற்குப் போதாயனர் இயற்றிய போதாயன விருத்தி என்ற உரையின்படியொன்று கிடைத்தது. இராமாநுஜரின் சீடரான கூரேசர் ஒரு முறை அதைப்படித்து மனப்பாட மாக்கிக்கொண்டார். போதாயன விருத்தியை யடியொற்றி இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் என்ற தம் பேருரையை இயற்றினார். கல்விக்கிறைவியாகிய சரஸ்வதியே ஸ்ரீபாஷ்யத்தை யேற்றுக்கொண்டு இராமாநுஜருக்குப் பாஷ்யகாரர் என்ற பெயர் கொடுத்தனர் என்று கூறப்படுகிறது. இவ்வாறு, பிரம்ம சூத்திரத்திற்கு விளக்கமான எளிய உரை காணவேண்டுமென்று ஆளவந்தார் உளங்கொண்ட பெருவிருப்பம் நிறைவேறியது.

இராமாநுஜர் ஸ்ரீரங்கம் திரும்புவதற்குள் முதல் குலோத்துங்கச் சோழன் வைணவர்களைத் துன்புறுத்தியதால் அவர்கள் நிலை இக்கட்டானதாயிருந்தது. சோழ நாட்டைவிட்டுப் போய்விடுவது நல்லது என்று இராமாநுஜரிடம் தெரிவிக்கப் பட்டது. காவேரி கரைவழியாகச் சென்று பிட்டிதேவர் ஹொய்சால நாட்டில் ஏற்படுத்திய இராச்சியத்தில் அடைக்கலம் புகுந்தார். மன்னனுடைய மகளுக்குப் பேய்பிடித்திருந்தது. பேயை ஓட்டுவதற்காக இராமாநுஜரை யழைத்தனர். இராமாநுஜர் வெற்றியுடன் இப்பணியைச் செய்யவே,

சமணனுயிருந்த மன்னன் வைணவனுனன். இராமாநுஜர் சமணர்களோடு பல வாதங்கள் செய்து அவர்களைத் தோல்வி யுறச் செய்து தாம் பரப்பி வந்த சமயத்திற்கேற்ற சூழலை உண்டாக்கினுர். வைணவ சமயத்தை யேற்ற மன்னன் விஷ்ணுவர்த்தன தேவனுடைய உதவி பெற்று மேலு கோட்டையில் இராமாநுஜர் திருநாராயண பெருமாளுக்குக் கோயில் கட்டினுர். பன்னிரண்டு ஆண்டுகள் இராமாநுஜர் இங்கே வாழ்ந்தார்.

இதற்கிடையில் சோழமன்னன் இறந்துவிட்டான். அவனுக்குப்பின் அரசுக்கு வந்த மன்னன் வைணவர்களிடத்தில் பகைமை பாராட்டவில்லை. இச்செய்தி இராமாநுஜருக்கு எட்ட, அவர் ஸ்ரீரங்கத்திற்குச் செல்ல முடிவு செய்தார். ஸ்ரீரங்கத்தில் கோயில் வழிபாட்டைச் செவ்வையாக அமைத்து வைணவ சமயத்திற்காகவும் வைணவ சித்தாந்தத்திற்காகவும் சீடர்கள் தொண்டு செய்வதற்கான பயிற்சி அளித்தார். பல கோயில்களையும் மடங்களையும் கட்டினுர். தென்னுட்டிலுள்ள பல வைணவக் கோயில்களுக்குச் சென்று, சமூக வாழ்வில் கோயில்களுக்குரிய சிறப்பிடத்தை அவை பெறுமாறு செய்தார். வேதபாராயணத்துடன் பிரபந்தங்களையும் கோயில்களில் ஓதும்படிச் செய்தார். சீடர்கள் அவரைப்போல மூன்று திருவுருவங்கள் செய்து அவற்றைப் பிரதிஷ்டை செய்யுமாறு அவரைக் கேட்டுக்கொள்ள அவர்களை மகிழ்விப்பதற்காக அங்ஙனமே செய்தார். இத்திருவுருவங்கள் ஸ்ரீரங்கத்திலும் ஸ்ரீபெரும்பூதூரிலும் திருநாராயணபுரத்திலும் பிரதிஷ்டை செய்யப் பெற்றன. தம் வாழ்க்கையின் இறுதிக்காலம் வருவதுணர்ந்து தாம் ஏற்படுத்திய மடங்களின் பொறுப்பேற்கத் தம் சீடர்களுள் எழுபத்து நால்வரை நியமித்தார். தம் வாழ்க்கையின் நோக்கத்தை நிறைவேற்றியபின் 120-ம் ஆண்டில் (கி. பி. 1137) இராமாநுஜர் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

இராமாநுஜர் கடைப்பிடித்த கொள்கை விசிஷ்டாத்வைதம் எனப்பெறும். உபநிடதங்களும் ஆழ்வார்களுடைய

பாசுரங்களான நாலாயிர திவ்யப்பிரபந்தமும் அதற்கு முதல் நூல்களாகையால் அது உபய வேதாந்தமெனவும் பெயர் பெறும். பாகவத சம்பிரதாயமும் இதற்குக் கருவூலமாக இருந்தது. இராமாநுஜரே, பிரம்ம சூத்திரத்திற்குத் தாம் கண்ட உரை அதற்கு முற்பட்டதாகிய போதாயன விருத்தியைப் பின்பற்றி யெழுதப்பட்டது என்று கூறுகிறார். பிரம்ம சூத்திரத்திற்கு அவர் கண்ட உரை ஸ்ரீபாஷ்ய மெனப் பெறும் என்று முன்னரே கூறினோம். அவரியற்றிய பிற நூல்களுள் பகவத்கீதை உரை, வேதாந்த தீபம், வேதாந்த சாரம், வேதார்த்த சங்கிரகம், கத்யத்ரயம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

விசிஷ்டாத்வைதக் கொள்கைப்படி, ஈஸ்வரன், சித், அசித் என்று மூன்று பொருள்கள் (தத்வத்ரயம்) உண்டு. இவற்றுள் ஈஸ்வரனே ஸ்வதந்திரமான பொருள். ஏனை யிரண்டும் அவனைச் சார்ந்துள்ளவை. இறைவனுக்கும், சித், அசித் ஆகியவற்றிற்கும் உள்ள தொடர்பு, உயிருக்கும் (சரீரி), உடலுக்கும் (சரீரம்) உள்ள தொடர்பைப் போன்றது. உயிர்களுக்கும் உலகத்திற்கும் உயிராக இருப்பவர் இறைவனே. உயிர்களும் உலகமும் இறைவனின் வேறானவை யெனினும் இறைவனினின்றும் பிரிக்க முடியாதவை. இத் தொடர்பு புறத்தொடர்பன்று—பிரிக்கமுடியாமையாகிய அகத்தொடர்பு (அப்ரதக் சித்தி) அப்ரதக் சித்தி என்ற கொள்கை விசிஷ்டாத்வைதத்திற்கு அடிப்படையாக உளது. 'பசு வெண்ணிறமாயிருக்கிறது.' அல்லது, 'தேவதத்தன் ஒரு மனிதன், என்று சொல்லும்போது ஒரு பண்பை (பிரகாரம் அல்லது விசேஷணம்) ஒரு பொருளுக்குரியதாகச் சொல்லுகிறோம். பண்பு—பொருள் அல்லது „விசேஷண—விசேஷ்யம் என்பது பிரிக்க முடியாத தொடர்பை உணர்த்துவதாகும். உயிர்கள், உலகம் என்பவற்றை உடையவராக (விசிஷ்டம்) உள்ள இறைவன் இரண்டற்றவர் (அத்வைதம்.)

மெய்மை, நன்மை, அழகு, இன்பம் என்ற அழியாப் பண்புகளை உடையது என்று உபநிடதங்கள் பேசும் பிரம்மத்

தையே விஷ்ணு—நாராயணர் என்று விசிஷ்டாத்வைதம் கூறு கிறது. எல்லாப் பொருள்களுக்கும் அவர் நிலைக்களன்; எல்லாவற்றையும் அவர் ஆளுபவர்; எவற்றிற்கும் அவர் முடிவான புகலிடம். 'உலகத்தில் உறைபவரும் அதனுள் இருப்பவரும் எவரோ, யாரை உலகம் அறியாதோ, யாரு டைய உடலாக உலகம் உளதோ, யார் உலகததினுள்ளிருந்து இயக்குவிக்கிறாரோ, அவரே ஆத்மா. அந்தர்யாமி, நித்ய மானவர்' என்ற பிருஹதாரண்ய மந்திரத்தை இராமாநுஜர் அடிப்படையாகக் கொள்கிறார். உலகத்திற்கு முழுமுதற் காரணமாக இறைவனிருப்பினும் அவர் உலகத்தின் மாறுதல் களால் தொடக்குறுவதில்லை. இறைவனுக்கு மாறுதல்கள் இல்லை. இறைவனைத் தம் உயிராகக்கொண்டு அவனுள் ளுறையும் பொருள்களே மாறுதல்களுக் குள்ளாகின்றன. இறைவன் உலகில் கலந்தும் உள்ளார்—அதனைக் கடந்தும் உள்ளார். உலகத்தின் அறக்காவலரும், காப்பாளரும் அவரே. மெய்நெறியினின்று பிறழும் உயிர்களைக் காப்பதற் காக அவ்வப்போது அவதாரம் செய்கிறார்: தூய்மை வாய்ந்த திருப்பதிகளில் அர்ச்சாவதாரமாகவும் எழுந்தருளியுள்ளார்.

அசித் என்று கூறப்பெறும் ஜடஉலகம் உயிர்களுக்கு உறைவிடமாக உளது; உயிர்கள் மூலமாக இறைவனுக்கும் உறைவிடமாகிறது. உலகப் படைப்பின்போது, பிரகிருதி யின் முப் பண்புகளான சத்வம், ரஜஸ், தமஸ் என்பவை தோன்றுகின்றன. ஊழிக்காலத்தில் பிரகிருதி அழிவதில்லை; நுண்ணிய நிலையிலுளது. இப்பொருளினின்றும் தோன்றுவது யாதுமில்லை.. காரியம் காரணத்தில் அடங்கிக்கிடக்கிறது (சத்கார்யம்). காரியப்படுவதென்பது மாறுதல் அடைவ தாகும். (பரிணமம்)—மறைந்திருப்பதை வெளிப்படுத்துவ தாகும். எனவே, ஆக்கம், அழிவு என்பன பிரகிருதியின் தோற்ற மறைவுகளேயல்லாமல் முழுப்படைப்பும் முழு அழி வும் அல்ல. எல்லாப் பொருள்களுக்கும் உருவாக அசித்தாகிய காலமிருக்கிறது. பிரகிருதியின் உடன் வைத்து எண்ணக் கூடியதாகிய அது பிரம்மத்தில் அடங்கியுள்ளது. காலத்திற் குட்பட்ட உலகம் உயிரின் இம்மை வாழ்க்கைக்கு உதவுகிறது—

—ஆயினும் தெய்வீகத்தை அடையும் நோக்கத்தில் உயிர் முன்னேற்றம் காணவும் துணைசெய்கிறது.

உயிர் (ஜீவன்) ஆன்மாவின் தன்மையுடையது. அது ஞானமாயிருக்கிறது. ஞானத்தை யுடையதாயிருக்கிறது—ஞான உருவான நிலையில் அது மாறுவதில்லை; ஞானத்தை உடைய நிலையில் அது மாறுகிறது. பண்பாக உள்ள ஞானம் தர்மபூத ஞானம் எனப்பெறும். இறைவனுக்கும் உயிர்களுக்கும் அது பண்பாகும். பண்பான நிலையில் அது இறைவனினின்றும் உயிர்களினின்றும் பிரிக்க முடியாதது. ஆனால், சுருக்கம், பெருக்கம், மாறுதல்களுக்கு நிலைக்களன்—என்பனவற்றால் அது திரவியமுமாகிறது. உயிருக்கும் பண்பாயுள்ள ஞானம் வீட்டு நிலையில் முழுப் பெருக்கம் அடைகிறது. இந் நிலையில் உயிர் அறியக்கூடாத தொன்றுமில்லை. ஆயினும், கட்டுநிலையில் இஞ்ஞானம் மிகுதியாகவோ குறைவாகவோ சுருங்கியிருக்கிறது. இந்நிலையில் உயிர் அதன் கர்மத்திற் கேற்ற உடல் பெற்று விடுதலையடையும் வரையில் ஒன்றன் பின் ஒன்றாகப் பிறப்புகளுக்குள்ளாகிறது. உயிர்கள் எண்ணில. இவை முத்திறப்படும்: (1) கட்டுநிலையேயறியாத உயிர்கள் (நித்யர்) (2) விடுதலைபெற்ற உயிர்கள் (முக்தர்கள்): (3) பிறப்பு இறப்பு என்னும் சுழலில் சிக்கியுள்ள உயிர்கள் (பக்தர்கள்)—மூன்றாவதாகக் கூறப்பட்டவை விடுதலையடையும் வரை மாறி, மாறிப் பிறக்கவேண்டியவையாகின்றன.

கர்மம், ஞானம், பக்தி என்ற படிமுறையில் வீடுபேற்றிற் குரிய நெறியமைந்துள்ளது. தன்னல நோக்கமின்றிக் கடமையைச் செய்வதால் மனம் தூய்மையடைகிறது. இதனால் உயிர் தன்னைப்பற்றிய தியானம் செய்ய முடிகிறது. இத் தகைய தியானத்தால் இறைவனைச் சரீரபாகக் கொண்டுள்ள தன்னைப்பற்றிய ஞானத்தைப் பெறுகிறது. பிறகு அது இறைவன்மீது அன்புகொண்டு அவரைத் தியானம் செய்கிறது. ஞானத்தில் உள்ளவாறே பக்தியிலும் தியானம் உண்டு. எனினும், பக்தியிலுள்ள தியானம் இறைவன்மீது அன்புணர்ச்சியும் சார்புணர்ச்சியும் கொண்ட தியானமாகும்.

பக்தி முதிர்ந்து நிறைவடைந்தால் இறைவன் காட்சி கிடைக்கிறது. ஆனால், உடல் நீங்கின பிறகுதான் முடிவான விடுதலை ஏற்படுகிறது. எனவே, விசிஷ்டாத்வைதக் கொள்கைபடி ஜீவன் முக்தி என்பது கிடையாது. ஞானமும் பக்தியும் பெற்ற பின்னரும் இறுதிவரையில் கர்மத்தைச் செய்யவேண்டும். செய்யவேண்டுவன வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள கர்மாக்கள் மட்டுமல்ல. இறைவனை வேண்டிக்கொள்வதும் வழிபடுவதுமான செயல்களுமாம். எனினும், வீடுபேறடைவதற்குக் கர்மம் நேர்வழியன்று, அது துணையாகமட்டுமமைந்தது.

பக்தி நெறியில் செல்வதற்குப் பிறப்பு போன்றவற்றால் ஏற்படும் தகுதிகள் வேண்டும். விசிஷ்டாத்வைதம் இதற்கு மறுவழியாகப் பிரபத்தி நெறியைக் காட்டுகிறது. பிரபத்தி என்பது இறைவனையே புகலாகக்கொண்டு தன்னை அவனிடம் அறவே ஒப்புவிப்பது. பாகவதத்தின்படி விடுதலைக்கு இது மிகவும் பயன்படக்கூடியது; வேற்றுமை ஒரு சிறிதுமின்றி அனைவருக்கும் பொதுவானது. செய்யவேண்டுவன பின் வருவனவாம்: 'இறைவன் திருவுளத்தின்படி நடக்கவும், அதற்கு மாறாகச் செல்லாதிருக்கவும், அவர் காப்பாற்றுவார் என்ற உறுதி கொள்ளவும், வேறுயாரிடமும் அன்றி அவரிடமே உதவிபெற அவரை நாடவும், அவரிடம் பணிவுடன் தன்னை முழுவதும் ஒப்புவிக்கவும்'—இவைகளைச்செய்ய முடிவு செய்ய வேண்டும். ஞானபக்தி நெறிகளும் பிரபத்திக்கே நம்மைக் கொண்டு செல்கின்றன என்று கருதக்கூடிய முதன்மை வாய்ந்த நெறி பிரபத்தியாகும். தம்மிடம் தஞ்சம் அடைந்தவரை இறைவன் காப்பாற்றுகிறார். அவர்களுடைய உடல் வீழும்போது அவர்கள் நலமந்தமில்லாத நாடாகிய வைகுந்தத்தையடைந்து அங்கே இறைவன்காட்சியில் இடையறா இன்பம் நுகர்கிறார்கள்.

---

# ஸ்ரீ இராமகிருஷ்ணர்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவில் படித்தவர்கள் என்று கருதப்பட்டோர் மேல்நாட்டைப் பின்பற்ற வேண்டுமென்று முடிவு செய்தனர். ஆங்கிலக் கல்வி ஏற்படுத்தப்பட்டது. ஆங்கிலக் கல்வியோடு ஆங்கில நாகரிகம், பழக்க வழக்கங்கள், கருத்துக்கள் வாழ்க்கை முறைகள் ஆகியவை நம் நாட்டில் உடன்புகுந்தன. இப்புதுமுறை கல்வி பயின்றோர், இந்தியா தன் பழங்காலத்தை அடியோடு மறந்தால் தான் முன்னேறமுடியுமென்று நினைத்தனர். ஸர்ஜான் உட்ராப் என்பவரால் ஆங்கிலேயரின் மானச புத்திரர்கள் என்று கூறப்பட்ட இவர்கள் தங்கள் பழைய பண்பாட்டைப் பழித்தொதுக்குவதில் ஆங்கிலேயரையும் சிலவேளைகளில் மிஞ்சி விட்டார்கள். தங்கள் சாத்திரங்களில் பாதுகாக்க வேண்டியது யாதொன்றுமில்லையென உறுதி கொண்டனர். மேல்நாட்டு விஞ்ஞானத்தை அரைகுறையாக உணர்ந்திருந்த அவர்களுக்குத் தங்கள் முன்னோரின் அறிவுரைகள் பிடிக்கவில்லை. சிறப்பாகத் தாந்திரிக நெறியின் வழிபாட்டு முறைகள் அவர்களுக்குப் "பொருளற்ற இழிதகைக் குருட்டு நம்பிக்கைகள் நிறைந்த காமம், கேலிக்குரிய சமயச்சடங்குகள், மாந்திரிகம்" எனத் தோன்றின. ஆனால், தாந்திரிகர்கள் சிலர் தாந்திரிக முறையைத் தவறாகப் பயன்படுத்தினதும் இதற்கு ஓரளவு காரணம் என்று ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. எனவே, ஆங்கிலேய ஆசிரியர்களும் அவர்களுடைய இந்திய சீடர்களும் எவ்வளவு விரைவாக இந்தியா தனது பழைய பண்பாட்டை மாற்றி மேல்நாட்டு நாகரிகத்தை ஏற்றுக்கொள்ளுகிறதோ அவ்வளவுக்கு எதிர்கால வாழ்வுக்கு நன்மையுண்டு என்று உண்மையாகவே நம்பினார்கள்.

இந்திய வரலாற்றின் நெருக்கடியான இந்நிலையில்தான் ஸ்ரீ இராமகிருஷ்ணர் பிறந்தார். நாட்டுப்புறச் சூழலில் பிறந்து இளமையில் அங்கேயே வளர்ந்தார். அவர், நாள்

தோறும் பெருகிவந்த நாகரிகத்தின் புறத்தீமைகளால் மாசுபடாத கன்னித்தாயான இந்தியாவின் குழந்தையாவர். மூலையிலிருந்த ஊரிலிருந்து அப்போது ஆங்கிலப் பேரரசின் தலைநகராயிருந்த கல்கத்தாவுக்கு அவரை வரச்செய்தது இறைவன் திருவுள்ளமே. இங்கேதான் அவர் இந்தியாவின் ரிஷிகளும் மெய்யறிவார்களும் கற்பித்துவந்த ஆன்மீய நெறியில் தவறு ஒன்றுமில்லையென்று விஞ்ஞான உலகுக்கு விளக்கிக் காட்டினார். எந்த வழிபாட்டு முறைகள் உருமாறி மாசுபட்டனவோ அந்த முறைகளையே தூய்மை செய்து நிலைநாட்டினார். அவற்றால் எவ்வளவு சிறந்த பயன் ஏற்படுகின்றது என்பதை மெய்ப்பித்துக் காட்டினார். "உண்மை ஒன்றே. உணர்ந்தோர் அதனைப் பல்வேறு பெயரால் குறிப்பிடுகிறார்கள்." என்ற மறைமொழியின் விளக்கமாக அவர் வாழ்ந்து சமயங்களுக்கிடையே நிகழும் பூசல்கள் பொருளற்றவையென்று காட்டினார்.

வங்காளத்தின் சிறிய ஊர்களிலொன்றான காமார்புகூர் என்ற இடத்தில் 1836—ம் ஆண்டு பிப்ரவரி 18ந்தேதி ஒரு குழந்தை பிறந்தது. இக் குழந்தையே பின்னர் இராமகிருஷ்ணர் என்று உலகுக்குத் தெரியவந்தது. இவர் தோன்றிய குடி நேர்மைக்காகவும் இறைவனிடத்தில் அன்பு செலுத்துவதற்காகவும் மக்களால் மதிக்கப்பட்டு வந்தது. தகப்பனார் க்ஷுதிராம் சட்டோபாத்யாயர் என்பவர் தம் சொந்த ஊராகிய டேரபூர் என்ற இடத்தை விட்டுக் காமார்புகூருக்குக்குடியேறினார். இதற்குக் காரணம் உள்ளூர் நிலக்கிழார் தொகுத்த பொய்வழக்கில் தம்மைப் பொய்ச்சாட்சி கூறச் சொன்னதற்கு இவர் உடன்படாமையேயாம். தாயார் சந்திராதேவி என்பவர் அன்புமிக்கவர். கரவிலாத நெஞ்சத்தவர். வீட்டுவேலைகளை அமைதியுடனும் ஊக்கத்துடனும் செய்துவந்தவர். க்ஷுதிராம், சந்திரா ஆகிய இருவரும் தங்கள் இஷ்டதெய்வத்தை வணங்குவதிலும் தியானத்திலும் பெரிதும் ஈடுபட்டிருந்தனர். மக்களுக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்த இவ்விருவருக்கும் பிள்ளையாக இராமகிருஷ்ணர் பிறந்தார். இத்தெய்வீகக் கு ழ ந் தை பிறக்கப்போவதை

முன்னதாகவே இருவரும் அகக்காட்சியில் கண்டார்கள். க்ஷுதிராம் யாத்திரையாகக் கயாவுக்குச் சென்றிருந்தார். கயாவில் எழுந்தருளியுள்ள கதாதர் (விஷ்ணுவின் திருநாமங்களுள் கதாதர் என்பதும் ஒன்று) கனவில் தோன்றி, ''உன்னை வாழ்த்துகிறேன். நான் உனக்கு மகனாகப் பிறந்து உன் அன்பிற்கு உரியவனாக வளர்க்கப்படுவேன்'' என்று கூறினார். ஏறக்குறைய இதே சமயத்தில் காமார்புகூரில் கோயில்கொண்டுள்ள சிவன் சந்திராதேவிக்குக் காட்சி கொடுத்தார். மூலவர் திருவுருவினின்றும் தெய்வீகஒளி வெளிப்பட்டு எங்கும் பரவித் தம்மைச் சுற்றிலும் வளைத்துக்கொண்டதை அவ்வம்மையார் கண்டு புறப்பொருள் உணர்விழந்து கீழே விழுந்துவிட்டார். இந்நிகழ்ச்சிக்குப் பிறகுதான் வியத்தகு குழந்தை அவர்கள் வயிற்றில் இடங்கொண்டது. குழந்தை பிறந்ததும், பெற்றோர் அதற்குக் கதாதர் எனப்பெயரிட்டனர்.

கதாதரின் குழந்தைப் பருவம் இன்பமாய்க் கழிந்தது. அவ்வூர் மக்களின் கண்மணியாகவும் பிற குழந்தைகளின் ஒப்புயர்வற்ற தலைவனாகவும் கதாதர் இருந்தார். புறத்தோற்றத்திற்கு அவர் விளையாட்டில் விருப்பமுள்ளவராகவும் மகிழ்ச்சியுடையவராகவும் காணப்பெற்றாலும் பலகாலும் அவர் தனித்திருந்து தியானத்தில் நேரம் செலுத்துவதும் புலனாயிற்று. ஆறும் வயதில் அவர் முதல்முறையாகப் பேரின்பத்தில் திளைத்தார். அரிசிப்பொரியைத் துணி முடிப்பில் வைத்துக்கொண்டு வயற்புறமாகப் போய்க்கொண்டிருந்தார். பொரியை மென்றுகொண்டே வானத்தைப் பார்த்தார். பெரிய கருமேகம் எழுந்து வானம் முழுவதும் பரவுவதைக் கண்டார். திடீரென்று மேகத்தின் விளிம்பில் பனிபோன்ற வெண்ணிறக் கொக்குகள் கூட்டமாகத் தோன்றித் தம்தலை மீது பறத்துபோவதைப் பார்த்தார். கருமைக்கு வெண்மை எதிர்ப்புலமாகத் தோன்றியதன் அழகு அவர் நினைவை எங்கேயோ ஈர்த்துச் சென்றது. உடனே உணர்விழந்து கீழே விழுந்துவிட்டார். பெற்றோர் ஆன்மீய உணர்வுடையவர்களாதலால் அவர் நிலையைப் புரிந்துகொண்டனர். இதுமுதல் பரவசநிலை அவருக்கு அவ்வப்போது ஏற்படுவதாயிற்று.

ஏழாம் ஆண்டில் இவர் தந்தையை இழந்தார். அகவாழ்வில் கொண்டிருந்த ஆர்வம் இதனால் மிகுதியாகத்தான் ஆயிற்று. பூரிக்குப் போகும் வழியில் இவருடைய ஊர் இருந்ததால் யாத்திரை செல்லும் பல சாதுக்கள் அங்கே செல்வார்கள். இவர் அவர்களுடைய கூட்டுறவை நாடினார். அவர்கள் கூறுவதைக் கேட்பார்; ஆழ்ந்து நினைத்துப் பார்ப்பார். சிறந்த குறிக்கோளுடையவரானார். வயிற்றுப் பிழைப்புக்காகவே பள்ளிக்கூடங்களில் கல்வி கற்பிக்கப்பட்டதால் இவருக்குப் பள்ளிப்படிப்பில் நாட்டம் செல்லவில்லை. வாழ்க்கையும் இயற்கையுமே இவருக்கு ஆசிரியராயின—புத்தகங்களும் பள்ளிக்கூட அறைகளுமல்ல. ஊர் ஊராகத்திரியும் துறவிகளிடமும் பாடிக்கொண்டு செல்வோரிடமும் இவர் கல்வி கற்றார். தெய்வங்களைப்போல் உருவங்கள் செய்யக் கற்றுக்கொண்டார். ஊர் மக்கள் நடித்த நாடகங்களில் தெய்வங்களாகத் தோன்றி நடித்தார். ஒன்பதாம் ஆண்டில் உபநயனம் ஆன பிறகு குலதெய்வமான இரகுவீரரை வழிபடும் முறையைக் கற்றார். ஆனால், அவர் வழிபாட்டுமுறை பொதுவாக நிகழ்வதற்கு மாறுபட்டதாக இருந்தது. அவர் வழிபட்ட உருவம் உயிரற்ற சிலையாகவன்றி பிரபஞ்சத்தின் உயிருள்ள தலைவனாகக் காட்சி அளித்தது.

க்ஷுதிராம் இறந்தபின், அவர் மூத்த மகனான இராம்குமார் குடும்பப்பொறுப்பையேற்று, கல்கத்தாவிற்கு 1849ம் ஆண்டில் சென்று சமஸ்கிருதப் பள்ளியொன்று தொடங்கினார். அவர் புரோகிதராகவும் கல்கத்தாவில் தொழில் செய்தார். கதாதருக்குப் பதினாறு ஆண்டு நிறைவெய்தியவுடன் புரோகித வேலையில் உதவுவதற்காக இராம்குமார் அவரைக் கல்கத்தாவுக்கு வரவழைத்தார். கல்கத்தாவுக்கு அருகிலுள்ள தக்ஷிணேஸ்வரத்தில் இராணி இராஸ்மணி அம்மையார் புதிதாகக் காளி கோயில் கட்டி இராம்குமாரை வழிபாடு நடத்தச் சொன்னார்கள். கதாதரும் அங்கே சென்று தம் தமையனுக்கு வழிபாட்டில் உதவி செய்தார். கோயில் கும்பாபிஷேகமான பிறகு ஓராண்டுதான் இராம்குமார் உயிரோடிருந்தார். கதாதரின் அகவாழ்க்கையைக் கண்டு அவரிடம்

மதிப்புகொண்ட இராணி இராஸ்மணியும் அவருடைய மரு மகனுன மாதுர்பாபுவும் அவரையே தம் தமையனூர் வேலையை ஏற்றுப் பார்த்துவரச் சொன்னூர்கள்.

தக்ஷிணேஸ்வரர் கோயிலிலும் அதற்கருகில் உள்ள செடி கொடிகள் அடர்ந்துள்ள இடத்திலும் (இன்றும் அவர் கையால் வைத்த பஞ்சவடி அங்கே உளது) இராமகிருஷ்ணர் ஆன்மீய நெறிமுறைகளைப் பயின்றூர்; தம் பிறவியின் நோக் கத்தை நிறைவேற்றினூர். இருபதாம் ஆண்டில் இவர் பூசா ரித் தொழிலை அமைதியான முறையிலும் தக்க சடங்குகளோ டும் தொடங்கினூர். ஆனூல், மிகவிரைவில் ஆன்மீயப் புயலில் சிக்கிப் புதுமையான, மேலான அனுபவங்கள் கைவரப்பெற் றூர். அவருக்குக் காளியின் சிலை கல்லால் செதுக்கப்பட்ட வெறும் உருவமாகத் தோன்றவில்லை. இறைவனுடைய உயிர்ப்புள்ள ஆற்றலாகவே அதைக் கருதி நடந்து வந்தார். அவர் வழிபாட்டு முறையைப் பற்றிய வரலாறுகளில் ஒன்று பின்வருவது :

''அவர் வழிபாட்டிற்கு அமர்ந்தபோது ஒரு மறப்புத் திரை வெளியுலகத்தினின்றும் அவரைப் பிரித்தது. வழிபாட் டிற்காக வழக்கமாக அங்கே வந்து பலர் நிற்பது அவருக்குத் தெரியவே தெரியாது. சில வேளைகளில் அசைவின்றிப் பல மணி நேரம் உட்கார்ந்திருப்பார். தம்முடைய அண்ணுமகன் (இந்தச்சமயத்தில் அவருக்குத் தொண்டு செய்துவந்த ஹ்ரு தயன் என்பவர்) அழைத்தாலும் தன்னுணர்வு பெறுவதில்லை. பொதுவாகப் பூசாரிகள் மனத்தால் பாவிக்கிற நிகழ்ச்சிகளை அவர் மந்திரங்களை உச்சரிக்கும்போது தெளிவாகக் காண் பார்.'' பூசாரிகள் பொதுவாகச் சடங்குகள் செய்யும் முறையை நன்கு அறிந்து கொள்ளுகின்றனர். ஆனூல், வழி பாட்டின் உண்மையான பயனையடைவது அரிதாயிருக்கிறது. இராமகிருஷ்ணர் சடங்குகளில் அக்கறை கொள்ளவில்லை. அவர் செய்தது அகவழிபாடு. உலகீன்ற தாயைக் காண வேண்டுமென்ற பேரவா ஏற்பட்டது. அப்போது இருந்த மனநிலையையும் தாம் பெற்ற முதல் காட்சியையும் தம் சீடர்

களுக்குப் பின்வருமாறு கூறினார்: "தாயைக் காணமுடிய வில்லையே என்று என் நெஞ்சில் பொறுக்கமுடியாத துன்பம் இருந்தது. ஈரத் துணியிலுள்ள நீரை முழுவதும் பிழிவதற்காக அதை முறுக்குவதைப்போல என் நெஞ்சையும் உள்ளத்தையும் யாரோ பிடித்து இவ்வாறு செய்வதாக உணர்ந்தேன். தாயைக் காணாது போகக் கூடும் என்ற எண்ணம் என்னைப் பெரிதும் துன்புறுத்தவே நம்பிக்கையற்று வாடிக் கொண்டிருந்தேன். துன்பப்பட்டு இவ்வாறிருப்பதில் நன்மை இல்லையென்று நினைத்தேன். தாயின் கோயிலிலிருந்த கத்தியைத் திடீரென்று பார்த்தேன். உடனே என் உயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்தேன். பித்துப் பிடித்தவன் போல ஓடி அதனைப் பற்றினேன். உடனே வியக்கத்தக்க காட்சி கிடைத்தது. நான் உணர்விழந்து விழுந்தேன். வெளியுலகில் அப்போது என்ன நடந்தது, எப்படி அன்றும் மறுநாளும் கழிந்தன—என்பவை எனக்குத் தெரியா. ஆனால், உள்ளூர முன் எப்போதும் நுகராத நிறைவான இன்பம் பெருக்கெடுத்தோடிக்கொண்டிருந்தது. தாய் என்ற ஒளியை நேராகக்கண்டேன்."

இதுமுதல் இராமகிருஷ்ணர் கோயிலில் வெறும் விக்கிரகத்தைப் பார்க்கவில்லை. உயிருள்ள தாயையே பார்த்தார். அவர் கூறுவதைப் பார்ப்போம்: "என் உள்ளங்கையைத் தாயின் மூக்கருகில் வைத்து அவர்கள் மெய்யாகவே மூச்சு விட்டுக்கொண்டிருப்பதை யுணர்ந்தேன். இரவில் விளக்கொளியில் நான் உற்று நோக்கினாலும் தாயின் தெய்வீக உடலின் நிழல் கோயில் சுவற்றில் படுவதாகக் காண்பதில்லை. தண்டைகள் ஒலிக்க இளம் பெண்ணைப்போல மகிழ்ச்சியோடு தாய் மாடிக்குச்செல்லும் ஓசையை என் அறையிலிருந்து கேட்டிருக்கிறேன். இதைச் சரிபார்க்க வெளியே வந்தபோது அவர்கள் தம் தலைமுடி கலைந்திருக்க, மெய்யாகவே கோயில் மேல்மாடியில் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு கல்கத்தாவையும் கங்கையையும் மாறிமாறிப் பார்ப்பதைக் கண்டேன்."

கடவுளிடம் அன்பு கொண்டு அதில் மூழ்கியிருந்த இராம கிருஷ்ணரைப் பார்த்து வியப்படைந்த உலகவர் அவருக்குப் பித்துப் பிடித்துவிட்டதென நினைத்தனர். இச்செய்தி அவர் ஊருக்கு எட்டியவுடன் அவர் தாயார் நடுக்கம் கொண்டு அவரை வரவழைத்தனர். உறவினர், நண்பர்கள் இவர்கள் சொற்படி அவருக்குத் திருமணம் செய்ய முடிவு செய்தனர். இராமகிருஷ்ணர் இதை எதிர்க்கவில்லை யென்பது மட்டு மன்று ; வியக்கத்தக்க வகையில் எந்த ஊரில் எந்தக் குடும் பத்தில் பெண் தமக்காகக் காத்திருக்கிறது என்றும் குறிப்பிட் டார். அப்போது அவருக்கு வயது இருபத்து மூன்று. அவர் மணஞ் செய்துகொண்ட சாரதா தேவியாருக்கு வயது ஆறு. பல ஆண்டுகள் சென்றபின் அம்மையார் அவருடனிருப்பதற் காகத் தக்ஷிணேஸ்வரத்திற்கு வந்தபோது, அவருக்குத் தொண்டுபுரிவதும், அவருடைய முதல் சீடராவதும் மிகச் சிலருக்கே கிடைக்கும் பேரின்பத்தில் அவருடன் பங்கு கொள் வதும் எவ்வளவு சிறந்த வாய்ப்பு என்பதை யுணர்ந்தார்கள். இராமகிருஷ்ணரைப் பொறுத்தமட்டில் திருமணத்தால் ஆன் மீயத் துறையில் அவர் செய்து வந்த ஆய்வுகளுக்குத் தடை யொன்றும் நிகழவில்லை. தக்ஷிணேஸ்வரத்திற்கு வந்தபிறகு அவர் செய்த பயிற்சிகள் முன்னிலும் வலுவுற்றன ; இந்து சமயத்தின் எல்லா வழிபாட்டு முறைகளையும் கவர்ந்தன. அவருடைய கடவுட் பசித்தீயைத் தணிப்பதற்குப் பல திறத் தத்தாகவும் பேரளவிலும் ஆன்மீய உணவு வேண்டியிருந்தது. கடவுளிடத்தில் கொள்ளக்கூடிய பெரிய உறவு முறைகள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்றாக இராமகிருஷ்ணர் மேற் கொண்டார். உண்பதால் பசி குறையும். ஆனால், வழக்கத் திற்கு மாறாக அவர் கடவுட் பசி மிகுதியாகத் தானாயிற்று.

ஆன்மீய நெறிகளுள் தாந்திரிக வழிபாட்டு முறைகள் இடர்ப்பாடும் இன்னலும் மிக்கவை. அக வாழ்க்கை சரியாக வளர்ச்சியடையாத காரணத்தால் இந் நெறி பயில்வோர் பலர் புலன்கள் வழிச்சென்று இன்னல்களுக்குள்ளாகிறார்கள். தாந்திரிக முறை 'வெளியே செல்வது' அன்று; அது (அகத்தே) திரும்பும் முறை. இழிவானவற்றிலும் இறைவனுடைய எழி

லைக் காணும் முறையாகும். தூய்மையில்லாதவன் இவ்வழிச் சென்றால் இழிவில் சிக்கி எழிலைப் பார்க்கத் தவறுகிறான். மாசற்ற தூய்மை வாய்ந்த இராமகிருஷ்ணர் தீங்குகளுக் குள்ளாகாமல் தாந்திரிக நெறியில் சென்றார். இந் நெறியைச் செவ்வையாக உணர்ந்த பெண்துறவி யொருவர் இராமகிருஷ் ணருக்கு வழிகாட்டியாக உதவினார். (பெயரொன்றுமில்லாத காரணத்தால் இவ்வம்மையாருக்குப் பைரவிபிராமணி என்ற பெயர் வழங்கலாயிற்று.) இராமகிருஷ்ணர் தாந்திரிகப் பயிற் சியில் வெற்றிகண்ட மாவீரராகி உறுதியான பற்றற்ற நெஞ் சினரானார். தந்திரயோகத்தால் கிடைத்த அரிய சித்திகளை அவர் அறவே வெறுத்தார். தம் உடலுக்கு உண்டான பொன் னொளியையும் அவர் விரும்பவில்லை. "தாயே, இப்புற அழகை எடுத்துக்கொண்டு ஆன்மீயத் தூய்மையான உங்கள் அக அழகை எனக்குத் தருக" என்று வருந்திக் கேட்பதுண்டு. ஆன்மீயப் போர்வை போர்த்திருந்தாலும் புற ஒளி தீமைக்கு நிலைக்களனாகும். வெளிப் பகட்டுகளுக்கு இரையாகாமல் தாந்திரிகப் பயிற்சிகளில் வெற்றி காணமுடியும் என்ற உண் மையை இராமகிருஷ்ணர் பயிலுவோருக்கு மெய்ப்பித்துக் காட்டினார்.

தாந்திரிக முறைகளை வைணவ வழிபாட்டு முறையோடு சேர்த்துப் பின்பற்றியதால் ஈஸ்வரன் அல்லது சகுணப் பிரமத்தோடு பல திறப்பட்ட அனுபவம் இராமகிருஷ்ணருக்கு ஏற்பட்டது. இராமகிருஷ்ணர் இறைவனைப் பல வழியாக நாடி அவரை அடைவதில் வெற்றிகண்டார்.

கௌசலையாகத்தாம் ஆன்மீய மாறுதல் கொண்டு இராமலாலாவைத் தம் குழந்தையாகக் கருதினார். ஹனுமனா கத் தம்மை நினைத்து இராமசந்திரனுடைய தொண்டரானார். பிருந்தாவனத்துக் கோபியாக மாறி எல்லா உயிர்களும் விரும் பத் தக்க கவர்ச்சி வாய்ந்த கிருஷ்ணனுடன் கூடி மகிழ்ந்தார். இவ்வாறு பல்வேறு வழிகளில் இராமகிருஷ்ணர் இறைவனின் பெருஞ் சிறப்பில் இன்பங் கண்டார்.

ஏறி அடையவேண்டிய நிலை மேலும் ஒன்று எஞ்சி நின்றது. இறுதி முயற்சிக்கான முன்ஏற்பாடுகள் உலக அன்னை செய்து வைத்திருந்தார். நிர்க்குணப் பிரம்மம் என்ற உச்ச நிலைக்குச் செல்ல உலக அன்னையின் குழந்தை தகுதி வாய்ந்ததாயிருந்தது. உச்சிக்கு அழைத்துச் செல்லக்கூடிய பயிற்சி பெற்றிருந்த தோதபுரி என்பவர் தோன்றினார். இவர் பல ஆண்டுகளாகச் செய்த அரிய பயிற்சியால் நிர்விகல்பக சமாதி நிலை கைவரப் பெற்றார். இவர் துணைகொண்டு இராம கிருஷ்ணர் நாமரூபம் என்ற திரையைக் கிழித்தார். தமது அகம் அளவற்ற ஆன்மீய ஒளியில் கரைவதைக் கண்டார். இரண்டற்ற பரம்பொருள் அனுபவத்தில் வேறுபாடுகள் கிடையா. அனுபவிப்பவன்—அனுபவிக்கப்படும் பொருள் என்ற வேறுபாடுதானும் கிடையாது. இருமைக்கு இடந்தரும் மொழியில் நாம், இராமகிருஷ்ணர் இந்த அனுபவத்தை அடைந்தார், இவ்வனுபவத்தில் மூன்று நாள் திளைத்திருந் தார். பின்னர் இவ்வுலக உணர்விற்கு மீண்டார் என்று சொல் கிறோம். எனினும், இந்த அத்வைத அனுபவத்தைச் சொற் கள் கொண்டு விளக்கவும் மனத்தைக்கொண்டு அளக்கவும் முடியாது. நம் நிலையிலிருந்து ஜீவன் முக்தர் உடலில் வாழ் கிறார் என்று சொல்கிறோம். முக்தர்-முமுக்ஷு என்ற உறவை யுண்டாக்குவது மாயையின் அருட்சக்தியே.

பரப்பிரம்மத்துடன் அத்வைத அனுபவம் பெற்றபின், இராமகிருஷ்ணர் வியாவஹாரநிலைக்கு மீண்டு புறச் சமயங் களான இஸ்லாம், கிறிஸ்தவம் காட்டும் நெறிகளைப் பயிலத் தொடங்கினார். அத்வைத அனுபவம் அடைந்தவராதலால் எல்லாச் சமயங்களையும் ஒரே முடிவுக்குச் செல்லும் பல வழி களாகக் கருதினார். இப்பொதுமைக் கொள்கை அறிவா ராய்ச்சியில் எழுந்ததன்று. இது அனுபவத்தால் ஏற்பட்ட உறுதி. இஸ்லாம், கிறிஸ்தவம் போன்ற சமயங்கள் கடைப் பிடிக்கும் வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி அவையனைத்தும் கடவுளிடம் கொண்டு செலுத்துகின்றன என்று கண்டார். எல்லாச் சமயங்களும் அறிவுறுத்தும் உண்மை ஒன்றே என் பதற்கு அவர் அனுபவம் மெய்ச்சான்றாக உளது. "நான்

இந்து, இஸ்லாம், கிறிஸ்தவம் ஆகிய எல்லாச் சமய நெறிகளை யும் பின்பற்றியுள்ளேன். இந்து சமயத்தின் கிளை நெறிகளை யும் பின்பற்றியுள்ளேன். பல்வேறு நெறிகளாக இருப்பினும் அவற்றில் செல்வோர் அனைவரும் ஒரே கடவுளைத்தான் அடையமுயலுகின்றனர் என்று கண்டேன். நீங்கள் ஒருமுறை யாவது எல்லாக் கொள்கைகளையும் எற்றுப்பார்க்கவேண்டும் எல்லா நெறிகளிலும் சென்று பார்க்க வேண்டும். எங்குப் பார்த்தாலும், இந்துக்கள்,முகமதியர், பிராமணர், வைணவர் பிறர்—சமயத்தின் பெயரால் சண்டைபோடக் காண்கிறேன். ஆனால், இவர்கள், தாம் கிருஷ்ணன் என்று கூறுபவரே, சிவன் என்றும் சொல்லப்படுகிறார், ஆதிசக்தி, இயேசு, அல்லா என்ற பெயர்களையும் ஏற்கிறார் — ஆயிரம் பெயர்களுடைய அதே இராமராவர்—என்று நினைத்துப் பார்ப்பதில்லை. குளத் தில் பல துறைகள் இருக்கின்றன. ஒரு துறையில் இந்துக்கள் குடங்களில் தண்ணீர் எடுக்கின்றனர்—அதை ஜலம் என்கின் றனர்; மற்றொரு துறையில் முஸ்லீம்கள் தோற்பையில் தண் ணீர் எடுத்து அதைப் பாணி என்கின்றனர்; மூன்றாவது துறை யில் கிறிஸ்தவர்கள், வாடர் (Water) என்கின்றனர். ஆனால், நாம் தண்ணீர் என்பது ஜலமன்று, அது பாணிதான், வாடர் தான் என்று நினைக்கலாமா? என்ன கேலிக்கூத்து! பல பெயர்களுடனிருக்கும் பொருள் ஒன்றே. அப்பொருளையே அனைவரும் தேடுகின்றனர். தட்ப, வெப்பநிலை, மனப்போக்கு பெயர் இவையே மாறுபடுகின்றன. ஒவ்வொருவரும் தத்தம் வழியே செல்லட்டும். உண்மையுடனும், ஆர்வத்துடனும் கடவுளை அறிய விரும்பினால், அமைதியுண்டாவதாக! அவர் கள் கட்டாயம் இறைவனை அடைவார்கள்.

இரண்டற்ற பரம்பொருளை யுணர்ந்தது முதல் இராம கிருஷ்ணர் வாழ்வு நிறைவுற்றது. இருமையற்றதால் அவர் இப்போது அடைந்த அமைதி கலக்கமற்றது. அவர் கூறிய உவமைகளில் ஒன்றைக்கொண்டே அவரை இப்போது முழு வதும் மலர்ந்த பூவிற்கு ஒப்பிடலாம். தேனீக்கள் அமிர்தத் தைப் பருக வந்தன. அவருடைய இறுதிக்காலம் தம்மை அடைந்தோர்க்கு தம் அனுபவத்தை விளக்கிக் கூறுவதிலும்,

சீடர்களைப் பழக்குவதிலும் சென்றது. சீடர்களில் பெரும் பாலோர் இளைஞர்கள். பின்னர் இவர்கள் சுவாமி விவேகா நந்தர் தலைமையில் இராமகிருஷ்ணர் பெயரால் இயக்கம் ஏற் படுத்தி ஆன்மீயப் பொதுமையை உலகெங்கும் பரப்பினர். இராமகிருஷ்ணருடைய ஆர்வம்மிக்க தொண்டர்கள் பின்வரு வோராவர் : பிரம்மசமாஜத்தின் பெருந்தலைவரான கேஷப்சந்திர சென், அவருக்கு உறுதுணையாக நின்ற பிரதாப் சந்திர மசூம்தார், தலைமையாசிரியராக இருந்ததால் இளமை யும் ஆர்வமுடைய பலரைப் பரமஹம்சரின் (இராமகிருஷ்ண ருக்கு இப்பெயர் வழங்கலாயிற்று) அரவணைப்புக்கு ஆட்படுத் திய மஹேந்திரநாத் குப்தா ('M' என்பவர்); துறவு மேற் கொள்ளாத சீடர்களுள் சிறந்த இல்லறத்தவராக இருந்த துர்க்காசரண் நாக்; அக்காலத்தில் தலைசிறந்த நடிகராயிருந்த கிரிஷ்சந்திர கோஷ்.

இராமகிருஷ்ணரின் கவர்ச்சிக்குப் பல இளைஞர்கள் உள் ளானுர்கள். அவரையண்டியதும் அவரை விடாது பற்றிக் கொண்டனர். இவ்விளைஞர்கள் சுவாமி விவேகாநந்தர் தலை மையில் இராமகிருஷ்ணர் சங்கம் ஏற்படுத்திக்கொண்டு பரம ஹம்சரின் வாழ்க்கை நோக்கத்தை நிறைவேற்றத் தொடங் கினர். அவர்கள் பின்னர் செய்யவேண்டிய தொண்டிற்கா கத் தம் இறுதிக்காலத்தில் இராமகிருஷ்ணர் அவர்களைப் பயிற்றுவித்தார். அவர் புகழ் எங்கும் பரவியதால் அவரைக் காண்பதற்காக இடைவிடாது மக்கள் வந்துகொண்டிருந் தனர். அவர்களிடம் அன்பும் பரிவும் கொண்டிருந்ததால் இராமகிருஷ்ணர் தம் உடல் நலிவையும் பொருட்படுத்தாது அவர்கள் தொல்லைகளைப் போக்குவதற்கான அறிவுரையும், ஆறுதலும் தந்தார். முதலில் அவர் தொண்டைப் புண் ணுனது, அப்புண்ணைப் புற்றுநோய் என்று மருத்துவர்கள் முடிவு செய்தார்கள். தூய அன்னை சாரதா மிக்க விழிப்புட னும் அன்புடன் அவருக்குப் பணிவிடை செய்துவந்தார். நரேந்திரரும் (சுவாமி விவேகாநந்தர்) மற்ற இளைஞர்களும் தொடர்ந்து அவருக்குத் தொண்டு செய்தனர். இராமகிருஷ் ணர் உடலைத் துறக்கவேண்டிய நாள் வந்தது. சீடர்களுக்கு

இறுதி அறிவுரை கூறிவிட்டு தெய்வ அன்னையின் பெயரைக் கூறிக்கொண்டு 1886-ம் ஆண்டு ஆகஸ்ட் 15—ம் தேதி அவர் மஹாசமாதியடைந்தார்.

மஹாத்மா காந்தி கூறியதுபோல இராமகிருஷ்ணரின் வாழ்க்கை "நடைமுறையில் சமயம் என்பதன் வரலாருகும்" ரோமா ரோலான் (Romain Rolland) என்பவர், "முப்பது கோடி மக்களின் இரண்டாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த ஆன்மீக வாழ்க்கை நிறைவு" என்று கூறுகிருர். தக்ஷிணேஸ்வரத்தில் வாழ்ந்த இம்மெய்யடியார், கடவுள் ஒருவரே மெய்ப் பொருள். பிற ஏதுமன்று என்ற சிறந்த வேதாந்த உண் மையை மீண்டும் வெளிப்படுத்தியதோடு அமையாது மக்க ளுக்குத் தொண்டு செய்வதால் இவ்வுண்மையை உணரலாம் என்ற வழியையும் காட்டினர். தகுந்த பயிற்சியின்றி நிறை வான மெய்யுணர்வை நாம் எட்டிப்பிடிக்க முடியாது. நிஷ் காமிய கர்மம் அல்லது கர்மயோகம் என்பதே ஆன்மாவைத் தன் குறிக்கோளுக்குக் கொண்டு செலுத்துவதற்கு வேண்டிய சிறந்த பயிற்சியாகும். பிற உயிர்களின் துன்பங்களுக்கும் தேவைகளுக்கும் இரக்கமோ அக்கறையோ கொள்ளாதவன் ஆன்மீய முன்னேற்றம் ஒரு சிறிதும் அடையமுடியாது. உண்மையை நாடுபவன் அடைய விரும்பும் ஆன்மா, குறுகிய தனிப்பட்ட உயிர் அன்று. எல்லாவற்றிலும் ஒன்ருக இருக் கும் ஆன்மா—பொதுவாயுள்ள ஆன்மா பிரிவற்றது. தன் னையே எவற்றிற்கும் மையமாகக்கொள்வது (Egocentricism) ஆன்மீயத்தின் பேரெதிரி. தன்னலமற்ற தொண்டினுலன்றி வேறெவ்வாறு அகங்காரத்தை அடக்கமுடியும்? பிறருக்கு உதவுவதென்பது பெரும்பாலும் பகட்டாகவும் தன்னுடைய பெருமையை முன்னிட்டும் நடைபெறுகிறது. இதனுல் கொடுப்பவனும் நன்மை அடைவதில்லை; பெறுபவனும் நன்மை அடைவதில்லை. வருந்துவோரிடத்தும் தாழ்த்தப் பட்டோரிடத்தும் கடவுளைக்கண்டு வழிபட வேண்டும். தம் குருவினிடம் பெற்ற கடைப்பிடியைச் சுவாமி விவேகாநந்தர், "நான் நம்பும் ஒரே கடவுள் எல்லா உயிர்களின் திரளாகும். முடிவாக நான் தீயவர்களிடத்தும் துன்புறுவோரிடத்தும்

எல்லா இனங்களிலுமுள்ள ஏழைகளிடத்தும் கடவுள் இருக்கிருர் என்று நம்புகிறேன்'' என்று கூறுகிருர்.

இராமகிருஷ்ணர் பரம்பொருளோடு தம்மை ஒன்றுபடுத்திக்கொண்டதால். ''ஓர் உயிருக்காவது நான் உதவி செய்யக்கூடுமெனில் திரும்பத்திரும்பப் பிறக்கவும், நாயாகவேனும் பிறக்கவும் வழியுடையேஞவேன்'' என்று கூறுவதுண்டு. மற்றும் ''தனி ஒருவனுக்கு உதவுவதற்காக இருபதாயிரம் உடலங்களையம் இழப்பேன். தனிஒருவனுக்கு உதவிசெய்வதும் சாலச் சிறந்தது'' என்று அவர் கூறுவதுண்டு. இத்தகைய உயரிய உணர்ச்சி அனைவருக்கும் உரித்தான உபநிடதங்களுக்கும் பிற சாத்திரங்களுக்கும் முழுதும் ஒத்துளது. இவற்றின் பொருளை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற்காக இராமகிருஷ்ணர் போன்ற மெய்யடியார்களிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், அவர் சீடர் கூறியதுபோல, இராமகிருஷ்ணர், ''உபநிடதங்களுக்கு உயிருள்ள விளக்க உரையாக இருந்தார்; உபநிடதங்களின் உள்ளுறை மனித உருவெடுத்தது போன்றவர்; பலதிறப்பட்ட கருத்துக்களையும் இசைத்தவராவர்.''

---

# இரமணமஹரிஷி

காற்றில் பறந்து செல்லும் பறவையின் பாதையைக் காட்டுவது எவ்வாறு அரிதோ அவ்வாறே மெய்யறிவார் செல்லும் நெறியைக்காட்டுவதும் அரிது என்று சாத்திரங்கள் கூறுகின்றன. மக்களில் பெரும்பாலோர் மெல்லவும் மிக்க உழைப்போடும் தங்கள் குறிக்கோளை நோக்கிச்செல்கின்றனர். ஆனால், சிலர் எல்லா உயிர்களுக்கும் பொதுவான தாயகமாகிய பரம்பொருளிடம் நில்லாமல் பறந்து செல்வதில் திறமைமிக்கவராகப் பிறக்கின்றனர். இத்தகைய மெய்யறிவார் ஒருவர் தோன்றும்போது பொதுவாக மக்கள் ஊக்கம் கொள்கின்றனர். அவருக்கு இணையாகச் செல்ல இயலாவிட்டாலும் அவர் முன்னிலையில் உள்ளக்கிளர்ச்சி பெறுகின்றனர்; உலக இன்பங்களைப் போலி எனக்காட்டும் பேரின்பத்தின் சுவையை ஒரு சிறிது பெருகின்றனர். ஸ்ரீ இரமண மஹரிஷி இவ்வுலகில் வாழ்ந்தகாலத்தில் திருவண்ணாமலைக்குச் சென்ற எண்ணற்ற மக்களுக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது. உலகியலின் தொடர்பு ஒருசிறிதுமில்லாதவரும், ஒப்பற்ற தூய்மை வாய்ந்தவரும் என்றுமுள வேதாந்த உண்மைக்குச் சான்ருக விளங்கினவருமான ஒருவரைக் கண்டனர். ஸ்ரீ இரமணரைப் போன்ற மேன்மைவாய்ந்த ஆன்மீயமேதை உலகில் அடிக்கடி தோன்றுவதில்லை. ஆனால் அவ்வாறு தோன்றும்போது மக்கள் அனைவருமே நலம் பெறுகின்றனர்; புதுநம்பிக்கை பிறக்கின்றது.

மதுரைக்குத் தெற்கே முப்பதுமைல் தொலைவில் திருச்சுழி என்ற ஊர் இருக்கிறது. இங்குள்ள பழைய சிவன் கோயில் சுந்தர மூர்த்தி, மாணிக்கவாசகர் என்ற இரு பெரும் தமிழ் அடியார்களின் பாடல் பெற்றது. இந்தப் புனிதமான ஊரில் பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் சுந்தரம் ஐயர் என்ற வழக்கறிஞர் (Uncertified Pleader) அழகம்மாள் என்ற தம் மனைவியோடு வாழ்ந்து வந்தார். இவர்கள் இறைவனிடத்தில் மெய்யன்பும் தொண்டுணர்ச்சியும் மக்களுக்கு

உதவும் பண்பும் வாய்ந்தவர்களாயிருந்தனர். சுந்தரம் ஐயர் தம் பொருள் நிலைக்கும் மீறிய அளவில் உதவும் தன்மை வாய்ந்தவர். இந்து மனைவிக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக வாழ்ந்தவர் அழகம்மாள். 1879-ம் ஆண்டு டிசம்பர் 30-ந் தேதி ஓர் ஆண்குழந்தை பிறந்தது. வெங்கடராமன் என்ற பெயருடைய இக் குழந்தையே பின்னர் இரமணஹரிஷி என்று உலகுக்கு அறிமுகமானது. குழந்தை பிறந்த நாள் இந்துக் களுக்குப் புனிதமான ஆருத்ரா தரிசனத் திருநாள். ஆண்டு தோறும் இத்திருநாளன்று கூத்தப் பிரானுன நடராஜரின் உருவம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. கௌதமர், பதஞ்சலி, வியாக்ரபாதர், மாணிக்கவாசகர் போன்ற மெய் யடியார்களுக்குக் காட்சி கொடுத்த இறைவன் திருவருளைக் கொண்டாடுவதற்காக இத் திருவிழா நடைபெறுகிறது. 1879-ம் ஆண்டு ஆருத்ராவன்று திருச்சுழி கோயிலிலிருந்து நடராஜர் உருவம் தக்க சடங்குகளோடு ஊர்வலமாகச் சென்று மீளும் தருவாயில், வெங்கடராமன் பிறந்தார். வெங் கடராமனுடைய இளமைப் பருவத்தில் குறிப்பிடத் தக்க நிகழ்ச்சி ஒன்றும் இல்லை. இவர் ஏனைய பிள்ளைகளைப்போல் வளர்ந்தார். திருச்சுழியில் தொடக்கநிலைப் பள்ளிக்குச் சென்றார். பின்னர், ஓராண்டு திண்டுக்கல்லில் படித்தார். பன்னிரண்டாம் ஆண்டில் தந்தையை யிழந்தார். குடும்பத் துடன் மதுரையிலிருந்த தகப்பனாரின் தமையனாரான சுப்பை யர் வீட்டுக்குச் சென்றார். அங்கே ஸ்காட் நடுநிலைப் பள்ளிக் கும் பிறகு அமெரிக்கன் மிஷன் உயர்நிலைப் பள்ளிக்கும் சென் றார். படிப்பில் ஊக்கமே கொள்ளாத அக்கறையற்ற மாண வராக இருந்தார். ஆனால், சிறந்த உடல் வலியுடையவரா யிருந்தார். பள்ளி மாணவரும் பிற தோழரும் அவர் உடல் வலிமையைக் கண்டு அஞ்சினர். அவர்களுள் யாருக்காவது எப்போதாவது அவர்மீது குறையிருந்தால் அவர் உறங்கும் போதுதான் குறும்பு செய்யத் துணிவார்கள். இது வழக்கத் திற்கு மாறாக இருந்தது. தூக்கத்தில் நடப்பது ஒன்றும் அவருக்குத் தெரியாது. அவரைத் தூக்கிச் சென்றாலும் அடித் தாலும் அவர் விழித்துக் கொள்ளமாட்டார்.

பதினாறாவது ஆண்டு நிறைவுறும் போதுதான் வெங்கடராமன் தற்செயலாக அருணாசலத்தைப் பற்றிக் கேள்வியுற்றதாகத் தெரிகிறது. ஒரு நாள் முதிய உறவினரொருவர் அவர் வீட்டுக்கு வந்தார். அவர் எங்கிருந்து வந்தார் என்று இவர் கேட்க அவர் அருணாசலத்திலிருந்து வந்ததாகப் பதில்சொன்னார். அருணாசலம் என்ற சொல்லே இவருக்கு மந்திர ஆற்றல் வாய்ந்ததுபோலிருக்கவே பரபரப்புடன் அவ்வுறவினரை, "என்ன அருணாசலத்திலிருந்தா! அது எங்கே இருக்கிறது?" என்று கேட்டார். அருணாசலமென்பது திருவண்ணாமலை எனப் பதில் கிடைத்தது.

இந்நிகழ்ச்சியைப் பற்றி, மஹரிஷி பின்னர் தம் அருணாசல அஷ்டகத்தில் பின்வருமாறு கூறினர் :

"அறிவறு கிரியென வமர்தரு மம்மா
வதிசய மிதன்செயல் லறிவரி தார்க்கு
மறிவறு சிறுவய ததுமுத லருணா
சலமிகப் பெரிதென வறிவினி லங்க
அறிகில னதன்பொரு ளதுதிரு வண்ணா
மலையென வொருவரா லறிவுறப் பெற்று
மறிவினை மருளுறுத் தருகினு லீர்க்க
வருகுறு மமயமித சலமாக் கண்டேன்"

அருணாசலத்தினிடத்து வெங்கடராமன் கருத்தை ஈர்த்த இந் நிகழ்ச்சியை யடுத்து விரைவில் வேறொரு நிகழ்ச்சி ஏற்பட்டது. இதனாலும் இவ்விளைஞரின் உள்ளம் ஆன்மீயத் துறையின் உயர் பொருள்களிடம் திரும்பியது. சைவ நாயன்மார் வரலாறுகளைக் கூறும் சேக்கிழாரின் பெரிய புராணம் தற்செயலாக இவர்கையில்பட்டது. அதைப் படித்துப் பேருவகை கொண்டார். இதுவே அவர் படித்த முதல் சமய நூலாகும். அடியார்களின் வாழ்க்கை அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. தம் நெஞ்சில் அவர் வாழ்க்கைக்கு இசைந்த எதிரொலி உண்டாகக் கண்டார். முன்பயிற்சி ஏதுமின்றி, அடி

யார் வாழ்க்கையின் உயிராக அமைந்த துறவு, அன்புஉணர்ச்சிகளைத் தாமும் பெறவேண்டுமென்று நினைத்தார்.

ஆர்வத்துடன் தமக்கும் உண்டாக வேண்டுமென்று விரும்பிய ஆன்மீய அனுபவம் விரைவிலும் எதிர்பாராத வகையிலும் ஏற்பட்டது. 1896-ம் ஆண்டின் இடைப்பகுதி. அப்போது வெங்கடராமனுக்கு வயது பதினேழு. பெரிய தகப்பனர் வீட்டு மாடியில் தனியாக உட்கார்ந்துகொண்டிருந்தார். தமக்கு வழக்கமான உடல் நலத்தோடுதானிருந்தார். நோய் ஒன்றுமில்லை. திடீரென்று தெளிவான முறையில் இறந்து விடுவோமென்ற அச்சம் பற்றிக்கொண்டது. தாம் இறந்து போகப் போவதாக நினைத்தார். ஏன் இவ்வாறு இவ்வுணர்ச்சி ஏற்பட்டது என்று அவருக்குத் தெரியவில்லை. எனினும், இவ்வுணர்ச்சி தம்மைத் தளரச் செய்யாதிருப்பதற்கு என்ன செய்யவேண்டுமென்பதைப் பற்றி அமைதியாக நினைத்துப் பார்த்தார். தமக்குள்ளே பின்வருமாறு கூறிக்கொண்டார்: "இதோ, சாவு வந்து விட்டது. சாவு என்றால் என்ன? சாவது எது? இந்த உடல் சாகிறது." உடனே தம் கைகால்களை நீட்டி இறந்த உடலுக்கு ஏற்படும் விறைப்புடன் அவர் படுத்துக்கொண்டார். மூச்சை யடக்கி வாயை இறுக மூடிக்கொண்டார். புறத் தோற்றத்திற்கு அவர் உடல் பிணம் போன்றே காணப்பட்டது. இப்போது என்ன நடக்கப் போகிறது என்று மீண்டும் நினைக்கலானார் "உடல் இறந்து விட்டது. சுடுகாட்டிற்கு இதை யெடுத்துச் சென்று சாம்பலாக்கி விடுவர். ஆனால், உடல் இறந்துவிட்டால் நானும் இறந்து விடுவேனா? உடலா நான்? உடல் பேச்சற்றது, அசைவற்றது. ஆனால், உயிரின் முழு ஆற்றலையும் 'நான்' என்பதின் குரலையும் உள்ளே உயிரின் வேறாகக் காண்கிறேன். ஆகையால் உடலைக் கடந்து நிற்கும் உயிர் நான்; உடல் இறக்கிறது. ஆனாலும், அதனைக் கடந்து நிற்கும் உயிர் இறப்பதில்லை. நான் இறவாத உயிர் என்பதே இதன் பொருள்." பகவான் ஸ்ரீ இரமணர் தம்முடைய தொண்டர்களுக்கு உதவுவதற்காக இந் நிகழ்ச்சியைப்பற்றி இவ்வாறு பின்னர்க் கூறியபோது அது தர்க்க முறையில் அமைந்தது

போலத் தோன்றியது. ஆனால், இது அவ்வாறன்று என்று அவரே விளக்கியுள்ளார். இந்த உணர்வு ஒரு நொடியில் ஏற்பட்டது. இவ்வுண்மையை நேரடியாக உணர்ந்தார். 'நான்' என்பது மிக உண்மையான பொருள்; அது ஒன்றே உள் பொருள். சாதல் பற்றிய அச்சம் அடியோடு மறைந்து விட்டது. அதுமுதல் 'நான்' என்பது எல்லா இசைகளுக்கும் அடிப்படையாக இருந்து அவற்றோடு இணைந்து செல்லும் ஆதார சுருதிபோன்று தொடர்ந்திருந்தது. இவ்வாறாக உழைப்பு மிக்க அல்லது நீண்ட சாதனம் ஏது மின்றி ஆன்மீய உச்ச நிலையையடைந்தார். ஆன்மீய உணர்வில் அகங்காரம் அற்றுப்போனது. வெங்கடராமனென்று இதுவரை இருந்து வந்த இளைஞர் மெய்யறிவாராகவும் மெய்யடியாராகவும் நொடிப் பொழுதில் வளர்ந்து விட்டார்.

ஆண்டில் இளைஞரான இவ்வறிவாரின் வாழ்க்கையில் முழு மாறுதல் காணப் பெற்றது. முன்னர் மதித்த பொருள்களை இப்போது ஏற்றமுடையனவாகக் கருதவில்லை. இதுவரை புறக்கணித்து வந்த ஆன்மீய உயிர் பொருள்களே இப்போது அவர் கருத்தை ஈர்த்தன. பள்ளிப் படிப்பு, நண்பர்கள், உறவினர்—இப்போது பொருளாகத் தோன்றவில்லை. தம் சூழலில் அக்கறை அறவே யற்றவரானார். அடக்கம், பணிவு, எதிர்க்காமை, இவையும் பிற அறங்களும் அவருக்கு அணிகளாயின. கூட்டத்திலிராமல் தனித்திருந்து ஆன்மீய தியானத்தில் திளைத்திருக்க விரும்பினார். நாள்தோறும் மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்றார். கடவுளர், அடியார்—இவர்களின் உருவங்களின்முன் நிற்கும்போதெல்லாம் உயர்ந்த இன்பம் பெற்றார். கண்ணீர் ஆறாகப் பெருகிற்று. தாம் பெற்ற புதிய காட்சி இடைவிடாதிருந்தது. அவர் வாழ்க்கை இவ்வாறு மாறுதலடைந்தது.

வெங்கடராமனுடைய தமையனார் இந்தப் பெரிய மாறுதலைக்கண்டார். பலமுறை தம்பியை அக்கறையற்ற யோகி போன்ற நடத்தைக்காகக் கடிந்தார். முன்குறிப்பிட்ட பேரனுபவம் ஏற்பட்டதற்கு ஆறு வாரங்களுக்குப் பின்னர்

ஒரு நெருக்கடி ஏற்பட்டது. 1896-ம் ஆண்டு ஆகஸ்ட் 29-ந் தேதி; படிப்பில் கவலையின்றி யிருந்தமைக்குத் தண்டனையாக ஆங்கில ஆசிரியர் பெயின் (Bain) என்பவரியற்றிய ஆங்கில இலக்கணத்தில் ஒருபாடத்தை மும்முறை எழுதச்சொன்னார். இளைஞரான வெங்கடராமன் இருமுறை எழுதினார். ஆனால், இவ்வேலை அறவே பயனற்றது என்றுணர்ந்து எழுதுவதை நிறுத்திவிட்டார். புத்தகத்தையும் காகிதங்களையும் எறிந்து விட்டு நிமிர்ந்து உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டு அகமுகமாகத் தியானத்தில் நிலைத்துவிட்டார். வெங்கடராமன் செய்வதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த அவர் தமையனார் அவரிடம் சென்று, "இப்படி இருப்பவனுக்கு இதெல்லாம் எதற்கு?" என்று கேட்டார். படிப்பைப் புறக்கணிப்பது போன்ற உலகியலுக்கு மாறான செயல்களுக்காக வெங்கடராமனைக் கண்டிப்பதற்காக இவ்வாறு கேட்டார் என்பது தெளிவு. வெங்கடராமன் பதிலொன்றும் கூறவில்லை. படிப்பதாகவும் பழையபடியேயிருப்பதாகவும் பாசாங்கு செய்வதில் நன்மையில்லையென்று தமக்குத்தாமே ஒப்புக்கொண்டார். வீட்டைவிட்டு வெளியேறுவது என்று துணிவுகொண்டார். போவதற்கு ஓர் இடமும்—அதாவது திருவண்ணாமலை இருப்பது நினைவு வந்தது. ஆனால், தம் எண்ணத்தை வெளியிட்டால் பெரியவர்கள் தம்மைப் போகவிடமாட்டார்கள். இதற்காக ஒரு சிறு ஏமாற்றம் செய்யவேண்டியதாயிற்று. அன்று பகல் நடக்க இருந்த ஒரு தனி வகுப்புக்காகப்(Special class) பள்ளி செல்லவேண்டுமென்று தமையனாரிடம் கூறினார். கீழே பெட்டியிலிருந்து ஐந்து ரூபாய் எடுத்துச்சென்று கல்லூரியில் தம் சம்பளம் கட்டும்படித் தமையனார் கூறினார். வெங்கடராமன் கீழே சென்றார். பெரிய தாயார் உணவு பரிமாறினார்கள். ஐந்து ரூபாய் கொடுத்தார்கள். வீட்டிலிருந்த பூகோளப்படத்தைப் பார்த்தார். திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள இடம் திண்டிவனம் என்று அப்படத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கண்டார். ஆனால், கிளைப்பாதை ஒன்று திருவண்ணாமலைக்கு அமைக்கப்பட்டிருந்தது. பூகோளப்படம் பழையவொன்றாதலால் இப்பாதை அதில் குறிக்கப்படவில்லை.

பயணத்திற்கு மூன்று ரூபாய் தேவையாயிருக்கலாம் என்று கணக்கிட்டுப்பார்த்து இந்தத்தொகையை மட்டும் எடுத்துக் கொண்டு மீதியை ஒரு கடிதத்துடன் தம் தமையனார் எளிதாகப்பார்க்கக்கூடிய இடத்தில் வைத்துவிட்டுத் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார்.

கடிதம் பின்வருமாறு :

நான் என் தகப்பனாரைத் தேடிக்கொண்டு அவருடைய உத்திரவின்படி இவ்விடத்தை விட்டுக் கிளம்பிவிட்டேன். இது நல்ல காரியத்தில்தான் பிரவேசித்திருக்கிறது. ஆகையால், இக்காரியத்திற்கு ஒருவரும் விசனப்படவேண்டாம். இதைப் பார்ப்பதற்காகப் பணமும் செலவு செய்யவேண்டாம்.

இப்படிக்கு

..................

உன் சம்பளத்தை இன்னும்
செலுத்தவில்லை, ரூ. 2
இதோடுகூட இருக்கிறது.

வெங்கடராமன் குடும்பத்திற்கு ஒரு சாபம் இருந்தது. உண்மையில் அது ஒரு வாழ்த்தே. அதாவது ஒவ்வொரு தலைமுறையிலும் ஒருவர் ஆண்டியாக வேண்டுமென்பதே. வெங்கடராமனுடைய முன்னோர்களில் ஒருவர் துறவியொருவருக்குப் பிச்சையிட மறுத்தபோது இச்சாபத்திற்குள்ளானார் என்று சொல்லப்படுகிறது. சுந்தரம் ஐயரின் தகப்பனாரின் தமையனார் துறவியானார். சுந்தரம் ஐயரின் தமையனாரும் துறவியானார். இப்போது வெங்கடராமனின் முறையாக இருந்தது. ஆனால், சாபம் இவ்வாறு நிகழும் என்று ஒருவரும் எதிர்பார்த்திருக்க முடியாது. பற்றற்ற உள்ளத்தினராகி விட்ட வெங்கடராமன் பரிவிராஜகரானார்.

மதுரையிலிருந்து திருவண்ணாமலைக்கு வெங்கடராமன் சென்றது மாபெரும் பயணமாகும். ஏறக்குறைய நண்பகலில்

பெரிய தகப்பனர் வீட்டைவிட்டார். அரை மைல் தொலை விலிருந்த ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்ருர். நல்லகால மாக ரெயில் அன்று குறிப்பிட்ட காலங்கடந்து வந்தது. இன்றேல் அது கிடைத்திருக்காது. பயணச் சீட்டு அட்டவணை யைப் பார்த்துத் திண்டிவனத்திற்கு மூன்ரும் வகுப்புச்சீட்டு 2-13-0 என்று தெரிந்துகொண்டார். சீட்டைப்பெற்று மீதி மூன்று அணுக்களை வைத்துக்கொண்டார். திருவண்ணு மலைக்கே ரெயில் செல்லும் என்று அவருக்குத் தெரிந்திருந்து பயணச்சீட்டு அட்டவணையைப்பார்த்திருப்பாராயின் பயணச் சீட்டு சரியாக மூன்று ரூபாய் என்று தெரிந்திருக்கும். புகை வண்டி வந்தவுடன் அமைதியாக ஏறி அமர்ந்தார். பயணஞ் செய்துகொண்டிருந்த ஒரு மௌல்வி வெங்கடராமனுடன் உரையாடுகையில் திருவண்ணுமலைக்கே புகைவண்டி செல்லு மென்றும் திண்டிவனம் போகாமல் விழுப்புறத்திலேயே வேறு வண்டியில் ஏறலாம் என்றும் கூறினுர்.இது அவருக்குத் தெரியவேண்டிய செய்தி. திருச்சியடைந்தபோது இரவு நேரம். வெங்கடராமனுக்குப் பசி. அரையணுவுக்குப் பேரிக் காய் வாங்கினுர். ஒருதுண்டு சாப்பிட்டதும் பசி புதுமையான வகையில் தீர்ந்துவிட்டது. காலை மூன்று மணிக்குப் புகை வண்டி விழுப்புரம் சேர்ந்தது. திருவண்ணுமலைக்குப் போவ தற்கு எஞ்சியுள்ள பகுதியை நடந்து செல்லும் நோக்கத் துடன் புகைவண்டியை விட்டிறங்கினுர்.

பொழுது விடிந்ததும் வெங்கடராமன் ஊருக்குள் சென் ருர். திருவண்ணுமலைக்குச் செல்லும் வழியாதென்று பார்த் தார். மாம்பலப்பட்டு என்று ஒரு பலகையைப் பார்த்தார். மாம்பலப்பட்டு திருவண்ணுமலைக்குப்போகும் வழியில் உள்ள ஊர் என்பது அவருக்குத் தெரியாது. பசியும் களைப்பும் உண் டாயின. எந்த வழி செல்லவேண்டுமென்று மேற்கொண்டு பார்ப்பதற்குள் ஏதாவது சாப்பிட நினைத்தார். உணவு விடுதிக்குச்சென்று உணவு கேட்டார். நண்பகல் வரையில் உணவுக்காகக் காத்திருக்க வேண்டியதாயிற்று. சாப்பிட்ட பிறகு இரண்டணு கொடுத்தார். உணவு விடுதியின் முதலாளி அவரிடம் எவ்வளவு காசு இருக்கிறதென்று கேட்டார். இரண்

டரையணுதான் இருக்கிறதென்று வெங்கடராமன்கூற மூதலாளி காசு வாங்க மறுத்தார். அவரிடமிருந்துதான் மாம்பலப்பட்டு திருவண்ணுமலைக்குப் போகும் வழியிலுள்ள ஊர் என்று வெங்கடராமன் தெரிந்துகொண்டார். விழுப்புரம் ரெயிலடிக்குத் திரும்பச்சென்று மாம்பலப்பட்டுக்குச்சீட்டு வாங்கினுர். இதற்குப் பணம் சரியாக இருந்தது.

வெங்கடராமன் மாம்பலப்பட்டுக்குப் புகைவண்டியில் வந்துசேரும்போது மாலை வேளை. அங்கிருந்து திருவண்ணுமலைக்கு நடக்கத் தொடங்கினுர். ஏறத்தாழப் பத்து மைல் நடந்தார். பொழுது போய்விட்டது. அரியணிநல்லூர் என்ற இடத்தில் பெரிய பாறை ஒன்றின்மீது கோயில் கட்டப்பட்டிருந்தது. அங்கே சென்று கதவு திறக்கும்வரை காத்திருந்து உள்ளே சென்று மண்டபத்தில் அமர்ந்தார். பேரொளி அவ்விடம் முழுவதும் பரவியிருப்பதாகக் காட்சி கண்டார். அது பௌதிக ஒளியன்று. சிறிதுநேரம் அவ்வொளி பரவியிருந்து பின்னர் மறைந்து விட்டது. தியானத்தில் மூழ்கியவராய் அங்கே அவர் உட்கார்ந்து கொண்டிருக்க, கோயில் அர்ச்சகர்கள் அவரையெழுப்பினர். முக்கால் மைல் தொலைவில் கீழூர் என்ற இடத்திலிருந்த வேறொரு கோயிலில் பூஜை செய்வதற்காக அவர்கள் சென்றனர். வெங்கடராமனும் அவர்களைத் தொடர்ந்து சென்றுர். கோயிலுக்குள் இருக்கும்போது மீண்டும் சமாதியில் மூழ்கினுர். தங்கள் வேலையை முடித்துக் கொண்டு அர்ச்சகர்கள் மீண்டும் அவரையெழுப்பினர். ஆனுல், அவருக்கு உணவுதர மறுத்தார்கள். இந்த ஈரமற்ற செய்கையைப் பார்த்திருந்த கோயில் மேளக்காரன் கோயில் பிரகாரத்தில் தன்னுடைய பங்கை இந்தப் புதுமையான இளைஞருக்குக் கொடுத்துவிடும்படிக் கேட்டுக்கொண்டான். வெங்கடராமன் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டார். அருகிலிருந்த சாஸ்திரி ஒருவர் வீட்டிற்குப் போகச்சொன்னுர்கள். அந்த வீட்டிலிருக்கும்போது அவர் மயக்கமடைந்து கீழே விழுந்துவிட்டார். சிறிது நேரத்தில் தெளிவடைந்து கண் விழித்தபோது தம்மைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் தம்மை

வியப்புடன் பார்த்துக்கொண்டிருக்கக் கண்டார். தண்ணீர் குடித்துச் சிறிது உணவருந்திப் படுத்து உறங்கினூர்.

அடுத்தநாள் காலை வெங்கடராமன் விழித்தெழுந்தார். அன்று ஆகஸ்ட் 31. (1896-ம் ஆண்டு). ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த நாளாகிய கோகுலாஷ்டமி. வெங்கடராமன் பயணப்பட்டுச் சிறிதுநேரம் நடந்து சென்றுர். பசியும் களைப்பும் உண்டாயின. முதலில் உணவு பெற்றுப் பிறகு கூடுமானுல் புகைவண்டியில் திருவண்ணுமலைக்குச் செல்ல நினைத்தார். காதிலணிந்திருந்த தங்கக் கடுக்கன்களை விற்றுத் தேவையான காசு பெறலாம் என்று அவருக்குத் தோன்றியது. ஆனுல், இதை எப்படிச் செய்வது? முத்துகிருஷ்ண பாகவதர் என்பவர் வீட்டின் முன் சென்று நின்றுர். பாகவதரை உணவு கேட்டார். பாகவதர் தம் மனைவியைக் கேட்கச் சொன்னுர். மனைவி நல்லவர். இளவயதினரான சாதுவை வரவேற்று ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த நன்னுளன்று உணவு தருவதில் மகிழ்ச்சி கொண்டார். உணவுக்குப்பின் பாகவதரிடம் மீண்டும் சென்று தம்முடைய யாத்திரையைத் தொடர்ந்து முடிப்பதற்காகக் கடுக்கன்களை நான்கு ரூபாய்க்கு அடகு வைக்க விரும்புவதாகக் கூறினுர். கடுக்கன்கள் ஏறத்தாழ இருபது ரூபாய் பெறுமானமுள்ளவை. ஆனுல், அவருக்கு அவ்வளவு பணம் தேவையில்லை. பாகவதர் கடுக்கன்களைச் சோதித்துப் பார்த்துவிட்டு வெங்கடராமன் கேட்ட தொகையைக் கொடுத்தார். வெங்கடராமனுடைய முகவரியைப் பெற்றுக்கொண்டு கடுக்கன்களை எப்பொழுது வேண்டுமானுலும் மீட்டுக்கொள்ளலாம் என்று சொல்லித் தம் பெயரை ஒரு காகிதத்தில் எழுதித் தந்தார். பாகவதர் வீட்டில் வெங்கடராமன் பகல் உணவு கொண்டார். கோகுலாஷ்டமிக்காகச் செய்திருந்த இனிய பண்டங்கள் கொண்ட ஒரு பொட்டலத்தைப் பக்திவாய்ந்த அம்மையார் கொடுத்தார்.

வெங்கடராமன் அவ்விருவரிடமும் விடைபெற்றுச் சென்றுர். பாகவதர் கொடுத்த முகவரியைக் கிழித்தெறிந்தார். ஏனெனில் கடுக்கன்களை மீட்க அவர் உளங் கொள்ளவில்லை.

ரெயிலடிக்குச் சென்றார். பொழுது விடியும்வரை புகைவண்டி இல்லையாதலால் இரவை அங்கேயே கழித்தார். 1896 செப்டம்பர் முதல் தேதி திருவண்ணாமலைக்குச் செல்லும் புகை வண்டியில் ஏறினார். சிறிது நேரம்தான் பயணம் செய்யவேண்டியிருந்தது. வண்டியை விட்டிறங்கிய உடன் அருணாசலேஸ்வரர் கோயிலுக்கு விரைந்து சென்றார். மூலஸ்தானத்தின் கதவுகள் உட்பட எல்லாக் கதவுகளும் திறந்திருந்தன. கோயிலில் அர்ச்சகர்கள்கூட இல்லை. வெங்கடராமன் மூலஸ்தானத்திற்குச் சென்று தம் தந்தையாகிய அருணாசலேஸ்வரர்முன் நின்று மகிழ்ச்சியில் திளைத்தார். சொல்லொணா இன்பமடைந்தார். மாபெரும் யாத்திரை நிறைவுற்றது. கப்பல், துறை முகத்தையடைந்தது.

இதற்குப்பின் இரமணர் வாழ்க்கை (இனி இரமணர் என்ற பெயரால் இவரைப்பற்றிப் பேசுவோம்) திருவண்ணாமலையிலேயே கழிந்தது. சடங்கு முறையில் இரமணர் சந்நியாசம் மேற்கொள்ளவில்லை. கோயிலை விட்டுத் தெருக்கள் வழியாக நடந்து வரும்போது யாரோ அவரை அழைத்துக் குடுமியை எடுத்துவிடவேண்டுமா என்று கேட்டார்கள். உடனே அதற்கிசைந்தார். ஐயன் குளத்திற்கழைத்துச் சென்றனர். அங்கே குடுமி நீக்கப்பெற்றது. குளப் படியில் நின்று தம்மிடம் எஞ்சியிருந்த பணத்தைத் தண்ணீரில் எறிந்துவிட்டார். பாகவதர் மனைவி கொடுத்த தின்பண்டப் பொட்டலத்தையும் போட்டுவிட்டார். இதையடுத்துத் தம் பூணூலை நீக்கிவிட்டார். கோயிலுக்குத் திரும்பி வரும்போது எதற்காக உடலுக்கு நீராட்டும் செல்வாக்கைத் தரவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கும்போது மழை பெய்து அவரை நனைத்து விட்டது.

இரமணர் முதலில் கோயிலில்தான் இருந்து வந்தார். சில வாரங்கள் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்தார். ஆனால், தியானத்திலிருந்தபோதெல்லாம் சிறுவர்கள் கல்லாலடித்துத் தொல்லை செய்தனர்; மூலை முடுக்குகளிலெல்லாம் இருந்து பார்த்தார். பாதாள லிங்கம் என்ற குகையிலுமிருந்தார்.

தொல்லையின்றிப் பல நாட்கள் தியானத்திலிருப்பார். பூச்சிக் கள் கடிப்பதும் தெரியாமல் அசையாமல் தியானத்திலிருப் பார். குறும்புக்காரச் சிறுவர்கள் அவர் மறைந்திருந்த இடத் தைக் கண்டுபிடித்து இவ் விளந் துறவிமீது கல்லெறியும் தம் விளையாட்டைத் தொடர்ந்து செய்தனர். சேஷாத்ரி சுவாமி என்று ஒரு பெரியவரிருந்தார். அவரைச் சரியாகத் தெரிந்து கொள்ளாதவர்கள் அவரைப் பித்துப் பிடித்தவர் என்று நினைத்தனர். அவர் சில வேளைகளில் இளந்துறவியைப் பாது காத்துச் சிறுவர்களைத் துரத்தி விடுவார். கடைசியில் தொண் டர்கள் சிலர் இரமணரைக் குகையிலிருந்து அவர் அறியாமல் எடுத்துச் சென்று சுப்பிரமணியர் கோயிலருகில் வைத்தனர். இது முதல்—அவரைப் பார்த்துக் கொள்ளுவதற்கு யாராவ தொருவர் இருந்து வந்தனர். அவர் இருப்பிடத்தை அடிக் கடி மாற்ற வேண்டியதாயிற்று. தோட்டங்கள், சோலைகள், கோயில்கள் இவற்றிலெல்லாம் அவரை வைத்திருந்தனர். அவர் பேசுவதே கிடையாது. இது பேசா நோன்பினை மேற் கொண்டதாலன்று. பேசுவதற்கு அவர் உளம் செல்லவில்லை. சில வேளைகளில் வாசிஷ்டம், கைவல்ய நவநீதம் போன்ற நூல்களை—அவர்முன் படிப்பார்கள்.

திருவண்ணாமலைக்கு வந்த ஆறுமாதத்திற்குள் குரு மூர்த் தம் என்ற இடத்திற்கு அங்கிருந்த தம்பிரான் சுவாமியின் அன்பான வேண்டுகோளுக்கிணங்கிச் சென்றார். நாட்கள் செல்லச் செல்ல இரமணர் புகழ் பரவத் தொடங்கியது. அவரைப் பார்ப்பதற்காகவும் யாத்திரைக்காகவும் வரும் மக் களின் எண்ணிக்கை பெருகுவதாயிற்று. ஏறக்குறைய ஓராண்டு குரு மூர்த்தத்திலிருந்த பிறகு சுவாமி (உள்ளூரார் அவரைப் பிராமண சுவாமி யென்ற பெயரால் குறிப்பிட் டனர்) அருகிலிருந்த ஒரு மாந்தோப்புக்குச் சென்றார். இங் கிருந்த போதுதான் அவருடைய பெரிய தகப்பனார் நெல்லி யப்ப ஐயர் என்பவர் அவரிருப்பிடத்தைக் கண்டுபிடித்தார். நெல்லியப்ப ஐயர் மானாமதுரையில் வழக்கறிஞராக (Second grade pleader) இருந்தார். வெங்கடராமன் திருவண்ணாமலை யில் மக்கள் வணங்குவதற்குரிய சாதுவாக இருக்கிறார் என்று

தம் நண்பரொருவர் கூறக் கேட்டுத் திருவண்ணுமலேக்குச் சென்ருர். மாஞமதுரைக்கு இரமணரை அழைத்துச் செல்லத் தம்மாலான மட்டும் முயன்ருர். ஆனல், இளவயதினரான மெய்யறிவார் பதில் கூறவில்லே. வந்தவரிடத்தில் யாதொரு அக்கறையும் காட்டவில்லே. ஏமாற்றமடைந்தவராக நெல்லியப்பஐயர் மாஞமதுரைக்குத் திரும்பிச்சென்ருர். எனினும், இச்செய்தியை இரமணரின் தாயாருக்குத் தெரியப் படுத்திஞர்.

இரமணரின் தாயார் தம் மூத்த மகனுடன் திருவண்ணுமலேக்குச் சென்ருர். அருணசலத்தின் கீழ்ப்புற அடிவாரத்தில் பவழக் குன்று என்னுமிடத்தில் இரமணர் அப்போதிருந்தார். கண்ணீருடன் இரமணரைத் தம்முடன் ஊருக்குத் திரும்பும்படி அழகம்மாள் கேட்டுக்கொண்டார். ஆனல், இரமணர் திரும்பிச் செல்வதாயில்லே. தாயார் அழுதும் முறையிட்டும் அவர் கலங்கவில்லே. பதில் கூருமல் பேசாமலிருந்தார். தாயார் பல நாட்களாக முயன்று பார்ப்பதைப் பார்த்திருந்த ஒரு தொண்டர் சொல்லவேண்டியதை எழுதியாவது காட்டுமாறு வேண்டிக்கொண்டார். படர்க்கை முறையில் மெய் அறிவாரான இரமணர் இவ்வாறு எழுதிஞர்:

"அவரவர் பிராரப் தப்பிரகாரம் அதற்கானவஞங்காங்கிருந்தாட்டுவிப்பான். என்றும் நடவாததென் முயற்சிக்கினும் நடவாது; நடப்பதென்றடை செய்யினு நில்லாது. இதுவே திண்ணம். ஆதலின் மௌனமாயிருக்கை நன்று"

ஏமாற்றத்துடனும் மிக்க கவலேயுடனும் தாயார் மாஞமதுரைக்குத் திரும்பிச்சென்ருர். இந் நிகழ்ச்சிக்குச் சிலகாலத்திற்குப் பிறகு இரமணர் அருணசல மலேமீது சென்று விருபாக்ஷா என்ற குகையிலிருந்தார். இந்தக் குகையில் இப் பெயருடன் ஓர் அடியார் இருந்ததாகவும் பிறகு சமாதியானதாகவும் தெரிகிறது. இங்கேயும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்களுள் சிலர் மெய்ந் நெறியை நாடியவர்கள். இவர்கள் இரமணரை ஆன்மீய அனுபவங்கள் பற்றிய கேள்விகள் கேட்பார்கள். அல்லது, சில செய்திகளேப்பற்றிக் கேட்டுத்

தொல்லையின்றிப் பல நாட்கள் தியானத்திலிருப்பார். பூச்சிக்கள் கடிப்பதும் தெரியாமல் அசையாமல் தியானத்திலிருப்பார். குறும்புக்காரச் சிறுவர்கள் அவர் மறைந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்து இவ் விளந் துறவிமீது கல்லெறியும் தம் விளையாட்டைத் தொடர்ந்து செய்தனர். சேஷாத்ரி சுவாமி என்று ஒரு பெரியவரிருந்தார். அவரைச் சரியாகத் தெரிந்து கொள்ளாதவர்கள் அவரைப் பித்துப் பிடித்தவர் என்று நினைத்தனர். அவர் சில வேளைகளில் இளந்துறவியைப் பாது காத்துச் சிறுவர்களைத் துரத்தி விடுவார். கடைசியில் தொண்டர்கள் சிலர் இரமணரைக் குகையிலிருந்து அவர் அறியாமல் எடுத்துச் சென்று சுப்பிரமணியர் கோயிலருகில் வைத்தனர். இது முதல்—அவரைப் பார்த்துக் கொள்ளுவதற்கு யாராவதொருவர் இருந்து வந்தனர். அவர் இருப்பிடத்தை அடிக்கடி மாற்ற வேண்டியதாயிற்று. தோட்டங்கள், சோலைகள், கோயில்கள் இவற்றிலெல்லாம் அவரை வைத்திருந்தனர். அவர் பேசுவதே கிடையாது. இது பேசா நோன்பினை மேற்கொண்டதாலன்று. பேசுவதற்கு அவர் உளம் செல்லவில்லை. சில வேளைகளில் வாசிஷ்டம், கைவல்ய நவநீதம் போன்ற நூல்களை—அவர்முன் படிப்பார்கள்.

திருவண்ணமலைக்கு வந்த ஆறுமாதத்திற்குள் குரு மூர்த்தம் என்ற இடத்திற்கு அங்கிருந்த தம்பிரான் சுவாமியின் அன்பான வேண்டுகோளுக்கிணங்கிச் சென்றார். நாட்கள் செல்லச் செல்ல இரமணர் புகழ் பரவத் தொடங்கியது. அவரைப் பார்ப்பதற்காகவும் யாத்திரைக்காகவும் வரும் மக்களின் எண்ணிக்கை பெருகுவதாயிற்று. ஏறக்குறைய ஓராண்டு குரு மூர்த்தத்திலிருந்த பிறகு சுவாமி (உள்ளூரார் அவரைப் பிராமண சுவாமி யென்ற பெயரால் குறிப்பிட்டனர்) அருகிலிருந்த ஒரு மாந்தோப்புக்குச் சென்றார். இங்கிருந்த போதுதான் அவருடைய பெரிய தகப்பனார் நெல்லியப்ப ஐயர் என்பவர் அவரிருப்பிடத்தைக் கண்டுபிடித்தார். நெல்லியப்ப ஐயர் மானமதுரையில் வழக்கறிஞராக (Second grade pleader) இருந்தார். வெங்கடராமன் திருவண்ணமலையில் மக்கள் வணங்குவதற்குரிய சாதுவாக இருக்கிறார் என்று

தம் நண்பரொருவர் கூறக் கேட்டுத் திருவண்ணுமலைக்குச் சென்ருர். மானுமதுரைக்கு இரமணரை அழைத்துச் செல லத் தம்மாலான மட்டும் முயன்ருர். ஆனல், இளவயதின ரான மெய்யறிவார் பதில் கூறவில்லை. வந்தவரிடத்தில் யாதொரு அக்கறையும் காட்டவில்லை. ஏமாற்றமடைந்தவ ராக நெல்லியப்பஐயர் மானுமதுரைக்குத் திரும்பிச்சென்ருர். எனினும், இச்செய்தியை இரமணரின் தாயாருக்குத் தெரியப் படுத்தினர்.

இரமணரின் தாயார் தம் மூத்த மகனுடன் திருவண்ணு மலைக்குச் சென்ருர். அருணசலத்தின் கீழ்ப்புற அடிவாரத்தில் பவழக் குன்று என்னுமிடத்தில் இரமணர் அப்போதிருந்தார். கண்ணீருடன் இரமணரைத் தம்முடன் ஊருக்குத் திரும்பும் படி அழகம்மாள் கேட்டுக்கொண்டார். ஆனல், இரமணர் திரும்பிச் செல்வதாயில்லை. தாயார் அழுதும் முறையிட்டும் அவர் கலங்கவில்லை. பதில் கூருமல் பேசாமலிருந்தார். தாயார் பல நாட்களாக முயன்று பார்ப்பதைப் பார்த்திருந்த ஒரு தொண்டர் சொல்லவேண்டியதை எழுதியாவது காட்டு மாறு வேண்டிக்கொண்டார். படர்க்கை முறையில் மெய் அறிவாரான இரமணர் இவ்வாறு எழுதினர்:

"அவரவர் பிராரப் தப்பிரகாரம் அதற்கானவனுங்காங் கிருந்தாட்டுவிப்பான். என்றும் நடவாததென் முயற்சிக் கினும் நடவாது ; நடப்பதென்றடை செய்யினு நில்லாது. இதுவே திண்ணம். ஆதலின் மௌனமாயிருக்கை நன்று"

ஏமாற்றத்துடனும் மிக்க கவலையுடனும் தாயார் மானு மதுரைக்குத் திரும்பிச்சென்ருர். இந் நிகழ்ச்சிக்குச் சிலகாலத் திற்குப் பிறகு இரமணர் அருணசல மலைமீது சென்று விருபாக்ஷா என்ற குகையிலிருந்தார். இந்தக் குகையில் இப் பெயருடன் ஓர் அடியார் இருந்ததாகவும் பிறகு சமாதியான தாகவும் தெரிகிறது. இங்கேயும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்களுள் சிலர் மெய்ந்நெறியை நாடியவர்கள். இவர்கள் இரமணரை ஆன்மீய அனுபவங்கள் பற்றிய கேள்வி கள் கேட்பார்கள். அல்லது, சில செய்திகளைப்பற்றிக் கேட்டுத்

தெளிவு பெறுவதற்காக அவரிடம் சாத்திர நூல்களைக் கொண்டுவருவார்கள். இரமணர் சில வேளைகளில் தம்முடைய விடைகளையும் விளக்கங்களையும் எழுதிக் காட்டுவார். இந்தச் சமயத்தில் இவரிடம் கொண்டுவரப்பட்ட நூல்களுள் ஒன்று சங்கரருடைய விவேகசூடாமணி. இதை இரமணர் பின்னர் எளிய தமிழில் மொழிபெயர்த்தார். எழுத்தறியா எளிய மக்கள் சிலரும் ஆறுதல் பெறவும் ஆன்மீய நெறியில் உதவி பெறவும் அவரை அடைந்தனர். இவ்வாறு வந்தவர்களுள் ஒருவரான எச்சம்மாள் என்பவர் தம்முடைய கணவன், மகன், மகள் ஆகியோரை இழந்து ஆறுதலற்றிருந்தனர். தெய்வம் அவரை இரமணரிடம் செலுத்தியது. சுவாமியை நாள்தோறும் பார்ப்பதையும் அவருக்கும் அவருடனிருப்பவர்களுக்கும் உணவு கொண்டுசெல்வதையும் நெறியாகக் கொண்டார்.

1903-ம் ஆண்டில் வடமொழியில் பேரறிஞரும் மிகச் சிறந்த கல்விமானுமான கணபதி சாஸ்திரி என்பவர் திருவண்ணாமலைக்கு வந்தார். அவர் தவம் புரிந்திருந்த காரணத்தால் கணபதிமுனி என்றும் அவருக்குப் பெயருண்டு. கவிபாடும் ஆற்றலுடைய அவருக்குக் 'காவியகண்ட' என்ற சிறப்புப் பட்டம் இருந்தது. அவருடைய சீடர்கள் அவரை 'நாயனு' என்று விளித்தனர். அவர் சக்தி வழிபாட்டில் சிறந்த ஆற்றல் பெற்றிருந்தவர். வீருபாக்ஷ குகையில் இரமணரைச் சிலமுறை வந்து பார்த்தார். 1907-ம் ஆண்டில் ஒரு முறை தாம் மேற்கொண்ட ஆன்மீயப் பயிற்சிகள் பற்றி அவருக்கு ஐயம் ஏற்பட்டது. மலைக்குச்சென்று தனியாகக் குகையில் உட்கார்ந்திருந்த இரமணரைப் பார்த்து பின்வருமாறு கூறினர் :

"கற்கவேண்டுவன வெல்லாம் நான் கற்றிருக்கிறேன். வேதாந்த சாஸ்திரத்தையும் முழுவதும் படித்திருக்கிறேன். நெஞ்சார ஜபம் செய்திருக்கிறேன். எனினும், இதுவரை தவம் என்பதன் பொருளையுணரவில்லை. ஆகையால் உங்கள் திருவடியில் அடைக்கலம் புகுந்தேன். தவத்தின் பொருளை யெனக்கு உணர்த்தியருளவேண்டும்."

இரமணர் பேசத் தொடங்கி இவ்வாறு பதில் கூறினார் : "நான், நான் என்பது எங்கேயிருந்து புறப்படுகிறதோ அதை கவனித்தால் மனம் அங்கே லீனமாகும். அதுவே தபஸ்.

"ஒரு மந்திரத்தை ஜபம் பண்ணினால் அந்த மந்திரத்வனி எங்கிருந்து புறப்படுகிறது என்று கவனித்தால் மனம் அங்கே லீனமாகிறது. அதுதான் தபஸ்."

கல்வியில் தேர்ச்சி பெற்றிருந்தவருக்கு இது கண் திறப்பாக இருந்தது. மெய்யறிவாரின் அருள் தம்மைச் சூழ்வதை யுணர்ந்தார். அவர்தாம், இரமண மஹரிஷி யென்றும் பகவான் என்றும் வெங்கடராமனை உலகறியச் செய்தார். இரமணரின் புகழைப் பாக்களாக வடமொழியில் இயற்றினார். இரமணரின் அறிவுரைகளை விளக்கி இரமணகீதை யென்ற நூலியற்றினார்.

மானாமதுரைக்குத் திரும்பிய பிறகு அழகம்மாளின் மூத்த மகன் காலமானார். இரண்டு ஆண்டுகளுக்குப்பின் இளைய மகனான நாகசுந்தரம் சில நாட்கள் திருவண்ணாமலையில் வந்திருந்தார். வாரணாசிக்கு யாத்திரை சென்று திரும்பிய பிறகு ஒரு முறையும் திருப்பதிக்குச் சென்று வரும்போது ஒரு முறையும் அழகம்மாள் திருவண்ணாமலைக்குச் சென்றார். இரண்டாம்முறை சென்றபோது அவர் நோயுற்றுப் பல வாரங்கள் உடல் வருத்தமுற்றனர். (Typhoid) காய்ச்சலின் அறிகுறிகள் இருந்தன. அவர்களுக்கு வேண்டுவன செய்து உடல் நலமுறச் செய்வதில் இரமணர் மிகுந்த பரிவு காட்டினார். அவர்கள் நோயைப் போக்கியருளவேண்டுமென்று அருணாசலேஸ்வரரை வேண்டி ஒரு பதிகம் பாடினார். அதன் முதல் பாட்டு வருமாறு :

"அலையா வருபிறவி யத்தனை யுமாற்ற
மலையா யெழுந்த மருந்தே—தலைவா நின்
றாள் கதியாய் வாழுமென்றாய் தாபமாற்றியே
யாள் வதுவு முன்கடனே யாம்."

தம் தாயாருக்கு இறைவன் காட்சி கொடுத்து உலகப் பற்றை நீக்கியருளவேண்டு மென்றும் வேண்டிக்கொண்டார். இறைவன் இருவேண்டுகோள்களையும் கேட்டருளினார் என்று சொல்லத் தேவையில்லை. உடல் நலமுற்று அழகம்மாள் மானுமதுரைக்குத் திரும்பிச் சென்றனர். ஆனால், சிறிது காலத்திற்குள்ளாகவே திருவண்ணாமலைக்கு மறுபடியும் வந்தனர். இதற்குப் பிறகு அவர்களுடைய இளைய மகனான நாகசுந்தரமும் வந்து சேர்ந்தார். நாகசுந்தரத்தின் மனைவி காலமாகிவிட்டார். அவர்களுக்கு ஒரு மகன் உண்டு. 1916-ம் ஆண்டின் தொடக்கத்தில் தம் வாழ்க்கையின் இறுதிக் காலத்தை இரமணருடன் கழிக்க முடிவு செய்து தாயார் திருவண்ணாமலைக்கு வந்தார். தாயார் வந்த பிறகு விருபாக்ஷ குகையை விட்டு மலையில் இன்னும் சற்று உயரத்திலிருந்த ஸ்கந்தாஸ்ரமத்திற்கு இரமணர் சென்றார். தீவிரமான ஆன்மீய வாழ்க்கைக்குரிய பயிற்சி தாயாருக்கு அளிக்கப்பெற்றது. காவியுடையணிந்து ஆஸ்ரமத்துச் சமையலறையின் பொறுப்பை அழகம்மாள் ஏற்றுக்கொண்டார். நாகசுந்தரமும் நிரஞ்சனானந்தா என்ற பெயர் ஏற்றுத் துறவியானார். இரமணரின் தொண்டர்கள் அவரைச் சின்னச் சாமியென்றனர். 1920-ம் ஆண்டில் தாயார் உடல் நலிவுற்று முதுமைக்கியல்பான நோய்களுக்குள்ளானார். அன்பும் பரிவும் காட்டி இரமணர் அவர்களைப் பார்த்து வந்தார். உறக்கமின்றிப் பல இரவுகள் தாயார் அருகில் உட்கார்ந்திருப்பார். 1922-ம் ஆண்டு, மே 19 வைகாசி மாதம் பகுள நவமியன்று அவர் உலக வாழ்க்கை முடிவடைந்தது. சமாதியில் வைப்பதற்காக உடல் மலையடிவாரத்துக்கு எடுத்து வரப்பட்டது. பாலி தீர்த்தக் குளத்திற்கும் தக்ஷிணாமூர்த்தி மண்டபத்திற்கும் இடையில் தென்புறத்தில் சமாதிக்கு இடம் தேர்ந் தெடுத்தனர். சடங்குகள் நடந்துகொண்டிருக்கும்போது இரமணர் பேசாமல் நின்று பார்த்துக்கொண்டிருந்தார். சமாதியருகில் நிரஞ்சனானந்த சுவாமி தம் இருப்பிடத்தை யேற்படுத்திக் கொண்டார். ஸ்காந்தாஸ்ரமத்தில் தொடர்ந்திருந்து வந்த இரமணர் நாள்தோறும் சமாதிக்கு வருவார். ஆறுமாதங்

களுக்குப் பிறகு அங்கேயே வந்து தங்கினார். இது இறைவன் திருவுளக் குறிப்பு—தம்முடைய விருப்பமன்று என்று இரமணர் பின்னர் கூறினார். இரமணாஸ்ரமம் இவ்வாறு தொடங்கப் பெற்றது. சமாதியைச் சுற்றிக் கோவில் எழுப்பி 1949-ம் ஆண்டு கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது. ஆண்டுகள் செல்லச் செல்ல ஆஸ்ரமம் வளர்ச்சியுற்றது. இந்தியாவிலிருந்து மட்டுமன்று—உலகத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் மெய்யறிவாரான இரமணரைப் பார்த்துத் தம்முடைய ஆன்மீய பயிற்சிகளில் உதவி பெறுவதற்காக வந்தனர்.

இரமணருடைய முதல் மேனாட்டுச் சீடர் F.H. ஹம்பிரிஸ் என்பவராவர். 1911—ம் ஆண்டில் வேலூரில் போலிஸ் வேலை பார்ப்பதற்காக இந்தியாவுக்கு வந்தார். ஆன்மீய இரகசியப் பயிற்சிகளில் ஈடுபட்டிருந்ததால் அவர் ஒரு மஹாத்மாவை நாடினார். அவருடைய தெலுங்கு ஆசிரியர் கணபதி சாஸ்திரி அவரை அறிமுகப்படுத்தினார். சாஸ்திரி இரமணரிடம் அவரை அழைத்துச் சென்றார். இவ்வாறு இரமணரிடம் சென்ற அந்த ஆங்கிலேயர் பெரிதும் கவர்ச்சியுற்றார். International Psychic Gazette என்ற இதழில்தாம் முதலில் இரமணரிடம் சென்றதைப்பற்றிப் பின்வருமாறு எழுதினார் :

"குகையை அடைந்தவுடன் அவரடியில் அவர்முன் உட்கார்ந்தோம். ஒன்றும் பேசவில்லை. நீண்ட நேரம் இவ்வாறு உட்கார்ந்திருந்தோம். நான் குறுகிய பற்றுக்களினின்றும் நீங்கியவனாக உணர்ச்சி பெற்றேன். அரைமணி நேரம் மஹரிஷியின் கண்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன். தியான நிலையிலிருந்த அவை மாறாமலிருந்தன. மஹரிஷி விவரிக்கவொண்ணா மேன்மையும், சாந்தமும், தன்னடக்கமும் உள்ள உறுதியின் வலிமையும் வாய்ந்தவர்." இரமணரைப் பார்த்ததால் ஆன்மீயத்துறைபற்றி ஹம்பிரிஸ் கொண்டிருந்த கருத்துக்கள் திருத்தமுற்றன. அவர் அடிக்கடி இரமணரிடம் சென்றார். முன்குறிப்பிட்ட இதழில் மஹரிஷி பற்றிய தம் கருத்துக்களைத் தம் நண்பருக்கு எழுதின கடிதங்கள் வாயிலாக

லாகத் தெரிவித்தார். ஒரு கடிதத்தில் ''அவருடைய புன் முறுவலைவிட அழகியது வேறொன்றையும் கற்பனை செய்து பார்க்க முடியாது'' என்றும், மறுபடியும், '' அவர் முன்னிலையில் எத்தகைய மாறுதல் ஏற்படுகிறது என்பது புதுமையாயிருக்கிறது'' என்றும் எழுதியிருக்கிறார்.

ஆஸ்ரமத்திற்குச் சென்றவர்கள் அனைவருமே நல்லவர்கள் என்று சொல்வதற்கில்லை. சிலசமயங்களில் கெட்டவர்களும்—கெட்ட சாதுக்களும்—சென்றனர். 1924-ம் ஆண்டில் இருமுறை ஆஸ்ரமத்தில்கொள்ளையடிப்பதற்காகத் திருடர்கள் சென்றனர். இரண்டாம்முறை சென்றபோது கொள்ளையடிப்பதற்கு மிகுதியாக ஒன்றுமில்லாததால் மஹரிஷியை அடிக்கவும் துணிந்தனர். தொண்டர்களில் ஒருவர், திருடர்களை அடிக்க மஹரிஷியின் உத்தரவு கேட்டபோது அவர், ''நமக்கு நம் தருமம் இருக்கிறது. அவர்களுக்கு அவர்கள் தருமம். நாம் தாங்கிக்கொள்ள வேண்டும்;பொறுத்துக் கொள்ளவேண்டும். அவர்கள் செயலில் நுழையவேண்டாம்'' என்று சொல்லித் தடுத்தார். ஒரு திருடன் அவரது வலது தொடையிலடிக்க அவர்,''உனக்குத் திருப்தியாகவில்லையென்றால் மறு காலிலும் அடிக்கலாம்'' என்று கூறினார்.அடியைப்பற்றி ஒரு தொண்டர் கேட்டார். இரமணர், '' எனக்கும் பூஜை கிடைத்தது'' என்று சொன்னார். பூஜை என்ற சொல்லுக்கு வழிபாடு என்ற பொருளிருப்பதோடு வேடிக்கைப் பேச்சில்''அடித்தல்'' என்ற பொருளும் உண்டு.

இரமணரிடமும் அவர் சூழலிலும் குடிகொண்டிருந்த இன்னா செய்யாத பண்பு விலங்குகளையும் பறவைகளையும்கூட அவரிடம் நட்பு கொள்ளச்செய்தன. தம்மிடம் வந்த மக்களிடம் காட்டிய பரிவையே அவைகளிடமும் காட்டினார். அவைகளைப்பற்றி பேசும்போது ''அது'' என்று சொல்லாமல் ''அவன்'' ''அவள்'' என்று பேசுவார். பறவைகளும், அணில்களும் அவரைச் சுற்றிலுமுள்ள இடத்தில் கூடுகட்டியிருந்தன. பசுக்கள், நாய்கள், குரங்குகள் இவையனைத்தும் ஆஸ்ரமத்தில் புகலிடம் கண்டன. அவைகளெல்லாம் — சிறப்பாக

இலக்ஷ்மி என்ற பசு—அறிவுள்ளனவாக நடந்துகொண்டன. அவைகளின் நடத்தையை அவர் மிகநன்ருக அறிந்திருந்தார். அவைகளுக்கு ஏற்ற நல்ல உணவு கிடைக்கும்படிச்செய்வார். அவைகளில் ஒன்று இறந்தால் உடலைத் தக்க சடங்குகள் செய்து புதைக்கச் செய்வார்.

ஆஸ்ரமத்தில் வாழ்க்கை நல்லமுறையில் நிகழ்ந்து வந்தது. காலப்போக்கில் ஆஸ்ரமத்திற்கு வருவோர் எண்ணிக்கை மிகுவதாயிற்று. சிலர் சிறிது காலமும், வேறு சிலர் நீண்டகாலமும் தங்கியிருப்பார்கள். ஆஸ்ரமத்தின் பரப்பு மிகுதியாயிற்று. பசுக்களுக்கு இருப்பிடம், வேதபாடசாலை, நூல் வெளியீட்டுப் பகுதி, முறையான வழிபாடு நிகழும் தாயாரின் கோயில் போன்ற புது அமைப்புகளும் துறைகளும் சேர்க்கப்பட்டன. இரமணர் இருப்பதற்காகக் கட்டப்பெற்ற பெரிய அறையில் அவர் பெரும்பாலும் பொழுதெல்லாம் தம்மைச்சுற்றி நிகழ்ந்தவற்றிற்குச் சான்ருக அமர்ந்திருப்பார். ஆனல், அவர் வேலை செய்யாமலில்லை. இலைகள் தைப்பது, காய்கறிகள் திருத்துவது, அச்சாகும் நூல்களில் பிழை திருத்தம் செய்வது, செய்தித்தாள்கள், நூல்கள் படிப்பது, வந்த கடிதங்களுக்கு எழுதவேண்டிய பதில் சொல்வது—இன்னபிற அவர் செய்துவந்தார். எனினும், எவற்றினும் வேருக அவரிருந்தார் என்பது தெளிவு. பல இடங்களுக்கு வரும்படி அவருக்கு எண்ணற்ற அழைப்புக்கள் வரும். ஆனல், திருவண்ணமலையை விட்டு வெளியே சென்றதில்லை. இறுதிக் காலத்தில் ஆஸ்ரமத்தைவிட்டுச் சென்றதில்லை. நாள்தோறும் மக்கள் அவர்முன் உட்கார்ந்திருப்பர்; பேசாமலிருப்பர். சில வேளைகளில் சிலர் கேள்விகள் கேட்பார்கள். சில வேளைகளில் அவர் பதில் சொல்வார். அவர்முன் அமர்ந்து அவருடைய ஒளிமிக்க கண்களைப் பார்த்துக்கொண்டிருப்பதே ஒரு பெரிய அனுபவம். காலச்சக்கரம் சுழலாமல் நிற்பதையும், சொல்லொணு ஓய்வும், அமைதியும் நிலைபெறுவதையும் பலர் அனுபவித்திருக்கின்றனர்.

இரமணர் திருவண்ணமலைக்கு வந்து ஐம்பதாண்டுகள் ஆனவுடன் 1946-ல் ஐம்பதாண்டு நிறைவுவிழா கொண்டா

டப்பெற்றது. 1947 முதல் அவர் உடல் நலம் குறையத் தொடங்கியது. எழுபது ஆண்டுகளுக்குக் குறைவாக இருந் தும், இன்னும் சற்று மிகுதியான வயதுடையவராகவே அவர் காணப்பட்டார். 1948-ம் ஆண்டின் இறுதியில் இடதுகை முட்டியில் ஒரு சிறு கட்டி புறப்பட்டது. அது பெரிதாக வள்ரவே ஆஸ்ரமத்தில் இருந்த மருத்துவர்கள் அதை அறுத் தெடுத்தனர்.ஒரு மாதத்திற்குள் மீண்டும் கட்டி எழும்பியது. சென்னையிலிருந்து இரணசிகிச்சை மருத்துவர்கள் சென்று அதை அறுத்தெடுத்தனர். ஆறுமல் மீண்டும் கட்டி புறப் பட்டது. ஆராய்ந்து பார்த்ததில் அது புற்றுநோய் வகையைச் சேர்ந்தது எனத் தெரியவந்தது. கையைத் துண்டிக்கலாம் என்று மருத்துவர்கள் கூறினர்கள். இரமணர் புன்சிரிப்புடன், ''அஞ்சவேண்டுவதில்லை. உடலே ஒரு நோய்தான். அது இயற்கை முடிவு அடையட்டும். எதற்காக அதனைச் சிதைப்பது? நோயுற்ற இடத்தில் கட்டு கட்டினுல் போதும்'' என்று கூறினர். பின்னும் இருமுறை அறுக்க வேண்டியதாயிற்று. ஆனுல், கட்டி மறுபடியும் புறப் பட்டது.. நாட்டு மருத்துவமும், ஹோமியோபதி முறையும், கையாளப்பெற்றன. ஆனுல், நோய் தீர்வதாயில்லை. இரம ணர் சிறிதும் கவலை கொள்ளவில்லை. நோயைப் பொருட் படுத்தவேயில்லை. சான்ருக அமர்ந்து நோய் உடலை அரித்துச் செல்வதைப் பார்த்துக்கொண்டிருந்தார். ஆனுல், அவர்கண் கள் எப்போதும்போலவே ஒளியுடன் விளங்கின. அனைவருக் கும் அவர் அருள் சுரந்தது. பெருங்கூட்டமாக மக்கள் வந்த னர். தம்மைப்பார்க்க அவர்களை விடும்படி வற்புறுத்தினர். இரமணர் தம்முடைய பேராற்றலால் நோயைப் போக்க வேண்டுமென்று தொண்டர்கள் விரும்பினர்.சிலர் தங்களுக்கு இவருடைய பேராற்றலால் இத்தகைய நன்மை ஏற்பட்டது என்று நினைத்தனர். தம்முடைய நோய்க்காக வருந்துவோ ரிடம் இரக்கங்காட்டி, 'பகவான்' என்பது உடலன்று என்ற உண்மையை வற்புறுத்தினர் ; ''இவ்வுடலைப் பகவானென்று கூறி அவருக்கு நோயிருக்கிறதென்கின்றனர். என்ன பரி தாபம் ! பகவான் தங்களை விட்டு எங்கோ சென்று விடுவார்

என்று கவலையுறுகின்றனர். பகவான் எங்கே போகக்கூடும்? எவ்வாறு போகக்கூடும்?''

முடிவு 1950-ம் ஆண்டு ஏப்ரல் 14-ந் தேதி ஏற்பட்டது. அன்று மாலை வந்த அன்பர்களுக்கெல்லாம் அவர் காட்சி கொடுத்தார். ஆஸ்ரமத்திலுள்ளவர்களுக்கெல்லாம் முடிவு ஏற்படப் போவதைப் பற்றித் தெரியும். அருணாசலசிவ என்ற பல்லவியை உடைய அக்ஷர மணமாலையைப் பாடிக் கொண்டிருந்தனர். தொண்டர்கள் அவரை நிமிர்ந்து உட்காரும்படி வேண்டினர். ஒளி மிக்க அருட்கண்களைச் சிறிது நேரம் திறந்தார். புன்சிரிப்பு இருந்தது. ஆனந்தக் கண்ணீர் ஒரு துளி கண்ணிலிருந்து பெருகி வீழ்ந்தது. 8—47 மணிக்கு மூச்சு நின்று விட்டது. இறுதித் திணறல், இழுப்பு போன்ற இறப்பதற்கான அறிகுறிகள் ஒன்றுமில்லை. அதே வினாடியில் வால் நட்சத்திரம் ஒன்று மெதுவாக வானில் படர்ந்து தூய மலையாகிய அருணாசலத்தின் உச்சியை அடைந்து பிறகு மறைந்து விட்டது.

இரமண மஹரிஷி எப்போதாவது அரிதாகத்தான் எழுதுவார். குறைந்த அளவில் உரை நடையாகவோ பாட்டாகவோ எழுதியது அடியார்களுடைய குறிப்பிட்ட வேண்டுகோளுக்கிணங்கியேயாகும். ஒரு முறை அவர், “நூலோ, பாக்களோ, எழுத வேண்டுமென்று எனக்குத் தோன்றுவதில்லை. ஏதாவதொரு குறிப்பிட்ட நிகழ்ச்சியுடன் தொடர்புடையவர் யாராவது கேட்டுக் கொண்டபோது எழுதியவையே எல்லாப் பாக்களும்'' என்று கூறினார். அவர் நூல்களுள் முதன்மையானது உள்ளது நாற்பது என்பதாகும். வேதாந்தத்தின் பிழிசாறாக இருப்பது உபதேசசாரம் என்னும் செய்யுள் நூல். அருணாசலபஞ்சகம் என்று ஐந்து பாக்களியற்றினார். சங்கரர் இயற்றிய நூல்களுள் விவேக சூடாமணி, ஆத்ம போதம் போன்றவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தார். அவர் எழுதியது பெரும்பாலும் தமிழிலாகும். எனினும் ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம் இவற்றிலும் எழுதியுள்ளார்.

இரமணருடைய மெய்யுணர்வுக் கொள்கையும் அத்வைத வேதாந்தத்தைப் போலத் தன்னையுணர்தல் என்னும் நோக்கம் கொண்டதேயாம். இக்கொள்கை அறிவுறுத்தும் முதன்மையான நெறி ஆன்மாவைப் பற்றிய ஆராய்ச்சியாகும். " நான் யார் ?" என்பதைத் தெரிந்து கொள்வதாம். பொதுவாக 'நான்' என்பதன் எல்லை மாறுவதாயும் பல திறப்பட்ட கூறுகளை உள்ளிட்டதாகவும் உளது. ஆனால். இவையெல்லாம் 'நான்' அல்ல. எடுத்துக்காட்டாக உடலை 'நான்' என்கிறோம். 'நான் பருத்துள்ளேன்.' 'நான் இளைத்துள்ளேன்' என்கிறோம். இது தவறான வழக்கு என்று காண்பதற்கு நீண்ட காலந் தேவையில்லை. உடல் அறிவற்றதாதலின் தானே ' நான் ' என்று சொல்ல முடியாது. அறியாமை மிக்கவனும் ' என் உடல் ' என்பதன் பொருளையுணர்கிறான். ஆனால், அகங்காரத் தத்துவத்தோடு 'நான்' என்பதை ஒன்றாகக் கருதும் பிழையை நீக்குவது எளிதன்று. ஆராய்வது அகங்காரத்துவமானதால் தவறான ஒற்றுமையை நீக்குவ்தற்கு அது தன்னையே மாய்த்துக் கொள்ள வேண்டும். இது எளிதான செயலேயன்று. ஞானத்தீக்கு வேள்விப் பொருளாக அகங்காரத்தைத் தருவது தான் மிக உயர்ந்த வேள்வியாகும்.

ஆன்மாவை அகங்காரத்தினின்றும் வேறாக காண்பது எளிதன்று என்று கூறினோம். ஆனால், இது முடியாத செயலன்று. உறக்க நிலையை ஆராய்ந்து பார்த்தால் நாம் அனைவரும் இவ்வேறுபாட்டுணர்வைப் பெறலாம். உறக்கத்தில் ' நாம் ' இருக்கிறோம். ஆனால், அகங்காரம் வெளியேறி வருகிறது. அகங்காரம் இங்கே தொழில்படுவதில்லை. எனினும், ' நான் ' என்பது அகங்காரம், புறப்பொருள்கள் இவைகளில்லையென்பதற்குச் சான்றாக உளது. ' நான் ' என்பது அங்கில்லையானால் உறக்கத்தினின்றும் விழித்தெழும்போது ' நன்றாக உறங்கினேன் எனக்கொன்றுமே தெரியாது' என்று சொல்ல முடியாது.

ஆக, 'நான்'—என்று இரண்டுண்டு. ஒன்று பொய்யான ' நான் '—இது தான் அகங்காரம். உண்மையான ' நான் '

என்பது தான் ஆன்மா. ‘ நான் ’ என்பது அகங்காரத்தோடு இரண்டற்று வலிவாக நிற்பதால் அகங்காரத்தை அதன் முக முடியின்றிப் பார்ப்பது மிக அரிது. மேலும் வியவஹார அனுபவமெல்லாம் அகங்காரத்தை மையமாகக் கொண்டு எழுவதாகும். உறக்கத்திலிருந்து விழித்தெழும்போது அகங்காரம் எழுகிறது. அதனுடன் உலகம் முழுவதும் தோன்றுகிறது, ஆகையால் அகங்காரம் முதன்மை வாய்ந்ததாயும் எதிர்க்க முடியாததாயும் தோன்றுகிறது.

ஆனால், இது உண்மையில் வலிவற்ற கோட்டையாம். ஆராயத் தொடங்கினால் இது இடிந்து விழக் காண்போம். எனினும், இவ்வாராய்ச்சி செய்வதற்குக் கூரிய அறிவு வேண்டும். அறிவற்ற பொருளின் (சடத்தின்) நுட்பங்களை உணர்வதற்குத் தேவையான கூர்மையைவிட மிகுதியான கூர்மை வேண்டும். ஒரு முகப்பட்ட அறிவைக் கொண்டுதான் உண்மையைக் காண முடியும். (த்ருஸ்யதே து அக்ர்யயா புத்யா) அறிவும் மெய்யுணர்வு தோன்றுவதற்கு முன் ஒடுங்க வேண்டும் என்பது உண்மையே. ஆனால், அதுவரை அறிவு ஆராய வேண்டும்—அஞ்சாது ஆராய வேண்டும்—மெய்யுணர்வு சோம்பேறிகளுக்கன்று என்பது உண்மைதான் !

‘நான் யார்?’ என்னும் ஆராய்ச்சி மனத்தின் தன்மையை உணர்வதற்காக மனமே செய்யும் முயற்சி என்று கருதக் கூடாது. இவ்வாராய்ச்சியின் முதன்மையான நோக்கம் மனம் முழுவதையும் அதன் பிறப்பிடத்தில் குவிய வைப்பதாம். பொய்யாகிய ‘ நான் ’ என்பதன் பிறப்பிடம் ஆன்மா. ஆன்ம ஆராய்ச்சியில் மன ஓட்டத்தோடு செல்லாது அதை எதிர்த்துச் சென்று மனத்தின் தொழிற்பாடுகளைக் கடக்க வேண்டும். பொய்யாகிய ‘ நான் ’ என்பதை அதன் பிறப்பிடத்திற்குக் கொண்டு செலுத்தினால் அது மறைந்து விடுகிறது. ஆன்மா தன் முழு ஒளியுடன் விளங்குகிறது. இவ்விளக்கமே தன்னையுணர்தல், வீடுபேறு என்று கூறப்படுகிறது.

உடல் நீங்குதல்—நீங்காமலிருத்தல்—இவை வீடு பேறுக்கு எவ்வகையிலும் தொடர்புடையனவல்ல. மஹரிஷி

யின் வாழ்க்கையில் கண்டது போல, உடல் தொடர்ந்து இருக்கலாம், உலகம் உள்ளது போலத் தோன்றலாம். ஆனால், உண்மையில் ஆன்மாவை உணரும்போது இவற்றால் மாறுதல் ஒன்றும் ஏற்படுவதில்லை. ஆன்மாவை உணர்ந்தவருக்கு உடலும் இல்லை—உலகமும் இல்லை. என்றும் உளதாய், அறிவாய், ஒப்புயர்வற்ற இன்பமாய் உள்ள ஆன்மாவே உளது. இத்தகைய அனுபவம் நமக்கு முழுவதும் புதிதானதன்று. புறஉலகப் பொருள்களையும் கனவாகிய அக உலகத்தையும் உணராத உறக்கத்தில் இவ்வனுபவம் ஏற்படுகிறது. ஆனால், இவ்வனுபவம் அறியாமை என்ற திரையால் மூடப்படுகிறது. இதனால்தான் நாம் கனவு உலகத்தின் கற்பனைகளுக்கும் விழிப்புலகத்திற்கும் மீள்கிறோம். அறியாமை நீங்கும்போதுதான் இருமைக்கு மீளாத நிலை உண்டாகிறது. இதை உண்டாக்க உதவுவதுதான் வேதாந்தத்தின் நோக்கம். நம்மில் மிக எளியவர்களுக்கும் நம்பிக்கை உண்டாக்கிக் கலக்கத்தினின்றும் விடுதலை பெறச் செய்வதே மஹரிஷி போன்ற சிறந்த வழிகாட்டிகளின் உயர் தனிப் பெருமையாகும்.





# LIVES OF SAINTS

By

Dr. T. M. P. Mahadevan.

மெய்யடியார்களின் (Saints) வாழ்க்கையைப் பற்றியும், அறிவுரைகளைப் பற்றியும் சிந்திப்பது நமது சொந்த வாழ்க்கையை உயர்த்துவதற்கும், வீடு பெறுவதற்கும் சக்தி வாய்ந்த சாதனமாகும். முழு உலகத்திற்கும் சொந்தமான மனித குல ஆத்மீக விற்பன்னர்களாகிய இவர்களை ஆராயவும், விளங்கிக் கொள்ளவும் இந்நூல் ஒரு வேட்கையை உண்டு பண்ணும்.

---

தென் மொழிகள் புத்தக டிரஸ்டின்
ஆதரவில் பதிப்பிக்கப் பெற்றது.

---

இது ஒரு
ஜெமினி வெளியீடு









